# புதுக்கோட்டை மாவட்ட மக்கட் பெயர்கள் காலந்தோறும்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காகப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**க. சித்ரா**

(பதிவு எண்: 374)

நெறியாளர்

**பேரா. முனைவர். மு. பாண்டி**






**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசியத் தர நிர்ணயக் குழுவின் மறுதர மதிப்பீட்டில் "ஏ" தகுதி பெற்றது)

காரைக்குடி-630 003.

தமிழ்நாடு-இந்தியா


**ஜுலை - 2016**

**பேரா.முனைவர் மு.பாண்டி**
பேராசிரியர் & தமிழ்த்துறைத் தலைவர்,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630003. நாள்:

## நெறியாளர் சான்றிதழ்

**'புதுக்கோட்டை மாவட்ட மக்கள் பெயர்கள் காலந்தோறும்'** என்னும் தலைப்பில் ஆய்வாளர் திருமதி க.சித்ரா அவர்களால் முனைவர் பட்டத்திற்காகச் செய்யப்பெற்ற இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும் இந்த ஆய்வுக்காக ஆய்வாளருக்கு வேறு எந்தப் பட்டமும் அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

(பேரா. முனைவர் மு.பாண்டி)
நெறியாளர்

**க.சித்ரா**
பதிவு எண்: 374,
முனைவர்பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைகழகம்,
காரைக்குடி-630003.

நாள்:

**ஆய்வாளர் உறுதிமொழி**

**'புதுக்கோட்டை மாவட்ட மக்கள் பெயர்கள் காலந்தோறும்'** என்னும் தலைப்பில் தமிழ் முனைவர் பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்வாய்வேடு என் சொந்த முயற்சியால் உருவானது என்றும், இவ்வாய்வேடு இதற்குமுன் வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

(க.சித்ரா)
ஆய்வாளர்

**உறுதிக் கையொப்பம்**

பேரா.முனைவர் மு.பாண்டி,
தமிழ்த்துறைத் தலைவர்,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630003.

## நன்றியுரை

முனைவர் பட்டம் பெறும் அளவிற்கு உயர்ந்ததற்கு முதற் காரணமான எனது பெற்றோருக்கு மனமார்ந்த நன்றிகள் கோடி.

இத்தகு சிறப்பைப் பெற்று வாழ, வாழ்வளித்த முழுமுதற்க் கடவுளுக்கு நன்றி.

ஆய்வினை மேற்கொள்வதற்கு இசைவளித்த எம் பல்கலைக்கழகத்திற்கும் தமிழ்த்துறைக்கும் நன்றியைச் சமர்ப்பிக்கிறேன்.

தொடக்கம் முதல் இன்று வரை ஐந்தாண்டுகளாக ஆய்விற்கு நிதி நல்கிய பல்கலைக்கழக மாநியக் குழுவிற்கு நன்றி.

ஆய்விற்குத் தேவையான நூல்கள், ஆய்வேடுகள் தந்து, அவ்வப்போது ஆய்வுத் தொடர்பான கருத்துக்களை எடுத்துக் கூறி, அவர் இட்டுச் சென்ற வழியில் தான் நடக்க கற்றுக் கொடுத்த எனது நெறியாளரும் தமிழ்த்துறைத் தலைவருமான எனது தந்தைக்கு நிகரான பேரா.முனைவர் மு.பாண்டி அவர்களுக்கு என் இதயத்தில் பூத்த நன்றி என்னும் மலர்களைக் காணிக்கையாக்குகிறேன்.

ஆய்வுத் தொடர்பான நூல்கள் வழங்கியதோடு சிறந்த வழிகாட்டுதலும் செய்த எம் பல்கலைக்கழகப் பேராசிரியர்களும், அழகப்பா அரசு கலைக்கல்லூரிப் பேராசிரியர்களுக்கும் நன்றி.

எல்லாப் புகழும் இறைவனுக்கே!! என்பது பழமை

எனது எல்லாப் புகழும் என் கணவருக்கே!! என்பது புதுமை

அத்தகையப் பெருமைக்குச் சொந்தக்காரரான என் கணவருக்கு நன்றி. ஆய்வு மேற்கொள்வதற்கு ஊக்கம் தந்த என் அன்புச் செல்வங்கள் வெ.சி.ஸ்ரீதர், வெ.சி.ஸ்ரீநிதி அவர்களுக்கும் நன்றி.

ஆய்வு மேற்கொள்ள ஆதரவு தந்த மாமா அ.பொன்னாச்சி, அத்தை பொ.பொன்னம்மாள், மச்சான் பாண்டி-சுசிலா, சகோதரர்கள் க.பாண்டியன், க.சுந்தர்ராஜ், சகோதரி க.வெள்ளையம்மாள், ஸ்ரீதேவி ஆகியோருக்கு நன்றி.

ஆய்வு செம்மை பெற உதவிய அன்புத் தோழர்கள் பிரபாகரன், மார்ஷல், தெய்வேந்திரன், கிருஷ்ணமூர்த்தி, கோகுலன், அழகுராஜா, முகமது உசேன், ராஜேந்திரன், முனைவர் மணிகண்டன், தோழிகள் முனைவர் ச.குருவம்மாள், புனிதவதி, பிரேமா, முனைவர் பீமா பரீதா, முனைவர் க.கனகலெட்சுமி, ரெத்தினேஸ்வரி, மங்களேஸ்வரி மற்றும் முனைவர்பட்ட ஆய்வாளர்கள், ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வாளர்கள், முதுகலை மாணவர்கள் ஆகிய அனைவருக்கும் நன்றி.

மிகச் சிறந்த முறையில் தட்டச்சு செய்து கொடுத்த அன்புச் சகோதரி மல்லிகாவிற்குச் சிறப்பு நன்றி.

நன்றி வணக்கம்!!

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| 1. | அக. | - அகநானூறு |
| 2. | இ. த. இ. வ. | - இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு |
| 3. | இலக். விள. | - இலக்கண விளக்கம் |
| 4. | இளம். | - இளம்பூரணர் |
| 5. | உ.ஆ. | - உரையாசிரியர் |
| 6. | ஐங். | - ஐங்குறுநூறு |
| 7. | கந். | - கந்தர்கலிவெண்பா |
| 8. | கம்ப. | - கம்பராமாயணம் |
| 9. | கலிங். | - கலிங்கத்துப்பரணி |
| 10. | கலி. | - கலித்தொகை |
| 11. | குறள். | - திருக்குறள் |
| 12. | குறுந் . | - குறுந்தொகை |
| 13. | சங்க. | - சங்க இலக்கியம் |
| 14. | சிலம். | - சிலப்பதிகாரம் |
| 15. | சேனா. | - சேனாவரையர் |
| 16. | திருமுரு. | - திருமுருகாற்றுப்படை |
| 17. | திருவி. | - திருவிவிலியம் |
| 18. | தெய்வ. | - தெய்வச்சிலையர் |
| 19. | தேவா. | - தேவாரம் |

20. தொல் - தொல்காப்பியம்

21. நல். - நல்வழி

22. நற். - நற்றிணை

23. நன். - நன்னூல்

24. நெடு. - நெடுநல்வாடை

25. நேமி. - நேமிநாதம்

26. ப. - பக்கம்

27. ப. ஆ. - பதிப்பாசிரியர்

28. ப.எண் - பதிவு எண்

29. பக். - பக்கங்கள்

30. பட்டி. - பட்டினப்பாலை

31. பத்துப். - பத்துப்பாட்டு

32. பதிற். - பதிற்றுப்பத்து

33. புற. - புறநானூறு

34. பெரும். - பெரும்பாணாற்றுப்படை

35. பொரு. - பொருநறாற்றுப்படை

36. மணிமே. - மணிமேகலை

37. மதுரை. - மதுரைக்காஞ்சி

38. முத்து. - முத்துவீரியம்

# பொருளடக்கம்


| இயல் | தலைப்பு | பக்கம் |
|---|---|---|
| | முன்னுரை | 01 - 06 |
| ஒன்று | ஆய்வுக்களம் அறிமுகம் | 07 - 20 |
| இரண்டு | பெயர்கள் சொற்பொருள் விளக்கம் | 21 - 35 |
| மூன்று | மக்கட் பெயர்களின் அமைப்பு | 36 - 54 |
| நான்கு | மக்கட் பெயர்களில் இயற்கைப் பெயர்கள் | 55 - 83 |
| ஐந்து | மக்கட் பெயர்களில் தெய்வப் பெயர்கள் | 84 - 221 |
| ஆறு | மக்கட் பெயர்களில் பிற பெயர்கள் | 222 - 252 |
| | முடிவுரை | 253 - 255 |
| | துணைநூற்பட்டியல் | 256 - 268 |
| | பின்னிணைப்பு | |

# முன்னுரை

இன்றைய நிலையில் தமிழ்ப் பண்பாடுகள் முற்றிலுமாக மறைந்து விடவில்லை. மெல்ல மெல்ல சிதைந்து வருகின்றன. நகர்ப்புற நாகரிக வளர்ச்சியினால் நாட்டுப்புறங்களிலுள்ள வளமைகளும், பாரம்பரியக் குணங்களும், பழக்க வழக்கங்களும் மெல்ல மாற்றமடைந்து வருகின்றன. நாட்டுப்புற மக்களிடம் குழந்தை பிறந்தவுடன் பெயர் வைத்தல் என்ற பழைய மரபுக்கூறு இன்றும் இருந்து வருகிறது. இப்பெயர் வைக்கும் முறையிலும் பெயர்களிலும் மாற்றங்கள் காணப்படுகின்றன. புதுமையை நாடும் மக்களின் வாழ்க்கை முறையினைக் காண்பதற்குப் ‘புதுக்கோட்டை மாவட்ட’ மக்களின் ஐந்து தலைமுறையினரின் பெயர்கள் கள ஆய்வின் மூலம் சேகரிக்கப்பட்டு ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

ஒரு தலைமுறை என்பது ஒருவர் பிறந்து, வளர்ந்து திருமணம் மூலம் இன்னொரு உயிரை உருவாக்குவது வரையாகும். அரசு விதிகளின்படி ஒரு தலைமுறையின் வயது முப்பத்து மூன்று (33) ஆண்டுகள். புதுக்கோட்டை மாவட்ட மக்களின் 1850 முதல் 2015 வரையில் மொத்தம் நூற்றி அறுபத்து ஐந்து (165) ஆண்டுகள் வரையிலான மக்கட் பெயர்கள் ஆய்விற்கு எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளது. இப்பெயர்களின் மூலம் மக்களின் சமுதாய பழக்க வழக்கங்கள், இயற்கை, தெய்வம் குறித்த நம்பிக்கைகள், வரலாறு, அரசியல், திரைப்படக் கலைஞர்கள் முதலியவற்றைக் கள ஆய்வின் மூலம் ஆராய்வதாக இவ்வாய்வு அமைகிறது.

## மக்கட் பெயர்களின் தோற்றம்

நாடோடி வாழ்க்கை வாழ்ந்த மனிதன் உணவிற்காக வேட்டையாடினான். தன்னை விட வலிமையான விலங்குகளை வேட்டையாட ஒரு குழுவாகச் சேர்ந்து செயல்படத் தொடங்கினான். ஒரு குழு பல குழுக்களாகப் பிரிந்த பொழுது தன்னுடைய குழுவை அறிந்து கொள்ளத் தங்களுக்குள் ஒரு குறியீட்டை அல்லது அடையாளத்தை இட்டுக் கொண்டனர். காலப்போக்கில் ஒருவனை மற்றவனிடமிருந்து வேறுபடுத்திக் காட்டத் தனித்தனி அடையாளங்கள் இடப்பட்டன. இவ்வாறாக இடம்பெற்ற அடையாளங்களிலிருந்து பெயர்கள் தோற்றம் பெற்றுள்ளன. நாளடைவில் மக்கட் பெயர் அவரவருக்குப் பிடித்த

இயற்கை, இனம், மதம், தலைவர்கள் போன்றோரின் பெயர்களைச் சுட்டியதால் மக்கட் பெயர்களில் வளர்ச்சி பெறத் தொடங்கியது என்பதைக் காணமுடிகிறது.

## ஆய்வுத் தலைப்பு

மக்கட் பெயர்களில் காலந்தோறும் மாற்றங்கள் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன என்பதை அடிப்படையாகக் கொண்டு **"புதுக்கோட்டை மாவட்ட மக்கட் பெயர்கள் காலந்தோறும்"** என்பது ஆய்வுத் தலைப்பாக அமைகிறது.

## ஆய்வு நோக்கம்

தமிழகத்திலுள்ள பின் தங்கிய மாவட்டங்களில் 'புதுக்கோட்டை மாவட்டமும்' ஒன்றாகும். இம்மாவட்டத்தில் மக்கட் பெயர்களில் காலந்தோறும் மாற்றம் ஏற்பட்டு வருகிறது. இம்மாற்றத்திற்கான காரணங்களைக் கண்டறிவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

## ஆய்வு எல்லை

'புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள சிற்றூர்களில் வாழும் மக்களின் பெயர்கள்' ஆய்வுக்கு எல்லையாக அமைக்கப்பட்டுள்ளன.

## ஆய்வு முன்னோடிகள்

முனைவர் மு.முத்தையா அவர்களின் **'மக்கட் பெயர்களின் மாண்புகள்',** முனைவர் கா.பாஸ்கரன் அவர்களின் **'தமிழியல் ஆய்வில் மக்கட் பெயர்கள்'**, முனைவர் து.இரவிக்குமார் அவர்களின் **'சங்கப் பாடல்களில் பெயர்க்குறியீடுகள்'** ஆகிய மூன்று முனைவர் பட்ட ஆய்வுகளும், முனைவர் சு.சக்திவேல் அவர்களின் **'மக்கட் பெயர் ஆய்வு'** என்ற நூலும் இவ்வாய்விற்கு முன்னோடிகளாகக் கொள்ளப் பெற்றுள்ளது.

## ஆய்வுச் சான்றுகள்

'புதுக்கோட்டை மாவட்டச்' சிற்றூர்களில் கள ஆய்வு மூலம் சேகரிக்கப்பட்ட மக்கட் பெயர்கள் பற்றியத் தகவல்கள் முதன்மைச் சான்றுகளாக அமைந்துள்ளன. மக்கட் பெயர்கள் பற்றி வெளிவந்துள்ள

ஆய்வேடுகள், திறனாய்வு நூல்கள், இதழ்கள், கட்டுரைகள் இணையம் முதலியன துணைமைச் சான்றாதாரங்களாக அமைந்துள்ளன.

## கருதுகோள்

'பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல கால வகையினான' என்பர். அடிப்படைத் தேவைகளான உணவு, உடை, உறைவிடம் போன்றவற்றுள் மாற்றங்களும் புதுமைகளும் புகுந்திருப்பது போல மக்கட் பெயர்களிலும் மாற்றங்கள், புதுமைகள் நிகழ்ந்து கொண்டிருக்க வேண்டும். இயற்கை, சமயம். இனம், மொழி, அரசியல், சினிமா, தொழில் போன்றவற்றால் கட்டமைக்கப்பட்டுள்ள தமிழ்ச் சமூகத்தில் இவை மக்கட் பெயர்களில் தாக்கத்தை ஏற்படுத்தியிருக்கக்கூடும் வேண்டும் என்பதாக இவ்வாய்வின் கருதுகோள் அமைகிறது.

## ஆய்வு அணுகுமுறை

மக்கட் பெயர்களில் காலந்தோறும் ஏற்பட்டுள்ள மாற்றங்களை விளக்கும் முகமாக விளக்கவியல் (Descriptive approach) அணுகுமுறையும், பெயர்கள் வைப்பதால் சமுதாயத்தில் விளைவிக்கும் தன்மைகளைக் கண்டறியும் முகமாகச் சமூகவியல் அணுகுமுறையும் (Sociological approach), பெயர்கள் உளவியல் காரணமாகச் சூட்டப்படுவதை நோக்கும் முகமாக உளவியல் அணுகுமுறையும் (psychological approach), காலந்தோறும் பெயர்களில் நிகழ்ந்துள்ள மாற்றங்களைக் காணும் நிலையில் வரலாற்றியல் அணுகுமுறையும் (Historical approach) இவ்வாய்விற்குரிய அணுகுமுறைகளாக இடம்பெற்றுள்ளன.

## ஆய்வுப் பகுப்பு

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஆறு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவையாவன,

1. ஆய்வுக் களம் அறிமுகம்,
2. பெயர்கள் சொற்பொருள் விளக்கம்,
3. மக்கட் பெயர்களின் அமைப்பு முறை,
4. மக்கட் பெயர்களில் இயற்கைப் பெயர்கள்,
5. மக்கட் பெயர்களில் தெய்வப் பெயர்கள்,
6. மக்கட் பெயர்களில் பிற பெயர்கள்

என்பனவாகும்.

ஆய்வு முன்னுரையில் ஆய்வுத் தலைப்பு, விளக்கம், நோக்கம், ஆய்வு எல்லை, கருதுகோள், சான்றுகள், ஆய்வு அணுகுமுறைகள், இயல்ப் பகுப்புகள், முடிவுரை, துணைநூற்பட்டியல், பின்னிணைப்பு ஆகியவை இடம்பெற்றுள்ளன.

## இயல் விளக்கங்கள்

**'ஆய்வுக் களம் அறிமுகம்'** என்னும் முதலாமியல் மாவட்டத்தின் தோற்றம், வரலாற்றுச் சிறப்பு, பெயர்க்காரணம், எல்லை, உட்பிரிவுகள், மக்கள் தொகை, இயற்கை அமைப்பு, சமயம், இனங்கள், கல்விக் கூடங்கள், தொழில்கள், மருத்துவமனை, பெருமை சேர்த்தவர்கள் போன்றவற்றை விளக்குவதாக அமைகிறது.

**'பெயர்கள் சொற்பொருள் விளக்கம்'** என்னும் இரண்டாமியலில் பெயர்கள் பற்றி, இலக்கணம், இலக்கியம், அகராதி, நிகண்டுகள் தரும் விளக்கங்கள் இடம்பெற்றுள்ளன.

**'மக்கட் பெயர்களின் அமைப்பு முறை'** ஒரு முழுமையில் பல கூறுகள் இருக்கும். ஒவ்வொரு கூறுக்கும் தனித்தனிச் செயல்பாடு இருப்பினும் அவை முழுமையோடு தொடர்புடையனவாகவே அமையும். ஒரு முழுமையான மக்கட் பெயர்களில் அதன் கூறுகள் எவ்வாறு பொருந்தி வருகின்றன என்பதைக் கண்டறிவது தேவையாகின்றது. சான்றாக, ஓர் எழுத்தில் பெயர்கள் காணப்படவில்லை. மாறாக, ஓர் அசை கொண்ட பெயர்கள் காணப்படுகின்றன.

**சான்றாக:** வசீம், மதி - நிரைபு - மலர்

அக்பர் - நேர்பு - காசு

கனகு - நி,நே - பிறப்பு

இதைப் போன்று இம்மாவட்டத்தில் ஏழு அசைகள் வரையிலும் பெயர்கள் காணப்படுகின்றன. மேலும் தனிப்பெயர், கூட்டுப்பெயர், விகுதிப்பெயர், முன், பின் ஒட்டுகள் ஆகியவற்றையும் இவ்வியல் காண்கின்றது.

**'மக்கட் பெயர்களில் இயற்கைப் பெயர்கள்'** என்பது நான்காமியல், மனிதனால் எந்த ஒன்றையும் முழுமையாக ஆக்கவோ, அழிக்கவோ முடியாதோ அதுவே இயற்கை. இயற்கையை நாட்டுப்புற மக்கள் தெய்வமாகவே மதிக்கின்றனர். அவ்விளைவினால் மக்கட் பெயர்களிலும், இயற்கைப் பெயர்கள் அமைந்துள்ளன என்பதைச் சுட்டுகின்றது.

**‘மக்கட் பெயர்களில் தெய்வப் பெயர்கள்’** என்னும் ஐந்தாமியலில் தன் நலம் கருதாது பிறர் நலம், நாட்டுநலம் கருதி வாழ்ந்த முன்னோர்கள், குலதெய்வங்கள், ஊர்த்தெய்வங்கள், சிறுதெய்வப்பெயர்கள் போன்றவற்றை மக்கட் பெயர்களில் இணைத்துள்ளதையும், நாளடைவில் சமயக் கால்ப்புணர்ச்சியால் பல்வேறு சமயம் சார்ந்த மக்கட் பெயர்கள் வைக்கப்பட்டதையும் இவ்வியலில் கண்டறியப்பெற்றுள்ளது.

**‘மக்கட் பெயர்களில் பிற பெயர்கள்’** என்பது ஆறாமியல் இம்மாவட்ட மக்கட் பெயர்கள் இனம், மொழி, அரசியல் தலைவர்கள், அயல்நாட்டுத் தலைவர்கள், திரைப்படக் கலைஞர்கள், இதிகாச வீரர்கள் போன்ற நிலையில் காணப்படுகின்றன. இப்பெயர்களைக் கள ஆய்வின் வழி விளக்குவதாக இவ்வியல் அமைந்துள்ளது.

## ஆய்வு முடிவுரை

ஆய்வின் மூலம் பெறப்பட்ட முடிவுகள் முடிவுரையில் இடம்பெற்றுள்ளன. ஆய்வுக்குப் பயன்படுத்தப்பெற்ற நூல்கள், ஆய்வேடுகள், இதழ்கள், ஆய்வுக் கட்டுரைகள் போன்றவைத் துணை நூற்பட்டியலில் அகர வரிசையில் இடம்பெற்றுள்ளன.

## பின்னிணைப்பு ஒன்று

துணைநூற்பட்டியலைத் தொடர்ந்து பின்னிணைப்பாகப் புதுக்கோட்டையின் எல்லையை அறியும் விதமாக மாவட்டத்தின் வரைபடம் கொடுக்கப்பட்டுள்ளது.

## பின்னிணைப்பு இரண்டு

இருபத்தேழு நட்சத்திரங்களின் பாத எழுத்துக்கள் அட்டவணை ஆக்கப்பட்டுள்ளன.

## பின்னிணைப்பு மூன்று

களப் பணியில் சேகரித்த ஐந்து தலைமுறைப் பெயர்கள் அட்டவணைப் படுத்தப்பட்டுள்ளன.

## பின்னிணைப்பு நான்கு

களப் பணியின் போது எடுக்கப்பட்ட புகைப்படங்கள், பேட்டி மற்றும் நேர்காணலில் கேட்கப்பட்ட கேள்வி, பதில் படிவம் ஆகியவை பின்னிணைப்பில் இணைக்கப்பட்டுள்ளன.

# இயல்-1
# ஆய்வுக்களம் அறிமுகம்

## முன்னுரை

தமிழகத்தில் வரலாற்றுச் சிறப்புடைய மாவட்டங்களுள் 'புதுக்கோட்டை மாவட்டமும்' ஒன்றாகும். இம்மாவட்டத்தைச் சேர்ந்த சிற்றூர்களில் வசிக்கக் கூடிய மக்களின் பெயர்கள் பல்வேறு நிலைகளில் காணப்படுகின்றன. அப்பெயர்களைச் சேகரிப்பதற்காகக் களஆய்வு மேற்கொண்ட பொழுது பல செய்திகள் கிடைக்கப்பெற்றன. அவற்றைப் பற்றி விளக்குவதே இவ்வியலின் நோக்கமாகும்.

## புதுக்கோட்டை மாவட்டத்தின் தோற்றம்

தொண்டைமான் மன்னர்களின் முடியாட்சியில் இருந்த புதுக்கோட்டை கி.பி.1686 முதல் 1947 வரை தனியரசாக (சமஸ்தானம் - தனிமாநிலம்) விளங்கியது. பின்பு 03.03.1948-இல் ஒன்றுபட்ட இந்தியாவுடன் இணைக்கப்பட்டது. புதுக்கோட்டை மாவட்டத் (pudukkottai District) "தலைமையகம் புதுகை எனப்படும் புதுக்கோட்டை. இம் மாவட்டம் 1974 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 14ஆம் நாள் உருவானது. திருச்சிராப்பள்ளி மற்றும் தஞ்சாவூர் மாவட்ட வட்டங்களைக் கொண்டு உருவாகியுள்ளது."[1] தற்போது தமிழகத்தின் 15-ஆவது மாவட்டமாகவும், மாவட்டத்தின் தலைநகரமாகவும் திகழந்து வருகிறது.

## புதுக்கோட்டை மாவட்ட வரலாற்றுச் சிறப்பு

'புதுக்கோட்டை மாவட்டம்' பல்வேறு வரலாற்றுச் சிறப்புப் பெற்றதாகும். "இன்றைய புதுக்கோட்டை நகரைச் சுற்றியுள்ள பகுதிகளில் மனிதன் பழங்கற்காலம் முதல் இன்று வரை தொடர்ந்து வளமான வாழ்வு பெற்றமையை உறுதி செய்யும் அகச்சான்றுகள் கிடைக்கின்றன என்று குறிப்பிட்டுள்ளார்."[2]

இம்மாவட்டத்தில் உள்ள குருவிக்கொண்டான்பட்டி என்ற இடத்தில் "ஒரு பழைய கற்காலக் 'கல்' கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. பிற்பகுதியான இரும்புக் காலத்தில் உபயோகித்திருந்த செம்பு, இரும்பு ஆயுதங்கள், மட்பாண்டங்கள், மணிகள், அணிகலன்கள், இறந்தோரைப் புதைத்த புதைகுழிகள், இறந்தோரின்

நினைவுச் சின்னங்கள், பயன்படுத்தப்பட்ட கல்லறைகள் ஆகியன பரவலாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன."[3] இறந்தோரைத் தாழியிலிட்டுப் புதைக்கும் பழக்கம் இருந்ததை,

**"மாயிரும் தாழி கவிப்பத்**
**தாவின்று அழிக வேற்கொல்லாக் கூற்றே"[4] (நற்.பா.271)**

எனவும்,

**"மன்னர் மறைந்த தாழி**
**வன்னி மரத்து விளங்கிய காடே"[5] (பதிற்று.பா.44:28:24)**

என்றும்,

**"கொடி நுடங்கு யானை நெடுமாவளவன்**
**தேவர் உலகம் எய்தினன் ஆதலின்**
**அன்னோர் கவிக்கும் கண்அகன் தாழி"[6] (புறம்.பா.255)**

எனவும்,

**"சுடுவோர், இடுவோர், தொடுகுழிப் படுப்போர்**
**தாழ்வயி னடைப்போர் தாழியிற் கவிப்போர்"[7] (மணி.6:11:66-67)**

என்றும் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுவதை அறியமுடிகிறது. புதுக்கோட்டைப் பகுதியிலுள்ள சிற்றூர்களில் குறிப்பாகச் "சித்தன்னவாசல், தாயினிப்பட்டி, கலசக்காடு, புல்வயல், மொட்டைமலை, அன்னவாசல், ஒலியமங்கலம், அம்மாசத்திரம், அண்ணாபட்டி, தொடையூர் முதலிய ஊர்களில் இறந்தோரைப் புதைக்கும் முதுமக்கள் தாழிகள் புதைந்து காணப்படுகின்றன."[8] இவ்விடங்களைத் தொல்பொருள் ஆராய்ச்சித் துறையினர் பாதுகாத்து வருகின்றனர். இப்பகுதி மக்கள் முதுமக்கள் தாழிகளை மதமதக்கடத்தாழி என்றும், குரங்குப்பட்டறை என்றும் கூறிவருகின்றனர். மாண்டவர்குழி என்பதையே பாண்டவர்குழி என்று மருவி அழைக்கின்றனர்.

### பெயர்க்காரணம்

'புதுக்கோட்டை' என்னும் பெயர் இங்கே புதிய கோட்டை கட்டப்பட்ட பின் ஏற்பட்டதாக இருக்கக்கூடும். "இதே போன்று இங்கிலாந்தில், நியூகேசல்

(New castle), ரஷ்யாவில், நோவேர் கார்டு (Novogorodo) ஆகிய ஊர்கள் போன்று புதுக்கோட்டை எனப் பெயர் வரும்படி புதிய கோட்டைகளைப் பெற்றுள்ளதை இன்றும் காணமுடிகிறது."[9] தொண்டைமானின் ஆட்சியில் (1686-க்குமுன்) திருமயம், கீழாநிலை, மிரட்டுநிலை, பிரான்மலை, பொற்பனைக்கோட்டை ஆகிய இடங்களில் பழைய கோட்டைகள் இருந்ததால் (திருமயம் தவிர ஏனைய இடங்களில் இருந்த கோட்டைகள் அழிந்துவிட்டன.) புதிதாக நிர்மாணிக்கப்பட்ட கோட்டை புதுக்கோட்டை எனப்பெயர் பெற்று அந்தப் பெயரே ஊருக்கும் வழங்கப்பட்டதாகக் கொள்ளலாம். "1686-இல் ரகுநாதராய தொண்டைமான் இப்பகுதியின் மன்னரானபோது புதுக்கோட்டையில் 'கோட்டை' எதுவும் இருக்கவில்லை. தொண்டைமான் பதவிக்கு வந்தபின் தற்போதைய 'புதுக்கோட்டை' நகரம் உருவாக்கப்பட்டதாகத் தொண்டைமான் வம்சாவளி என்னும் தெலுங்குக் காவியம் தெரிவிக்கிறது."[10]

## பரப்பளவு

புதுக்கோட்டை மாவட்டம் (Pudukkottai District) சுமார் 4663 சதுர கி.மீ. தூரத்தில் உள்ளது.

## எல்லை

எண் திசைகளை எல்லைகளாகக் கொண்ட புதுக்கோட்டை "வடகிழக்கில் தஞ்சாவூர் மாவட்டமும் தென்கிழக்கில் வங்காள விரிகுடாவின் பாக்கு நீரிணையும், தென்மேற்கில் இராமநாதபுரம் மாவட்டம் மற்றும் சிவகங்கை மாவட்டமும் மேற்கிலும் வடமேற்கிலும் திருச்சிராப்பள்ளி மாவட்டமும் உள்ளன."[11] இம்மாவட்டத்தில் சுமார் 3 கி.மீ. கரையோரப் பகுதியாகும்.

## மக்கள் தொகை

இந்திய அரசு பத்து ஆண்டுகளுக்கு ஒரு முறை மக்கள் தொகை கணக்கெடுக்கிறது. அந்த அடிப்படையில் "புதுக்கோட்டை மாவட்டத்தில் (Pudukkottai District), 2001- ஆம் ஆண்டு மக்கள் தொகை கணக்கெடுப்பின்படி (census) இம்மாவட்டத்தில் 14, 59, 601 உள்ளதாக பதிவு செய்யப்பட்டுள்ளது. அப்போது இங்கு 71.1% பேர் படித்தவர்கள். ஆனால் 2011-ஆம் ஆண்டு மக்கள் தொகை கணக்கெடுப்பின்படி (census) 16, 18, 725 பேர் உள்ளதாகவும் இதில்

8, 03, 337 ஆண்களும் 8, 15, 388 பெண்களும் உள்ளனர். இதில் 77.8% பேர் படித்தவர்கள்."[12] என்பதை இதன் வழி அறியமுடிகிறது.

## இயற்கை அமைப்பு

எந்த ஒரு பொருளை, மனிதனால் ஆக்கவோ அழிக்கவோ முடியாதோ அத்தனை சிறப்புடைய பொருளுக்கு இயற்கை என்று பொருள். அத்தகைய இயற்கை இம்மாவட்டத்தில் நிறைந்து காணப்படுகிறது.

## நிலங்கள்

தமிழகத்தின் நிலப்பகுதிகள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என வழங்குவது தொன்றுதொட்ட வழக்கமாகும். அதனடிப்படையில் குறிஞ்சி, முல்லையும், குளத்தூர், திருமயம் வட்டங்களிலும், மருதநிலம், ஆலங்குடி வட்டத்திலும், ஆவுடையார் கோவில், மணமேல்குடி வட்டங்கள் நெய்தல் நிலப் பிரிவாகவும் இருப்பதைக் காணமுடிகிறது. இம்மாவட்டத்தில் புஞ்சை நிலமே அதிகம். விவசாயத்திற்குப் பெரும்பாலும் மழையையே நம்பி இருக்க வேண்டியுள்ளது. அதனால் இப்பகுதிகள் பெரும்பாலான ஆண்டுகளில் பாலையாகவே காட்சியளிக்கின்றன. என்று புதுக்கோட்டை மாவட்ட வரலாறு என்னும் நூலின் வழி அறியமுடிகிறது.

## ஆறுகள்

புதுக்கோட்டை மாவட்டத்தில் பல்வேறு ஆறுகள் உள்ளன. அவற்றில் பெருமழைக்காலங்களில் மட்டும் தண்ணீர் ஓடும். வெள்ளாறு, குண்டாறு, பாம்பாறு, அஞ்ஞானவிமோச்சினியாறு, உய்யக்கொண்டான் ஆறு, அம்புலியாறு, கோரையாறு, சூறையாறு முதலிய காட்டாறுகள் இருக்கின்றன.

## குன்றுகள்

மலைகள் ஒரு நாட்டின் அரண்கள். ஒருநாட்டின் மலைவளத்தை வைத்தே அந்நாட்டின் பொருளாதாரம் கணக்கிடப்படுகிறது. இம்மாவட்டத்தில் குன்றுகள் மிகுதியாக உள்ளன. குன்றுகளை இம்மாவட்ட மக்கள் மலைகள் என்றே அழைக்கின்றனர். அவை, செவலூர், அம்மாசத்திரம், குடுமியான்மலை, செம்பாட்டூர், விராலிமலை, நெடுங்குடி, குன்னத்தூர்மலை, திருக்கோகர்ணம்,

வையாபுரிகுமரமலை, திருமயம், சித்தன்னவாசல், தேனிமலை, பிரான்மலை என்பனவாகும்.

### கனிமங்கள்

பூமிக்கு அடியிலிருந்து கிடைக்கக்கூடிய அறிய வகை பொருள்களுக்குக் கனிம வளங்கள் என்று பெயர். அத்தகைய கனிம வளங்கள் நிறைந்த மாவட்டமாக 'புதுக்கோட்டைத்' திகழ்கிறது. அவை கருங்கல், செம்புரைக்கல், காவிக்கல், இரும்புத்தாது ஆகியவையாகும்.

### கருங்கல்

கருங்கல் கட்டிடங்களுக்கு அடிப்படையானது. இம்மாவட்டத்தின் பொருளாதார வளர்ச்சியில் பெரும்பங்கு வகிக்கிறது. திருக்கோகர்ணம், புத்தாம்பூர், திருமயம், லெம்பலக்குடி, கோனாபட்டு, மலைக்கோயில், பேரையூர், விராலிமலை, குடுமியான்மலை, பனங்குடி ஆகிய இடங்களில் கருங்கல் வெட்டியெடுக்கப்படுகிறது.

### செப்புரைக்கற்கள்

கீழாநிலைப் பகுதிகளில் செம்புரைக் கற்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

### மஞ்சள் மற்றும் சிவப்புக் காவிகற்கள்

செங்கீரை (அரிமளம்) பகுதியில் கிடைக்கிறது.

## இரும்புத்தாது

குளத்தூர் வட்டம் மல்லம்பட்டிப் பகுதியில் இரும்புத்தாது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. "மிகப் பழங்காலத்திலிருந்தே இரும்பு தயாரிக்கும் தொழிற் கூடங்கள் இப்பகுதியில் இருந்ததைக் கல்வெட்டிகளின் மூலம் தெரிந்து கொள்ளலாம். 1900-ஆம் ஆண்டிலிருந்தே இங்குக் கிடைக்கும் இரும்புத் தாதுவைப் பயன்படுத்தித் தொழிற்சாலை ஏற்படுத்துவது குறித்து ஆய்வுகள் நடைபெற்று வந்துள்ளன. இங்குக் கிடைக்கும் இரும்புத் தாதுப்படிவு குறைந்த பரப்பளவிலேயே காணப்படுவதாலும், தரமும் உயர்வாக இல்லாததாலும், தொழிற்சாலை அமைக்கும் அளவிற்குப் பயன்படுத்திக் கொள்ள

இயலவில்லை."[13] என்பர். "540 வகை தாவர இனங்களும், 25 வகை பாம்பு இனங்களும் 45 வகை பறவை இனங்களும் காணப்படுகின்றன."[14] என்றும் கூறுகின்றனர்.

## தாவரங்களும் விலங்குகளும்

இம்மாவட்டத்திலுள்ள மலைகளில் ஆடாதோடா, தூதுவளை, திப்பிலி, கருந்துளசி, கரிசலாங்கண்ணி, பொன்னாங்கண்ணி, விசுணுகிராந்தி, கண்டங்கத்தரி, கீழாநெல்லி, வில்வஇலை, கடுக்காய், பூவரசன், சுக்கான் கீரை, ஊசிப்பாலை, வல்லாரை, பசலை, அல்லி, கடப்பம் ஆகிய அரியவகையான மூலிகைகள் காணப்படுகின்றன. இம்மாவட்டம் அடர்ந்த காடுகளால் நிறைந்திருப்பதால் இங்கு "540க்கும் அதிகமான தாவர இனங்களும், பாம்பு இனங்களும் பறவை இனங்களும் காணப்படுகின்றன."[15]

## மாவட்டப் பிரிவுகளின் நோக்கம்

குறுகிய நிலப்பரப்பை ஆட்சிபுரிவது அரசுக்கு எளிமையானது. மக்கள் குறைகளைக் களைதல், அதிகாரத்தைப் பரவலாக்கல், தொழில்மயமாக்கல் போன்றவை மாவட்ட பிரிவிற்குரிய அடிப்படை நோக்கங்களாகும்.

## மாவட்ட உட்பிரிவுகள்

நாடு என்பது பல்வேறு மாநிலங்கள், மாவட்டங்கள், பேரூராட்சிகள் ஆகிய அமைப்புகளை உள்ளடக்கியதைப் போல மாவட்டங்களும் பல்வேறு உட்பிரிவுகளுடன் அமைக்கப்பெற்றுள்ளன. அவை, மண்டலம், வட்டம், சரகம், வருவாய் கோட்டம் வட்டங்கள் ஊராட்சி மன்றங்கள் ஆகியனவாகும்.

இம்மாவட்டம் பதினொறு வட்டங்களைக் கொண்டுள்ளது. அவை,

1. புதுக்கோட்டை
2. குளத்தூர்
3. ஆலங்குடி
4. கறம்பக்குடி
5. கந்தர்வகோட்டை
6. திருமயம்

7. பொன்னமராவதி
8. இலுப்பூர்
9. அறந்தாங்கி
10. ஆவுடையார்கோவில்
11. மணமேல்குடி

ஆகும்.

## ஊராட்சி ஒன்றியம்

அடுத்த பிரிவு ஊராட்சி ஒன்றியமாகும். இம்மாவட்டம் முப்பத்தி ஆறு ஊராட்சி ஒன்றியங்களைக் கொண்டது. அவை,

1. புதுக்கோட்டை
2. வாராப்பூர்
3. குளத்தூர்
4. கறம்பக்குடி
5. கிள்ளுக்கோட்டை
6. குன்னண்டார்கோவில்
7. கீரனூர்
8. ஆலங்குடி
9. கீரமங்கலம்
10. வெண்ணாவல்குடி
11. கறம்பக்குடி
12. கந்தர்வகோட்டை
13. கல்லாக்கோட்டை
14. திருமயம்
15. செங்கீரை
16. கீழாநிலை
17. கோட்டூர்
18. விராச்சிலை
19. பொன்னமராவதி
20. அரசமலை
21. காரையூர்
22. இலுப்பூர்
23. கொடும்பாளூர்
24. குடுமியான்மலை
25. வீரப்பட்டி
26. அறந்தாங்கி
27. பூவத்தக்குடி
28. அரசர்குளம்
29. சிலட்டூர்
30. ஆவுடையார்கோவில்
31. மீமிசல்
32. பொன்பேத்தி
33. ஏம்பல்
34. மணமேல்குடி
35. கோட்டைப்பட்டினம்,
36. சிங்கவனம்

ஆகியனவாகும்.

## சரகம் - (பிர்க்கா)

வட்டத்தின் அடுத்த பிரிவு. சரகம் என்று சொல்லக்கூடிய பிர்க்காவாகும். இம்மாவட்டத்தில் பிர்க்கா ஐந்தாக உள்ளன. அவை,

1. செங்கீரைச் சரகம்
2. கிழாநிலைச் சரகம்
3. கோட்டூர்ச் சரகம்
4. விராச்சிலைச் சரகம்
5. திருமயம் சரகம்

ஆகியவையாகும்.

## வருவாய்க் கோட்டம்

சரகத்தின் அடுத்தப் பிரிவாக உள்ளவை வருவாய் கோட்டங்கள் ஆகும். அவை இரண்டாக உள்ளன.

1. புதுக்கோட்டை
2. அறந்தாங்கி

தமிழக அரசால் உருவாக்கப்பட்ட உட்பிரிவு அமைப்புகளின்படி இம்மாவட்டம் அமைந்துள்ளதைக் காணமுடிகிறது.

## சமூக வாழ்க்கை

மனிதன் வாழ்வியல் கோட்பாடுகளைச் சமுதாயச் செயல்கள் மூலம் அறிந்து கொள்கிறான். "சமூகம் என்பது குறிப்பிட்ட பொது நோக்கங்களை அடைவதற்காக ஒருசில நிலையான உறவுமுறைகளினால் விளைவிக்கப்பட்ட மனிதனின் கூட்டுத் தொகுதி ஆகும்."[16] என்பர். சமூகத்திற்குப் பண்பாடு, நாகரிகம், நல்லிணக்கம் ஆகியவற்றைப் பாதுகாக்கும் பொறுப்புள்ளது. "சமூகம் என்பது பொதுப் பொறுப்புக்களால் ஈடுபட்டிருக்கும் பிற தொகுதிகளின் நடவடிக்கைகளில் ஒன்று சேர்ந்து பங்கு பெறுவது ஆகும்."[17] இச்சமூகம் மக்களுக்குப் பெயரிட்டுத் தங்களின் சமூகக் கட்டமைப்பை நிலைநாட்டுகிறது.

## சமயம்

நாடோடிகளாக விலங்குகளோடு விலங்காகத் திரிந்த மனிதனைப் பக்குவப்படுத்தியது சமயம் ஆகும். சமயம் என்பதற்குச் சமைத்தல் என்று பெயர். பக்குவப் படுத்துதல், நெறிப்படுத்துதல் ஆகியவையாகும். பல்வேறு நெறிமுறைகளைக் கொண்ட சமயங்களின் எண்ணிக்கைப் பலவாகும். அவற்றில் புதுக்கோட்டை மாவட்டத்தில் சமணம், பௌத்தம், இந்து, இஸ்லாம், கிறித்து ஆகிய சமயங்கள் இம்மாவட்டத்தில் நிலை பெற்ற சமயங்கள் என்றும் கூறலாம்.

## இனம்

இனம் என்பதற்குச் சாதி என்ற பெயர் உண்டு. இனம் இரண்டு வகைப்படும் என்பதைத் தொல்காப்பியத்தின்

**"உயர்திணைக்குரிமையும் மஃறிணைக் குரிமையும்**
**மாயிறு திணைக்குமோ ரன்ன வுரிமையும்"[18] (தொல்.சொல்.பெய.645)**

என்பதன் மூலம் உணரலாம். இதனையே ஔவையும், 'சாதி இரண்டொழிய வேறில்லை' என்றும் கூறுகிறார். ஒன்றிலிருந்து மற்றொன்றை வேறுபடுத்துவதற்காகச் சாதி என்ற அமைப்பைப் பல்வேறு கிளைகளாக மாற்றத் தொடங்கினர். அத்தகைய இனம் அவரவர் செய்யும் தொழிலை மையமாகக் கொண்டே தோன்றியுள்ளதை அறியலாம். "சங்க காலப் புலவர்கள் தாங்கள் செய்த தொழிலைத் தங்கள் பெயருடன் இணைத்துக்கொள்ளும் பழக்கத்தைச் சங்க இலக்கியப் புலவர்களின் பெயர்களினின்றும் அறிய முடியும்."[19] கணியன் பூங்குன்றனார், கூல வாணிகன் சீத்தலைச் சாத்தனார், பொன்வணிகனார் மகனார், நப்பூதனார், மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் ஆகிய புலவர்களின் பெயர்களுக்கு முன்னுள்ள தொழில் பெயர் அவர்கள் மேற்கொண்ட தொழில்களைக் குறிக்கின்றன. இதனை,

**"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா**
**செய்தொழில் வேற்றுமை யான்."[20] (குறள்:972)**

என்ற குறள் வழி அறியமுடிகிறது. இவ்வாறு செய்தொழிலை அடிப்படையாக வைத்து அமைந்த இனங்கள் இம்மாவட்டத்திலும் காணப்படுகின்றன. அம்பலகாரர், பண்டிதர், ஆண்டிப்பண்டாரம், உடையார், கள்ளர், நாயுடு, பறையர், மறவர், பள்ளர், வேளாளர், அம்பட்டையர், கவுண்டர், வண்ணார், இசை

வெள்ளாளர், ஆசாரி, கோனார், ராவுத்தர், பட்டர், ஐயர், உடையர் போன்ற இனங்களைக் காணமுடிகிறது. இத்தகைய இனங்கள் சங்க காலத்தில் முன் ஒட்டாக இருந்தவை. தற்பொழுது பின் ஒட்டாக இருக்கின்றது. காரணம், அவற்றிற்கு தனிச்சிறப்புக் கருதாமை என்பதாகக் கொள்ளப்படுகிறது.

## கல்வி

ஒரு நாட்டின் முன்னேற்றம் அந்நாட்டின் கல்வி வளர்ச்சியில் உள்ளது என்பார்கள். கல்வி மனஇருளைப் போக்க வல்லது. கற்க கற்க அறிவு வளரும் என்பார் வள்ளுவர்.

**"தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்**
**கற்றனைத் தூறும் அறிவு."[21] (குறள்:396)**

என்றும்,

**"ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு**
**எழுமையும் ஏமாப் புடைத்து."[22] (குறள்:398)**

என்று கல்வி அதிகாரத்தைப் படைத்துள்ளார். அத்தகுச் சிறப்பு மிக்க கல்விக்காகத் தனியரசு காலத்திலேயே கல்விச் சாலைகளை இம்மாவட்டத்தில் அமைத்திருக்கிறாகள். அதனை இன்றும் காணமுடிகிறது. சான்றாக, இராணியர் தொடக்கப்பள்ளி, நடுநிலைப்பள்ளி, மேல்நிலைப்பள்ளி, மன்னர் கல்லூரி, மன்னர்கல்வியல் கல்லூரி, மன்னர் இராணுவக் கல்லூரி ஆகியவை இன்றும் உள்ளன. அதுமட்டுமல்லாது இன்று பல்துறைக் கல்விக்கூடங்களும் நிறைந்து காணப்படுகிறது.

## வேளாண்மை

இம்மாவட்டத்தில் சுமார் 6000 கண்மாய்கள் உள்ளன. இவை விவசாயத்திற்குத் துணை புரிகின்றன. மாவட்டம் சற்று வறண்ட நிலப் பகுதியைக் கொண்டதாகும். நெல், சோளம், கம்பு, கேழ்வரகு ஆகியவை மாவட்டத்தில் அதிகம் விளைகின்றன. குடுமியான் மலையில் விவசாய ஆராய்ச்சிக்காக "1967 முதல் 'அண்ணா பண்ணை' செயல்பட்டு வருகிறது. இது சுமார் 1017 ஏக்கர் பரப்பளவுடையதாகும்."[23] என்பதை அறியமுடிகிறது.

## தொழில்கள்

இம்மாவட்டத்தில் விவசாயத்திற்கு அடுத்த படியாகக் கைத்தறி, மண்சிலைகள் செய்தல், பனை ஓலைப் பொருட்கள் தயாரித்தல், கல் சிற்பம் செய்தல், கருங்கல் வெட்டியெடுத்தல், மரத்தச்சு வேலைகள், பொற்கொல்லா் தொழில்கள், செயற்கை வைரம் பட்டை தீட்டுதல் முதலான தொழில்கள் சிறப்புற்று விளங்குகின்றன. "1960 ஏப்ரல் முதல் தேதியில் இம்மாவட்டத்தில் காதி மற்றும் கிராமத் தொழில் வளர்ச்சி இணையம் தோற்றுவிக்கப்பட்டது."[24] முந்திரி எண்ணெய் உற்பத்தி தற்போது இம்மாவட்டத்தில் ஊக்குவிக்கப்படுகிறது. 2009-ஆம் ஆண்டு பாரத் ஹெவி எலக்ரிக் லிமிடெடு என்ற இருப்புத் தொழிற்சாலை மத்திய அரசால் தோற்றுவிக்கப்பட்டுள்ளது. சர்க்கரை ஆலை, தோல் தொழிற்சாலைத் தொழில்கள் நடைபெறுகின்றன.

## மருத்துவம்

தமிழகத்தில் முதல் முறையாக மருத்துவா் பட்டம் பெற்ற பெண் டாக்டா் என். முத்துலட்சுமி ரெட்டி என்பது இம்மாவட்டத்திற்கே உரிய தனிச் சிறப்பாகும். அவா் பெயரையே அரசு தலைமை மருத்துவமனைக்குச் சூட்டியுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. அதனைத் தொடா்ந்து இராணியா் மருத்துவமனை உள்ளது. தற்போது பல்வேறு தனியாா் மருத்துவ மனைகள் நிறைந்த பகுதியாக இம்மாவட்டம் திகழ்கிறது.

## மாவட்டத்தின் பெருமை

பல்வேறு சிறப்புக்களைத் தன்னகத்தே கொண்ட இம்மாவட்டத்தில் பிறந்து பல்வேறு துறைகளில் சாதனை படைத்தவா்களால் மேலும் சிறப்படைந்துள்ளது. இதனை வள்ளுவரின் வழிக் காணலாம்.

**"ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்**
**சான்றோன் எனக்கேட்ட தாய்."[25] (குறள்:69)**

## சாதனைப்படைத்த சாதனையாளர்களும் துறைகளும்,

| | | |
|---|---|---|
| மருத்துவத்துறை | - | டாக்டா் என். முத்துலட்சுமி ரெட்டி |
| நிா்வாகத்துறை | - | சேஷய்யா சாஸ்திரிகள், சா். அலெக்ஸாண்டா் டாட்டன்ஹம் |

திரைப்படத்துறை - ஜெமினி கணேசன், பியூ. சின்னப்பா, ஏ. வி. எம்.ராஜன், எல். விஜயலெட்சுமி

அரசியல்த்துறை - தீரர் சத்தியமூர்த்தி

தொல்லியல்த்துறை - என். பி. சுவாமிநாதன், கே. ஆர். வெங்கட்ராமன்,

கே. ஆர். சீனிவாசன்.

ஆகியோரால் பெருமை பெற்றுள்ளதைக் காணமுடிகிறது.

### சுற்றுல்லாத் தளம்

இங்குச் சித்தன்னவாசல், புதுக்குளம் மணிக்குண்டு, பூங்கா நகர் ஆகியவை கண்கவர் சுற்றுலாத் தலங்கள் ஆகும். வரலாற்றுச் சிறப்புடைய கோவில்களும் அதிகமாக உள்ளன. அவை,

1. ஆவுடையார் கோவில்
2. கொடும்பாளூர்
3. சித்தன்னவாசல்
4. குடுமியான்மலை
5. திருமயம்
6. விராலிமலை
7. நார்த்தாமலை
8. ஆவூர்
9. திரு பிரகதம்பாள் ஆலயம்

ஆகிய தலங்கள் மிகவும் பிரசித்திப்பெற்றத் தலங்கள் ஆகும்.

## தொகுப்புரை

- தமிழகத்தில் புதுக்கோட்டை மாவட்டம் 1974இல் அமைக்கப்பட்டாலும் தொன்மைச் சிறப்புகள் இங்கு மிகுதியாக உள்ளன. இம்மாவட்டம் குடிநீர் பற்றாக்குறை ஒன்றைத் தவிர

மற்ற மாவட்டங்களுக்கு இணையாக வளர்ந்து வருகிறது. இம்மாவட்டக் கோவில்கள் உலகத்தரம் வாய்ந்தவையாகும்.

## சான்றெண் விளக்கம்

1. http://www.pudukkottai district.com/1.4.13
2. ப.எண்:1901, புதுக்கோட்டை மாவட்ட நாட்டுப்புறத் தெய்வங்கள் ஓர் ஆய்வு, ப. 11
3. மேலது, ப.11
4. தமிழண்ணல் (ப. ஆ.), நற்றிணை (மூலமும் உரையும்), ப. 363
5. அ. மா. பரிமணம், கு. வெ. பாலசுப்பிரமணியன் (ப. ஆ.), பதிற்றுப்பத்து (மூலமும் உரையும்), ப. 142
6. அ. மா. பரிமணம், புறநானூறு (மூலமும் உரையும்), ப. 586
7. உ. வே. சாமிநாதய்யர், மணிமேகலை, ப. 72
8. ப.எண்:1901, புதுக்கோட்டை மாவட்ட நாட்டுப்புறத் தெய்வங்கள் ஓர் ஆய்வு, ப. 12
9. ஜெ. ராஜாமுகமது, புதுக்கோட்டை மாவட்ட வரலாறு, ப. 64
10. மேலது, ப. 64
11. http://www.pudukkottai district.com/1.4.13
12. மேலது, ப. 1
13. ஜெ.ராஜாமுகமது, புதுக்கோட்டை மாவட்ட வரலாறு, ப. 4
14. மேலது, ப. 5
15. மேலது, ப. 5
16. சி. வெங்கடேசன், தேனி மாவட்ட இடப்பெயர்களில் புணர்ச்சி விதிகள், ப. 20
17. மேலது, ப. 20
18. தமிழண்ணல், தொல்காப்பியம் (மூலமும் உரையும்)
19. ஆறு. இராமநாதன், நாட்டுப்புறுப் பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல், ப. 30

20. வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார், திருக்குறள், ப.1085

21. மேலது, ப. 467

22. மேலது, ப. 469

23. இரா. பாஸ்கரன், புதுக்கோட்டை நகரமும் நகரக்கோயில்களும், ப. 7

24. மேலது, ப. 8

25. வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார், திருக்குறள், ப. 101

# இயல்-2
# பெயர்கள் சொற்பொருள் விளக்கம்

### முன்னுரை

ஒவ்வொரு மனிதனுக்கும் பொருளுக்கும் பெயரிடுவது நடைமுறையில் உள்ள வழக்கமாகும். பெயரிடுவதன் நோக்கம் ஒரு மனிதனை மற்றொரு மனிதனிடமிருந்தும், ஒரு விலங்கினை மற்றொரு விலங்கிடமிருந்தும், ஒரு பறவையை மற்றொரு பறவையிடமிருந்தும், ஒரு பொருளை மற்றொரு பொருளிடமிருந்தும் வேறுபடுத்திக் காட்டுவதற்கேயாகும்.

### பெயர் அமைந்த முறை

நாடோடி வாழ்க்கை வாழ்ந்த மனிதன் உணவிற்காக வேட்டையாடினான். தன்னை விட வலிமையான விலங்குகளை வேட்டையாட, ஒரு குழுவாகச் சேர்ந்து செயல்படத் தொடங்கினான். ஒரு குழு பல குழுக்களாகப் பிரிந்தபொழுது, தன்னுடைய குழுவை அறிந்துகொள்ளத் தங்களுக்குள் ஒரு அடையாளத்தை இட்டுக் கொண்டான். காலப் போக்கில் ஒருவனை மற்றவனிடமிருந்து வேறுபடுத்திக் காட்டத் தனித்தனி அடையாளங்கள் இடப்பட்டன. இதுவே பெயர் எனப்படும். உலகில் தோன்றிய ஒவ்வொரு உயிருக்கும் பொருளுக்கும் பெயரிடுவது வழக்கமாக அமைந்துள்ளது என்பதனை இதன்வழி அறியமுடிகிறது.

### தொல்காப்பியர் சுட்டும் பெயர்கள்

தொல்காப்பியர் சொல்லதிகாரத்தில் பெயரியல் என்ற தனி இயலையே வகுத்துள்ளார். " 'பெயர்' என்ற சொல்லாட்சி தொல்காப்பியத்தில் 'இருநூற்று எண்பத்து மூன்று' இடங்களில் இடம்பெற்றுள்ளதாக"[1] து.இரவிக்குமார் தம் ஆய்வேட்டில் கூறியுள்ளார்.

**"அவற்றுள்,**
**பெயரெனப் படுபவை தெரியுங்காலை**
**உயர்திணைக் குரிமையும் அஃறிணைக் குரிமையும்**
**ஆறிரு திணைக்குமோ ரன்ன வுரிமையும்**
**அம்மு வுருபின தோன்றலாறே"[2]** **(தொல்.பெய.645)**

என்பர். இதற்கு இளம்பூரணர் “மேற்கூறப்பட்ட நான்கனுள் பெயர் என்று சொல்லப்படுவன உயர்திணைக்கு உரிமையாய் வருவனவும் அஃறிணைக்கு உரிமையாய் வருவனவும் ஒத்தவுரிமையாய் வருவனவும் என மூன்று வேறுவாய்ப்பாட்டான் வகுத்துத் தோன்றும் நெறிக்கண் என்பர்.”[3] இதே கருத்தைச் சேனாவரையர்.”[4] தெய்வச்சிலையார்.”[5] நச்சினார்க்கினியர்.”[6] போன்றோரும் குறிப்பிடுகின்றனர். இதிலிருந்து தொல்காப்பியர் உயர்திணைப் பெயர்கள், அஃறிணைப் பெயர்கள், விரவுப் பெயர்கள் என்ற மூன்று நிலைகளில் பெயர் வழங்கப்படும் என்று கருதியமைப் புலனாகும்.

## உயர்திணைப் பெயர்கள்

பெயர்களை மூன்று வகையாகப் பிரித்த தொல்காப்பியர் உயர்திணைப் பெயர்களை,

**"அவ்வழி**
**அவனிவ னுவனென வரூஉம் பெயரும்**
**அவளிவ ளுவளென வரூஉம் பெயரும்**
**அவரிவ ருவரென வருஉம் பெயரும்**
**யான் யாம் நாம் என வரூஉம் பெயரும்**
**யாவன் யாவள் யாவர் என்னும்**
**ஆவயின் மூன்றே டப்பதி னைந்தும்**
**பாலறி வந்த வுயர்திணைப் பெயரே”[7]** **(தொல்.647)**

என்று குறிப்பிடுவர். இதற்கு இளம்பூரணர் “மூவீற்றதாக மேற்சொல்லப்பட்ட பெயருள் அவன் என்பது முதலாக யாவர் என்பது ஈறாகச் சொல்லப்பட்ட பதினைந்தும் பால் விளங்க நிற்கும் உயர்திணைப் பெயர் என்றவாறு”[8] என்பர். மேலும், உயர்திணைப் பெயர்களில் பால் காட்டுவனவாக “ஆண் மகன் எனவும், பெண் மகள் எனவும், பெண்டாட்டி எனவும், நம்பி எனவும், நங்கை எனவும், முறைமைப் பெயரல்லாத மகனும் மகளும் எனவும், மாந்தர், மக்கள் எனவும், ஆடூஉ, மகடூஉ எனவும், சுட்டு முதலாகிய அன், ஆன், அவ்வாளன், இவ்வாளன், உவ்வாளன் எனவும், அம்மாட்டான், இம்மாட்டான், உம்மாட்டான் எனவும் சுட்டு முதலாகிய அப்பெண்டு, இப்பெண்டு, உப்பெண்டு எனவும், உவமக்கிளவி பொன்னன்னான், பொன்னன்னாள் எனவும் வருவன உயர்திணைப் பெயராம்”[9] என விளக்குவர்.

## எல்லாரும் எல்லீரும் எனும் பெயர்கள்

எல்லாரும், எல்லீரும், பெண்மகன் என வரும் மூன்று பெயர்களும் பாலறிய வந்த உயர்திணைப் பெயர்களில் அடங்கும். ஏனெனில் "புறத்துப் போய் விளையாடும் பேதைப் பருவத்துப் பெண்மகளை மாறோக்கத்தார் இக்காலத்தும் பெண் மகனென்று வழங்குப"[10] என்ற சேனாவரையத்தின்படி இது பொருந்துவதாகும்.

## உயர்திணைப் பெயரின் வகைகள்

தொல்காப்பியர் உயர்திணைப் பெயரின் வகைகளாக, "நிலப்பெயர், குடிப்பெயர், குழுவின் பெயர், வினைப்பெயர், உடைப்பெயர், பண்புகொள்பெயர், பல்லோர் குறித்த முறை நிலைப் பெயர், பல்லோர் குறித்த சினை நிலைப்பெயர், பல்லோர் குறித்த திணை நிலைப்பெயர், கூடிவரு வழக்கின் ஆடியற்பெயர், இன்றிவரென்னும் எண்ணியற் பெயர் எனப் பதினொரு வகைப் பெயர்களைக் குறிப்பிட்டுள்ளார்"[11]. இதற்குச் சேனாவரையர் நிலப்பெயர் முதலாகச் சொல்லப்பட்டனவும் மேலன போல பாலறிவந்த உயர்திணைப் பெயராம். நிலப்பெயர் - அருவாளன், குடிப்பெயர் - சேரமான், குழுப்பெயர் - அவையத்தார், வினை - வருவார், தச்சன், பண்பு - கரியான், செய்யான், பல்லோர் குறித்த முறை, சினை, திணை நிலைப்பெயர் - தந்தையார், தாயார், பெருங்காலர், பார்ப்பார், அரசர், ஆடியற்பெயர் - பட்டிபுத்திரர், கங்கை மாத்திரர், எண்ணியற்பெயர் - ஒருவர், இருவர், முப்பத்து மூவர் என்பன"[12] என விளக்கியுள்ளார்.

## ஆஃறிணைப் பெயர்கள்

தொல்காப்பியர் "அது, இது, உது என வரும் பெயரும், அவை முதலாகிய ஆய்தப் பெயரும், அவை, இவை, உவை என வரும் பெயரும், அவை முதலாகிய வகரப் பெயரும், யாது, யா, யாவை என்னும் பெயரோடு பதினைந்தும், பல்ல, பல, சில, உள்ள, இல்ல, வினைப்பெயர்க்கிளவி, பண்புகொள் பெயர், எண்ணுக் குறிப்பெயர், ஒப்பினாகிய பெயர் ஆகிய ஒன்பதும் அ.்.றிணைப் பெயர் எனக் குறிப்பிடுவர்"[13].

## கள் விகுதி

தொல்காப்பியர் அ.்.றிணைப் பெயர்களுக்குக் 'கள்' என்னும் விகுதி பொருந்தி வரும் என்பர். இதனை விளக்க வந்த சேனாவரையர் "அ.்.றிணை இயற்பெயராவன ஆ, நாய், குதிரை, கழுதை, தெங்கு, பலா, மலை, கடல் என்னுந் தொடக்கத்துச் சாதிப்பெயர், ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாய் நிற்றலின் இயற்பெயரென்றார். இவை கள்ளென்னு மீற்றவா்ய ஆக்கள், குதிரைகள் என நின்றவழிப் பன்மை விளக்கலின் பலவறி சொல்லாயினவாறு"[14] என்பர்.

## விரவுப் பெயர்கள்

விரவுப் பெயர்களைப் பற்றித் தொல்காப்பியர் "இருதிணைக்கு ஒத்த உரிமையுடையவாதலின் இப்பெயர்கள் உயர்திணைச் சென்றவழி உயர்திணைப் பெயராகவும் அ.்.றிணைச் சென்றவழி அ.்.றிணைப் பெயராகவும் வேறுபடும். தத்தம் மரபின் வினையொடு பால் விளங்கம் எனக் குறிப்பிடுவர்."[15] இதற்குச் சேனாவரையர் "சாத்தன் வந்தான், சாத்தன் வந்தது, முடவன் வந்தான், முடவன் வந்தது என வந்தவாறு பழந்தமிழர் ஆவையும் எருதையும் அவற்றின் பயன்பாடும் உழைப்பும் பற்றி, அருமையாய்ப் பேணி அவற்றுக்குச் சாத்தி, சாத்தன் என்னும் மக்கட் பெயரையே இட்டு அழைத்து வந்திருக்கின்றனர். முடவன் என்பது முட எருதையும் முடத்தி என்பது முட ஆவையும் குறிக்கும்"[16] என்பர்.

## இளமைப் பெயர்கள்

தொல்காப்பியர் மரபியலில் அ.்.றிணை இளமைப் பெயர்களை,

**"மாற்றருஞ் சிறப்பின் மரபியல் கிளப்பிற்**
**பார்ப்பும் பறழும் குட்டியும் குருளையும்**
**கன்றும் பிள்ளையும் மகவும் மறியுமென்**
**றொன்பதும் குழுவியொ டிளமைப் பெயரே"**[17]

எனப் பார்ப்பு முதலாக குழவியீறாகச் சொல்லப்பட்ட ஒன்பதும் இளமைப்பெயர் என வரையறை செய்துள்ளார். இதற்குப் பேராசிரியர் "மாற்றருஞ்சிறப்பிற்றாகிய மரபிலக்கணங்கூறின்: பார்ப்பும் பறழும் குட்டியும் குருளையும் கன்றும் பிள்ளையும் மகவும் மறியும் என்று ஒன்பதும் குழவியொடு இளமைப்பெயர்.

மேலன எட்டுங் குழவியுமென இளமைப் பெயர் ஒன்பதாயின. குழவியொடொன்ப தென்னாது 'ஒன்பதுங் குழவியோ' டென மயங்கக் கூறியதனாற் போத்தென்பதும் இளமைப் பெயரெனவும் பிறவும் வருவன உளவாயினுங் கொள்ளப்படும்"[18] என்பர்.

## ஆண்பாற் பெயர்கள்

இளமைப் பெயர்களைச் சுட்டிய தொல்காப்பியர், ஆண்பால் பெயர்களாக "ஏறு, ஏற்றை, ஒருத்தல், களிறு, சே, சேவல், இரலை, கலை, மோத்தை, தகர், உதள், அப்பர், போத்து, கண்டி, கடுவன் போன்ற பதினைந்தைக் குறிப்பிடுவர்."[19] இதனை விளக்கும் பேராசிரியர், பிறவும் என்றதனால் "ஆண், விடை, கிடாய் என வருவன போல்வனவும் ஆண்மைப் பெயராகக் கொள்ளப்படும். இச்சூத்திரத்திற் கூறப்பட்ட போத்து என்பது இளமை குறித்த மரபுப் பெயராக வழங்கப்பெறினும் ஆண்பாற்குச் சிறந்து வருமாறு போன்று இளமைக்குச் சிறந்து வராது என்பர்."[20]

## பெண்பாற் பெயர்கள்

தொல்காப்பியர்,

**"பேடையும் பெடையும் பெட்டையும் பெண்ணும்**
**மூடும் நாகும் கடமையும் அளகும்**
**மந்தியும் பாட்டியும் பிணையும் பிணவும்**
**அந்தஞ் சான்ற பிடியொடு பெண்ணே"[21]** **(தொல்.1502)**

எனப் பெண்பாற் பெயர்களாக பேடை, பெடை, பெட்டை, பெண், மூடு, நாகு, கடமை, அளகு, மந்தி, பாட்டி, பிணை, பிணவு, பிடி என்ற பதின்மூன்றையும் மரபுப் பெயர்களாகச் சுட்டியுள்ளார்.

## பிற இலக்கணங்களில் பெயர்

நன்னூலார் பெயரின் பொது இலக்கணத்தைக் குறிப்பிடும் பொழுது "இடுகுறியுங் காரணக் குறியும் மரபினையும் ஆக்கப் பாட்டினையும் தொடர்ந்து, வினையாலணையும் காரணக் குறியென்றுங் காலம் காட்ட அல்லாதன காலம் காட்டாதனவாகி எட்டு வேற்றுமையுஞ் சார்தற்கு இடமாகிய, இருதிணையிலும்

ஐம்பாலிலும் மூவிடத்திலும் ஒன்றனை ஏற்பனவும் பலவற்றினை ஏற்பனவும் ஆகிவருவன பெயர்களாம்."[22] என்கிறார்.

**"பெயர் எனப் படுபவை தெரியுங்காலை**
**இடுகுறி காரண மரபோடு ஆக்கம்**
**தொடர்ந்து தொழில் அலகாலம் தோற்றா**
**வேற்றுமைக்கு இடனாய்த் திணைபால் இடத்துஒன்று**
**ஏற்பவும் பொதுவும் ஆகிப் பாற்படப்**
**பொருள்புலப் படுப்பன என்மனார் புலவர்"[23] (இல.விள.பெயரி.176)**

என்பது சூத்திரம். பெயர் பற்றி நேமிநாதம், "பெயர்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் என்னும் நான்கினையும் இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்னும் நான்கனோடும் உறழப் பதினாறாம் . . . இவற்றுள் பெயர்சொல் உயர்திணைப்பெயர், அ∴றிணைப்பெயர், விரவுப்பெயர் என மூன்று கூறலாம்."[24] எனக் குறிப்பிடுகின்றது. "முத்துவீரியம்"[25] தொல்காப்பியரின் பெயர் பற்றிய கருத்தை வழி மொழிந்துள்ளது.

## உயர்திணை ஆண்பாற்பெயர்

நன்னூலார் உயர்திணை ஆண்பாற் பெயர்களை "மேலே பெயர் என்றவற்றுள் பலபொருட் பெயர்களும், இடப்பெயர்களும், காலப்பெயர்களும், சினைப்பெயர்களும், கதிகளும், பலகுணப் பெயர்களும், தொழிற்பெயர்களும், சுட்டெழுத்துக்களும் மூன்று முதல் வினாவெழுத்துக்களும், பிற, மற்று என்ற இடைச்சொற்களை அடியாகக் கொண்டு பிறந்த னகர மெய்யீற்றுப் பெயர்களும், நம்பி, ஆடுஉ, விடலை, கோ, வேள், குரிசில், தோன்றல், இவை ஏழு பெயர்களும் இவை போன்ற பிறவும் உயர்திணைப் பெயர்களாம் என்றுரைப்பர்"[26] இதற்குக் காண்டிகையுரையார். "பொருளால் வருபெயர்கள், சங்கத்தான், பொன்னன் இடத்தால் - வெற்பன், மறவன், சினையால் - திணிதோளான், சுரிகுழலன், குணத்தால் - அறிஞன், பெரியன், தொழிலால் - ஓதுவான், ஈவான், இடைச்சொல்லால் - அவன், இவன், உவன், நம்பி முதலிய ஏழு பெயர்களும் சூத்திரத்திற் காட்டப்பட்டன"[27] என்பர். "இக்கருத்தையே இலக்கண விளக்கம்"[28] எடுத்துரைக்கின்றது.

நேமிநாதம் உயர்திணைப் பெயர்களை,

**"சுட்டே வினாவொப்பே பண்பே தொகுனளர**
**ஒட்டுப்பேர் எண்ணியற்பேர் ஒண்ணிலப் பேர்இட்டிடையாய்**
**கூடியற்பேர் காலங் குலந்தொழிலின் பேர் மகடூஉ**
**ஆடூஉ உயர்திணைப் பேர் ஆம்"[29] (நேமி.சொல்.55)**

எனக் குறிப்பிடும். சுட்டுப் பெயர்களும், வினாப் பெயர்களும், உவமைப் பெயர்களும், பண்பின் பெயர்களும் என்று இச்சொல்லப்பட்டன. ள, ர ஈறாகிய பெயர்களும், எண்ணியற் பெயர்களும் நிலப்பெயர்களும், கூடியற்பெயர்களும், காலப்பெயர்களும், குலப்பெயர்களும், தொழிற் பெயர்களும், ஆடூஉ, மகடூஉ ஆகிய பெயர்கள் அனைத்தும் உயர்திணைப் பெயர்களாகும். மேலும் "பல்லோரைக் குறித்துவரும் முறைப்பெயரும், சினைப்பெயரும் நம்மூர்ந்து வரும் இகர, ஐகார ஈற்றுப் பெயரும், இகர ஈற்றுச் சாதிப்பெண் பெயரும், மாந்தர், மக்கள் என்னும் பெயரும், தன்மைப் பெயரும்"[30] உயர்திணைப் பெயரில் அடங்கும்.

## உயர்திணைப் பெண்பாற் பெயர்

உயர்திணைப் பெண்பாற் பெயர்களை நன்னூலார்

**"கிளைமுத லாகக் கிளந்த பொருள்களுள்**
**ளவ்வொற் றிகரக் கேற்ற வீற்றவும்**
**தோழி செவிலி மகடூஉ நங்கை**
**தையலோ டின்னன பெண்பாற் பெயரே"[31] (நன்.பெயரி.277)**

எனக் குறிப்பிடுவர்.

"கிளை முதலாகச் சொல்லப்பட்ட பொருள்களுள்ளும், இடைச் சொற்களுள்ளும், ஒன்றினடியாகப் பிறந்த னகர மெய்யும் இகர வுயிரும் பொருந்துதற்குத் தகுந்த, அவ்விரண்டு ஈற்றுப் பெயர்களும் தோழி, செவிலி, மகடூஉ, நங்கை, தையல் என்னும் இவ்வைந்து பெயர்களும் இவை போல்வன பிறவும் உயர்திணைப் பெண்பாற் பெயர்கள் என்பது நன்னூலார் கருத்தாகும். மேலும் இன்னன என்றதனால் பேதை, பெதும்பை, இகுளை, மடந்தை, மாது, பாங்கி, பெண்டு, பெண்டாட்டி என உயர்திணைப் பெண்பால் குறித்து வருவனவெல்லாங் கொள்க என விளக்க முரைப்பர்"[32] கோபால

கிருஷ்ணமாச்சாரியார். பவந்தியாரின் பெயர்க் கோட்பாட்டைச் சார்ந்தே "இலக்கண விளக்கமும் பெயர்களை விளக்குகிறது."[33]

## முத்துவீரியம்

தொல்காப்பியர் சுட்டிய பெயர்களில் ஆடியல் என்னும் பெயர் தவிர பிற பெயர்களையும், "கோ, வேள், விடலை, குருசில், தோன்றல், நம்பி, தையல், நங்கை, செவிலி, தோழி போன்ற பெயர்களையும் முத்துவீரியம்"[34] கூடுதலாக உரைத்துள்ளது.

## உயர்திணைப் பலர்பாற் பெயர்

நன்னூலார்,

**"கிளந்த கிளைமுத லுற்றாவ் வீற்றவும்**
**உள்ளெ னீற்றி னேற்பவும் பிறவும்**
**பல்லோர் பெயரின் பகுதி யாகும்"[35] (நன்.பெயரி.278)**

என முன்னே சொல்லப்பட்ட பெயர்களை அடியாகக் கொண்டு பிறந்த ரகர மெய்யீற்றுப் பெயர்களும், 'கள்' என்னும் விகுதியை ஈறாகவுடைய பெயர்களுள் பொருந்திவருவனவும் பிறவும் உயர்திணைப் பலர்பால் பெயர்களாகும் என்றுரைப்பர். இதே கருத்தை ஒட்டி இலக்கண விளக்கம் "தமர் - நமர் - நுமர் - எமர் - ஒருவர் - இருவர் - முப்பத்துமூவர் எனவும் அடிகள் - முனிகள் - மனுக்கள் - கோக்கள் - வேள்கள் - விடலைகள் - வில்லிகள் - வாளிகள் - கணிகள் - மடந்தைகள் - பரத்தைகள் - உழத்திகள் - மறத்திகள் என்றாற் போல்வன, 'பிற' என்றதனானே மாந்தர் - மக்கள் - மகார் - சிறார் - எல்லாரும் - தந்தையார் - தாயார் - பெருங்காலர் - பெருந்தோளர் - பட்டிபுத்திரர் - கங்கை மாத்திரர் - பெண்டிர் - பெண்டுகள் - மடந்தையர் - வேளிர் என்றாற் போல்வன பிறவும் கொள்க"[36] எனக் குறிப்பிட்டுள்ளது.

## அகராதிகளில் பெயர்

அகராதிகளில் பெயர் பற்றிய பல்வேறு சொற்கள் இடம்பெற்றுள்ளன. பெயர் என்பதற்கு நர்மதாவின் தமிழ் அகராதி "நாமம், கீர்த்தி, பெயர்ச்சொல்"[37] என்கிறது. பெயர் என்பது "ஒருவரிடமிருந்து மற்றொருவரை அல்லது ஒன்றிலிருந்து மற்றொன்றை வேறுபடுத்தித் தெரிந்துகொள்ளவும் பேச்சில்

குறிப்பிடவும் பயன்படுத்தும் அடையாளச் சொல். புகழ், பெருமை, குறிப்பிடும் அளவில் மட்டுமே உண்மை, வாக்கியத்தில் எழுவாயாக வருவதும் வேற்றுமை உருபு முதலியவை ஏற்பதுமான சொல்"[38] என்கிறது க்ரியாவின் தற்காலத் தமிழ்ப்பெயரகராதி. "இடுகுறியும், காரணமும், மரபும், ஆக்கமும் தொடர்ந்து வினயாலணையும் பெயரென்னுங் காலங்காட்ட அல்லவை காலங்காட்டாவாய் எட்டு வேற்றுமையுஞ் சார்தற்கிடமாய், திணை பாலிடங்களில் ஒன்றினை ஏற்பனவும், பலவற்றினையேற்பனவுமாய் வருவன, அப்பெயர் பொருட்பெயர், இடப்பெயர், காலப்பெயர், சினைப்பெயர், குணப்பெயர், தொழிற்பெயர், சுட்டுப்பெயர், வினாப்பெயர், முதற்பெயர், முறைப்பெயர், தன்மைப்பெயர், முன்னிலைப்பெயர், எண்ணுப்பெயர் எனப் பல"[39] எனச் சுட்டுகிறது.

அபிதான சிந்தாமணி பெயர் பற்றி "கீர்த்தி, நாமம், பெயரென்னேவல் பெயர்ச்சொல் என இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் பெயரகராதியும்"[40] "தமிழ் மொழியகராதியும்"[41] விளக்கம் தருகின்றன. பெயர் "காமம், புகழ், பெருமை, பொருள், சபதம், பெயர்ச்சொல் முதல் வேற்றுமை"[42] எனச் சுட்டுகிறது செந்தமிழ் அகராதி. பெயர் பற்றித் தமிழ் ஆங்கில அகராதி "நாமம், பேர், கீர்த்தி, உண்மையில்லாமை, பெயர்ச்சொல்"[43] என்றும், "நாமம் பெயரென்னேவல், பெருமை, பெயர்ச்சொல்"[44] என்றும் விளக்கம் தருகிறது. இதே கருத்தைக் குறிப்பிட்டுள்ளது தற்காலத் தமிழ்ச் சொல்லகராதி"[45] தமிழ் லெக்சிகன் "நாமம், புகழ், பெருமை, ஆள், வடிவு, பொருள், பொருளிலக்கணங்கூறு நூல், வியாஜம், வஞ்சினம், பெயர்ச்சொல், முதல் வேற்றுமை"[46] என விளக்கம் தந்துள்ளது.

## இலக்கியத்தில் பெயர்கள்

இலக்கியம் படைத்த ஆசிரியர்களும், திறனாய்வு செய்த திறனாய்வாளர்களும் பெயர் பற்றிப் பல்வேறு விளக்கங்கள் தந்துள்ளனர். "ஒரு பொருளை, ஒரு மனிதனை, ஓரிடத்தைக் குறிக்க எழுந்த குறியீடே பெயர்கள் என்பர்"[47] ஆர் ஆளவந்தார். "ஒரு பொருளை மற்றொரு பொருளில் இருந்து வேறுபடுத்திக்காட்ட வழங்கப்பட்ட குறியீடுகள் பெயர்கள் எனலாம். எல்லாப் பொருட்களும் ஒரே தன்மையல்ல. ஒவ்வொரு பொருளும் ஒவ்வொரு தன்மையதாய், இயல்பினதாய் இருத்தல் இயற்கை. பொருட்களின் இந்த வேறுபட்ட தன்மைகளுக்கு ஏற்ப அவைகளுக்குப் பெயர்களும் வழங்கப்பட, இயற்பெயர்கள் எல்லாமே காரணத்துடன் வழங்கப்பட்டன அல்ல. ஒரு சில பெயர்கள் எந்த விதமான காரணமும் இன்றி இடுகுறியாகவும், ஒரு சில

பெயர்கள் ஏதோ ஒரு காரணங்கருதியும் வழங்கப்பட்டு வருகின்றன”[48] என விளக்கம் தருவர் மெய். சந்திரசேகரன். “ஒரு பொருளை மற்றொரு பொருளிலிருந்து வேறுபடுத்திக் காட்டப் பயன்படுத்தப்பட்ட குறியீடுகள் பெயர்கள் எனப்படும்”[49] பெயர் ஒரு சொல்லின் வடிவம், அதற்குரிய இயற்பொருளைத் தராமல் வேறுபொருள்தரின். அச்சொல்லின் இயல்பான வடிவை மட்டும் கூறிப்பொருள் அறிய உதவும் என்பர்.”[50] தா.வே.வீராச்சாமி. “பெயர் ஒரு பொருளைச் சுட்டுகிறது. அதனைப் பிறிதொரு பொருளினின்றும் வேறுபடுத்துகிறது.”[51] எனக் குறிப்பிடுவர் கு. பகவதி. “ஒருவரை மற்றவரிடமிருந்து வேறுபடுத்திக் காட்டக் குறியீடாகப் பயன்பட்ட பெயர், காலப்போக்கில் சமுதாயத்தின் பழக்கவழக்கங்கள், நம்பிக்கை, சடங்கு அடிப்படையில் வரலாயிற்று. பெயர்கள் பழமை எச்சங்களாக நின்று மனித வரலாற்றையும் பண்பாட்டையும் பிரதிபலித்து நிற்கின்றன”[52] என்பர் சு.சக்திவேல்.

## பெயரிடும் முறை

“ஒரு பொருளுக்குப் பெயரிடுகின்ற பொழுது அதன் வண்ணம், குணத் தன்மை, செயல் ஆகியவற்றைக் கொண்டு பெயரிடுதல் மரபாகும்” என்பர் மு.சண்முகம்பிள்ளை.

## பெயர் வைப்பு முறை

பெயரிடுபவர்களின் விருப்பப்படி, அவர்களுக்குப் பிடித்தமானவற்றைப் பெயராக இடுவர். இப்பெயர் ஏதாவது ஒன்றை அடையாளப்படுத்தும் வகையில் அமைந்திருக்கும். இதனைக் குறியீடு என்பர். குறியீடு=குறி+இடுதல்=குறியிடுதல், குறியீடு, அதாவது, ஏதோ ஒன்றைக் குறிப்பிட்டுக் (அடையாளமிட்டுக்) காட்டும் வகையில் இடப்படுவது குறியீட்டுப் பெயர்களர்.

இவை “இயற்கை, கடவுள், முன்னோர்கள், இறந்த அரசன், வீரன், ஞானி, சமயவாதி, உடல் உறுப்பு, தோற்றம், பண்பு, மந்திரம், ஆடை அணிகலன்கள், அரசியல்வாதிகள், விளையாட்டு வீராகள், திரைப்பட நச்சத்திரங்கள், நம்பிக்கை முதலியவற்றின் அடிப்படையில் வைக்கப்படலாம் என்பர்.”[54] சு.சக்திவேல். இவை தவிர நாடு, மொழி, இனம், மதம், மலை, நிலவு, சூரியன், பூமி, அறிஞர்கள் போன்றவற்றின் அடிப்படையிலும் பெயர்கள் இடப்படுகின்றன.

## புதுக்கோட்டை மாவட்டத்தில் பெயர்கள்

'புதுக்கோட்டை மாவட்ட மக்கட் பெயர்கள் பல்வேறு வகைகளில் வெளிப்படுகின்றன. அவை பஞ்சபூதங்கள். அவற்றில் வாழும் உயிரினங்கள் தொடர்பான பெயர்கள், தெய்வங்கள், சமயம், இனம், தொழில், அரசாண்ட மன்னர்கள், தேசத்தலைவர்கள், பெயர்களின் அமைப்பு முறை ஆகியவற்றின் அடிப்படையில் காலந்தோறும் இவ்வாறான பெயர்களை வழங்கிவருகின்றனர். இப்பெயர்கள் பின்வரும் இயல்களில் விளக்கப்பெற்றுள்ளன.

## தொகுப்புரை

- இறைவனால் படைக்கப்பட்ட உயிர்களேயன்றி மனிதனால் படைக்கப்பட்ட பொருளுக்கும் பெயரிடுவது நடைமுறை வழக்கமாகும். பெயரிடுதல், மனிதன் இனக் குழுக்களாகச் சேந்து வாழத் தொடங்கியதிலிருந்து தோன்றிவிட்டது. குழுக்களுக்கு இடப்பட்ட அடையாளங்கள், பின்பு தனித்தனி உயிர்களைப் பிரித்தறிய இடப்பட்டது. மனிதனுக்கு மட்டுமே தனித்தனிப் பெயர்கள் இடப்படுகின்றன. விலங்கு, பறவை போன்ற பிற உயிர்களுக்குக் குழுப்பெயர்களே பொதுவாக வழங்கப்பட்டு வருகின்றன.

- தொல்காப்பியர் பெயரியல் என்ற தனி இயலை வகுத்து, அதில் உயர்திணைப் பெயர்கள், அஃறிணைப் பெயர்கள், விரவுப்பெயர்கள் என்ற மூவகைப் பெயர்களைக் குறித்துள்ளார். உயர்திணைப் பெயர்கள் அவன் என்பது முதலாக யாவர் என்பது ஈறாகப் பதினைந்தாகும். எல்லாரும், எல்லீரும், பெண்மகன் என வரும் மூன்று பெயர்களும் உயர்திணைப் பெயர்களில் அடங்கும். இவை தவிர, நிலப்பெயர் முதலாக எண்ணியற் பெயர் ஈறாக பதினொரு பெயர்களும் உயர்திணைப் பெயர்களாகும். அது முதலாக ஒப்பினாகிய பெயர் ஈறாக உள்ள இருபத்து நான்கும் அஃறிணைப் பெயர்களாகும். அவை கள் விகுதி பெற்று வரும் இயல்பினவாகும். விரவுப் பெயர்கள் இருதிணைக்கும் உரிமையுடையதாய் விளங்கும்.

- பெயரியலில் மூவகைப் பெயர்களை விளக்கிய தொல்காப்பியர், மரபியலில் அஃறிணை உயிர்களின் இளமைப்பெயர், ஆண்பாற், பெண்பாற் பெயர்களைச் சுட்டிக் காட்டியுள்ளார்.

❖ நன்னூல், இலக்கண விளக்கம் பெயரின் பொது இலக்கணத்தைக் குறிப்பிடும்பொழுது, இடுகுறி, காரணம், மரபு, ஆக்கம் ஆகியவற்றின் அடிப்படையில் பெயர்கள் அமையும் முறையைச் சுட்டுகின்றன. மேலும் வினையால் வருவன, காலத்தை விளக்க, பிற காலத்தை விளக்காதனவாய், எட்டு வேற்றுமையுஞ் சார்தற்கு இடமாகி, திணை, பால், இடத்து ஒன்றை ஏற்பதும், பொதுவமாகி வருவன பெயர்களாம் என விளக்கம் தந்துள்ளன. நேமிநாதமும் முத்துவீரியமும் தொல்காப்பியரின் பெயர் பற்றிய கருத்தை வழி மொழிந்துள்ளன.

❖ தொல்காப்பியர் மூவகை உயர்திணைப் பெயர்களையும் அவற்றின் வகைகளையும் சுட்டியுள்ளார். தொல்காப்பியர் சுட்டாத உயர்திணைப் பெயர்களாகத் தேசம், ஊர், ஆகாயம், உள்ளிடம், வெளியிடம் முதலிய இடப்பெயர்களும், வருடம், பருவம், மாதம், நட்சத்திரம் முதலிய காலப்பொயர்களும், கதிப்பெயர்களும், பிற, மற்று என்பதுமாகிய இடைச் சொற்களை அடியாகக் கொண்டு பிறந்த னகர மெய்யீற்றுப் பெயர்களும் எனப் பிறவற்றை நன்னூலும், இலக்கண விளக்கமும் குறிப்பிட்டுள்ளன. வில்லி, மீளி, வழுதி, கிள்ளி, சென்னி, செட்டி, சக்கிரி, ஏந்தல், செம்மல், சேய், தம்பி, ஏனாதி, காவிதி, குடுமி, வள்ளல் அண்ணல் போன்ற உயர்திணை ஆண்பால் பெயர்களையும், பேதை, பெதும்மை, இருளை, மடந்தை, மாது, பாங்கி, பெண்டு, பெண்டாட்டி என உயர்திணைப் பெண்பாற் பெயர்களும், உயர்திணைப் பெயர்களும் அடக்கியுள்ளன.

❖ தொல்காப்பியர் ‘கள்’ விகுதி அ∴றிணைக்கு மட்டும் உரியது என்பர். ஆனால் பிற இலக்கணங்களில் ‘கள்’ விகுதி பலர்பால் உயர்திணைப் பெயராகச் சுட்டப்பட்டுள்ளது. முத்துவீரியம் தொல்காப்பியர் சுட்டிய ஆடியற் பெயர் தவிர பிறவற்றைக் குறிப்பிட்டுள்ளது.

❖ அகராதிகள் பெயர் என்பதற்கு நாமம், கீர்த்தி, பெயர்ச்சொல் அடையாளம், புகழ், பெருமை, பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில், சுட்டு, வினா, முதல்முறை, தன்மை, முன்னிலை, எண்ணுப்பெயர், பேர், நாமம் என்னும் பல பொருளைச் சுட்டுகின்றன.

❖ இலக்கிய ஆசிரியர்களும், திறனாய்வாளர்களும் பெயர் என்பது ஒன்றினை வேறுபடுத்தவும், அடையாளமிட்டுக் காட்டவும், ஒன்றினைக்

குறிக்கவும் எழுந்த குறியீடுகளே என விளக்கம் தந்துள்ளனர். மக்கள், பெயரிடும் பொழுது, அவர்களுக்குப் பிடித்தமானவற்றைப் பெயராக இடுவர். அ∴து கடவுள் முதல் நம்பிக்கை வரை அனைத்தையும் கொண்டு அமையும் என்பதனைக் காணமுடிகின்றது.

## சான்றெண் விளக்கம்

1. து. இரவிக்குமார், சங்கப் பாடல்களில் பெயர்க் குறியீடுகள், ப. 8
2. தமிழண்ணல், தொல்காப்பியம் (மூலமும் உரையும்), ப. 191
3. இளம்பூரணர் (உரை), தொல்காப்பியம் (சொல்), ப. 146
4. சேனாவரையர் (உரை), தொல்காப்பியயம், ப. 116
5. தெய்வச்சிலையர் (உரை), தொல்காப்பியம், ப. 110
6. ஆ.சிவலிங்கனார்(ப.ஆ.), தொல்காப்பியம், ப. 33
7. தமிழண்ணல், தொல்காப்பியம் (மூலமும் உரையும்), ப. 192
8. இளம்பூரணர் (உரை), தொல்காப்பியம், ப. 147
9. மேலது, ப. 148
10. சேனாவரையர் (உரை), தொல்காப்பியம், ப. 119
11. தமிழண்ணல், தொல்காப்பியம் மூலமும் உரையும், ப. 50
12. சேனாவரையர், தொல்காப்பியம், ப. 119
13. தமிழண்ணல், தொல்காப்பியம் (மூலமும் உயைும்), ப. 194
14. சேனாவரையர், தொல்காப்பியம். ப. 123
15. தமிழண்ணல், தொல்காப்பியம் (மூலமும் உரையும்), ப. 196
16. சேனாவரையர், தொல்காப்பியம். ப. 124
17. தமிழண்ணல், தொல்காப்பியம் (மூலமும் உரையும்), ப. 519
18. வெள்ளைவாரணன், தொல்காப்பியம். ப. 3
19. தமிழண்ணல், தொல்காப்பியம் (மூலமும் உரையும்), ப. 519
20. வெள்ளைவாரணன், தொல்காப்பியம். ப. 7
21. தமிழண்ணல், தொல்காப்பியம் (மூலமும் உரையும்), ப. 519
22. மோசசுபொன்னையா, நன்னூல் ஆராய்ச்சி தெளிவுரை, ப.33

23. தி. வே. கோபாலையர், இலக்கண விளக்கம், ப. 82

24. கா. ர. கோவிந்தராஜ முதலியார், நேமிநாதம், ப. 112

25. கு.சுந்தரமூர்த்தி(ப.ஆ.), முத்துவீரியம், ப. 125

26. மோசசுபொன்னையா, நன்னூல் ஆராய்ச்சி தெளிவுரை, ப.39

27. வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார், நன்னூல், பா. 276

28. தி. வே. கோபாலையர், இலக்கண விளக்கம், ப. 77

29. கா. ர. கோவிந்தராஜ முதலியார், நேமிநாதம், ப. 84

30. மேலது, ப. 85

31. மோசசுபொன்னையா, நன்னூல் ஆராய்ச்சி தெளிவுரை, ப.40

32. வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார், நன்னூல், பா. 241

33. தி. வே. கோபாலையர், இலக்கண விளக்கம், ப. 81

34. புத்தமித்திரர், முத்துவீரியம், பக். 130, 130, 131, 131, 131

35. மோசசுபொன்னையா, நன்னூல் ஆராய்ச்சி தெளிவுரை, ப.40

36. தி. வே. கோபாலையர்(ப.ஆ.), இலக்கண விளக்கம், ப. 84

37. நர்மதா, தமிழ் அகராதி, ப. 691

38. த.ரா. சுப்பிரமணியன், கிரியாவின் தற்காலத் தமிழ்ப் பெயரகராதி, ப. 764

39. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப. 1194

40. ப. இராமநாதன், இருபதாம் நூற்றாண்டு தமிழ்ப் பெயரகராதி, ப. 140

41. கதிரை வேற்பிள்ளை, தமிழ் மொழியகராதி, ப. 1068

42. ந. சி. கந்தையா, செந்தமிழ் அகராதி, ப. 518

43. தமிழ் ஆங்கில அகராதி, ப. 811

44. மேலது, ப. 545

45. ச. இராசேந்திரன், தற்காலத் தமிழ்ச் சொற்களஞ்சியம், ப. 307

46. தமிழ் லெக்சிகன், ப. 2862

47. ஆர். ஆளவந்தார், கல்வெட்டில் ஊர்ப்பெயர்கள், ப. 1

48. மெய். சந்திரசேகரன், தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள், ப. 1

49. வெ. கேசவராஜ், 17வது கருத்தரங்க ஆய்வுக்கோவை, ப. 213

50. தா. வே. வீராச்சாமி, கருத்தரங்க ஆய்வுக்கோவை, ப. 213

51. கு. பகவதி. இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், ப. 1

52. சு. சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப. 314

53. மு. சண்முகம் பிள்ளை, நிகண்டு சொற்பொழிவுக் கோவை (தெய்வப்பெயர்), ப. 697

54. சு. சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப. 304

# இயல்-3
# மக்கட் பெயர்களின் அமைப்பு

அமைப்பியல் தற்கால ஆய்வு முறையில் அனைவராலும் போற்றப்படும் அணுகுமுறையாக விளங்குகிறது. இது சமுதாய நடத்தை, பண்பாடு, இயற்பியல் இவற்றிற்கிடையில் காணப்படும் அமைப்புகள், கட்டமைப்புக்களைப் பற்றி (pattam) அறிகின்ற துறையாக, அமைந்துள்ளது. இ∴து உயிரியல், மண்ணியல், மானுடவியல், மொழியியல் இலக்கியத் திறனாய்வியல் போன்ற முற்றிலும் வேறுபட்ட துறைகளின் ஆய்வுக்குப் பயன்படும் அறிவியல் அணுகுமுறையாகப் பயன்பட்டு வருகிறது. (Lexicon universal Encyclopaedia, 1984:30) ப.150, கா.பாஸ்கரன்.

தற்காலத்தில் நாட்டுப்புறவியல் துறையில் அமைப்பியல் ஆய்வு முக்கியப் பங்கு வகிக்கின்றது. கதைகள், தாலாட்டு, ஒப்பாரி, விடுகதை, பழமொழி போன்றவை அமைப்பியல் முறையில் ஆய்வு செய்யப்படுகின்றன.

பொருள் நிறைந்த மொழிக்கூறுகள் ஒன்று சேர்ந்து ஒரு மொழி வடிவத்தை உண்டாக்குவது ‘அமைப்பு’ எனப்படும். அமைப்புக்களை மொழியின் முழுவடிவமாகவும், தனிக் கூறுகளாகவும் பகுத்தாராய்கின்றனர். ஒலியியல் (phonology), உருபனியல் (Morphology), தொடரியல் (syntax), பொருளியல் (ளநஅயவெைஉள) போன்ற நிலைகளில் ஆய்வு செய்துள்ளனர் என கா.பாஸ்கரன் தம் நூலில் குறிப்பிடுகிறார்.

### தொடர்நிலை

தொடரமைப்பை எழுவாய், பயனிலை, செயப்படுபொருள், வினைமுற்று எனப் பகுத்துக்காட்டல் தொடர் நிலையாகும்.

### உருபனியல் நிலை

இது சொற்பகுப்பாய்வாகும். பகுதி, விகுதி, சாரியை போன்ற கூறுகளை ஆராய்வது உருபனியல் நிலையாகும்.

## ஒலியனியல் நிலை

சொற்கள் ஒலியன்களால் ஆனவை. சொற்களின் அசைநிலையும் ஆய்வுக்கு உரியதே. ஒலியன்கள் ஒரு சொல்லின் பொருளை மாற்றும் ஆற்றல் உடையவை.

## பொருளியல் நிலை

சொற்கள் பகுசொற்களையும் பகாச்சொற்களையும் கொண்டு அமையும். அவன் புத்தகம் படித்தான் என்ற சொற்றொடரில் மூன்று சொற்கள் அமைந்துள்ளன. இம்மூன்று சொற்களுக்கிடையில் உள்ள உறவு தொடரியல் உறவு என்பதாகும். அவன் என்னும் சொல்லுக்குப் பதிலாக நான், நீ என்னும் சொற்களைப் பதிலீடு செய்யலாம். இவ்வுறவு அடுக்கியல் உறவு எனப்படும். (கா. பாஸ்கரன் ப.150)

ஒரு மொழியின் ஒலிகள், இலக்கணக் கூறுகள், சொற்கள் ஆகியவற்றின் அமைப்பை ஆய்வு செய்வதற்காக உருவாக்கப்பட்ட ஓர் அணுகுமுறை அமைப்பியல் அணுகுமுறையாகும். மொழியை விளக்க அதன் அமைப்பையே அடிப்படையாகக் கொள்ள வேண்டும் என்னும் அணுகுமுறையை உருவாக்கியவர் பெர்டினென்ட்டு டிசசூர் என்பவராவார். இவர்தம் ஆய்வில் மொழிப் புறவியல்பு (Extrinisic approach) மொழி அகவியல்பு (Intrinisic approach) என்றும் இரு அணுகுமுறைகளைக் கையாண்டார். (நடராஜபிள்ளை, பி.1986:4991, பாஸ்கரன், கா. ப. 151)

ஒலிகள் சேர்ந்து சொற்பொருளை உருவாக்கும் முறைகளை ஆராய்வதை மொழியியல் தன் நோக்கமாகக் கொண்டுள்ளது. அமைப்பியல் அணுகுமுறையில் மொழியமைப்பு சிறப்புத் தன்மை பெறுகிறது. மொழி விளக்கத்திற்கான செயல்முறைகள் அமைப்பியல் அணுகுமுறை என்பதாகும்.

அமைப்பியல், கருத்துக் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளது. இது பல வடிவங்களைப் பற்றி அறிந்து கொள்வதைவிட அவ்வடிவங்களுக்கு இடையிலான தொடர்புகளைப் பற்றி அறிவதிலேயே மிகுதியான கவனம் செலுத்துகிறது.

பெர்டினன்டு-டி-சசூரால் அறிமுகம் செய்யப்பட்ட அமைப்பியல் அணுகுமுறைக்கு ஓர் உருவம் கொடுத்து அதனை உலகறியச் செய்தவர் இலெவிஸ்ட்ராசு என்னும் மானுடவியலறிஞர் ஆவார். இவரால்

தோற்றுவிக்கப்பட்ட அமைப்பியல் மானுடவியலில் தனிப்பெரும் பிரிவாக அறிஞர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

அனைத்துச் சமுதாய நிகழ்ச்சிகளும் ஒரு குறிப்பிட்ட அளவு ஒழுங்கு முறையைக் கொண்டுள்ளன அல்லது வெளிப்படுத்துகின்றன. இத்தகு ஒழுங்கு முறையே அமைப்பு என்று குறிப்பிடும் இலெவிஸ்ட்ராசு இதனை விதிக்கு அடிப்படையாக அமையும் மனநிலை என்று கூறுகிறார்.

மொழியியல் மற்றும் மானுடவியலில் வழங்கப்படும் அமைப்பியல் பற்றிய கருத்துக்களால் பின்வரும் செய்திகள் புலனாகின்றன.

மொழியின் அமைப்பினை முழுவடிவமாகவும் தனித்தனிக் கூறுகளாகவும் பகுத்தாராய்கின்றனர். மொழியை விளக்குவதற்கு அதன் அமைப்புமுறையைப் பல வடிவங்களைப் பற்றி அறிந்து கொள்வதைவிட அவ்வடிவங்களுக்கு இடையிலான தொடர்புகளைப் பற்றி அறிவதிலேயே மிகுந்த கவனம் செலுத்துகிறது. மொழிப் புறவியல்பு, மொழி அகவியல்பு என்னும் இரு அணுகுமுறைகளில் மொழி அகவியல்பே மொழியமைப்பை விளக்க அடிப்படையானது என்பதை உணரமுடிகிறது.

அமைப்பியல் அணுகுமுறை மொழியின் பல்வேறு கூறுகள் அவற்றிற்கிடையே உள்ள தொடர்பினை அறிய உதவுவதோடு பல்வேறு கலை வடிவங்களின் இன்றியமையாத உறுப்புக்களுக்கிடையே உள்ள தொடர்பினை அறியவும் பயன்படுகிறது.

மேற்கூறிய அமைப்பியல் பற்றியச் செய்திகளை அடிப்படையாகக் கொண்டு ஆய்வுக்குரிய மக்கட் பெயர்கள் அமைப்பியல் ஆய்வில் உட்படுத்தப்படுகிறது.

மொழியைப் போன்றே மக்கட் பெயர்களும் பல அலகுகளால் ஆனவை. இவ்வலகுகளுக்கிடையே உள்ள உறவு பெயரின் மொத்த அமைப்பை முடிவு செய்கின்றது. ஒரு நாட்டில் பெயரிடுமுறையில் காணப்படும் பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள் முதலியவை மக்கட் பெயரின் அமைப்பை உருவாக்குகின்றன. அவை சாதி, மதம், மொழி, இயற்கை அமைப்பு போன்ற பல கூறுகளால் வேறுபடுகின்றன.

பொதுவாக மக்கட் பெயர்களை அவற்றின் அமைப்பு அடிப்படையில் ஆண்பாற் பெயர்கள், பெண்பாற் பெயர்கள், பொதுப்பெயர்கள் என மூவகையாகப் பாகுபாடு செய்யவர். பெயரமைப்பில் இயற்பெயர்களின் ஈற்றில்

காணப்படும் விகுதிகள் (Suffix) பால்வேறுபாட்டை உணர்த்துகின்றன. எனவே மக்கட் பெயர் அமைப்பில் விகுதிகளின் பயன்பாடு மிக இன்றியமையாதது என்பது தெளிவாகிறது. விகுதிகளற்ற பெயர்கள் இருபாலருக்கும் இயற்பெயராய் அமைவதுண்டு.

இவ்வியலில் மக்கட் பெயர்களின் அமைப்பு அவற்றில் இடம்பெற்றுள்ள சொற்களின் தன்மை அடிப்படையில் தனிப்பெயர் (Simple name), கூட்டுப் பெயர் (Compount name) என்ற நிலையில் இரு பிரிவாகப் பாகுபாடு செய்யப்பட்டு அவற்றிக்கிடையே உள்ள உறவு ஆய்வு செய்யப்படுகிறது. மக்கள் பெயர்கள் சிறியனவும் பெரியனவுமாகக் காணப்படுவதால் பெயரமைப்பு, அசைகள் (Syllables) அடிப்படையிலும் வரையறை செய்யப்படுகின்றன. பெயர்களில் பால்காட்டும் விகுதிகளின் பங்கினையும் ஆண்பாலைக் குறிக்கும் பிற ஈறுகளின் பயன்பாட்டையும் அமைப்பியல் நோக்கில் ஆய்வு செய்யப்படுகின்றன. இவ்வியலின் இறுதியில் பெயர் அமைப்புத் தொடர்பான பிற சிறப்புச் செய்திகளும் முடிவுகளும் சுட்டப்படுகின்றன.

மக்கட் பெயர்கள் ஊர்ப்பெயர்களைப் போலச் சொற்களோடு நெருங்கிய தொடர்புடையவை. சொல் தனித்தோ பிற சொற்களோடு இணைந்தோ மக்கட் பெயராய் உருப்பெறுகின்றன. பெயரமைப்பில் காணப்படும் சொற்களை அலகுகள் (Units) எனக் கொண்டால்; குறிப்பிட்ட சில அலகுகளின் தொகுதிகளாகப் பெயர்கள் விளங்குவதைக் காணமுடிகின்றன. இவ்வலகுகள் தனி எழுத்துக்களாகவோ, பெயரடைகளாகவோ, பண்புப் பெயர்களாகவோ அல்லது ஏனைய பிற பெயர்களாகவோ அமைந்து பெயரமைப்பை நிர்ணயம் செய்கின்றன. இடங்கள், ஆட்கள் போன்றவற்றின் பெயர்கள் பொதுநிலையில் பெயர்ச் சொற்களாக இருப்பினும் அவை மொழியின் மற்ற சொற்களிலிருந்து பல நிலைகளில் மாறுபட்டுச் சிறப்புப் பெயர்கள் என்ற நிலையில் சில சிறப்பியல்புகளோடு விளங்குகின்றன. மக்கட் பெயரின் பொதுவான அமைப்பை அப்பெயரில் இடம் பெற்றுள்ள சொற்களின் தன்மை அடிப்படையில் ‘தனிப்பெயர்’ எனவும் ‘கூட்டுப்பெயர்’ எனவும் இருபெரும் பிரிவுகளாகப் பாகுபாடு செய்யப்படுகின்றன. இச்சொற்களின் முறையான சேர்க்கையால் மக்கட்பெயர்கள் வடிவம் பெறுகின்றன. பெயரமைப்பும் பெயரிடும் முறைகளும் அவ்வக்கால மக்களின் எண்ணங்களைப் படம் பிடித்துக் காட்டுகின்றன.

## தனிப்பெயர்

ஒரு சொல் தனித்தோ, பால் விகுதி பெற்றோ, அல்லது முன்னொட்டாக அடைச்சொல் பெற்றோ மக்கட் பெயராய் அமையுமானால் அதனைத் தனிப்பெயர் எனலாம்.

**சான்றாக:** கருப்பையா, சுந்தரி

தனிப்பெயர்கள் அவற்றில் இடம்பெறும் சொற்களின் தன்மை அடிப்படையில் அவற்றை இரண்டு வகையாகப் பாகுபாடு செய்யப்படுகின்றன. அவை,

1. நுண்பொருட் பெயர்கள்
2. பருப்பொருட் பெயர்கள்

## நுண்பொருட் பெயர்கள்

நுண்பொருள் என்பதற்கு நுண், அணு, நுண்மை, நுட்பமான கருத்து என்று அகராதிகள் விளக்கம் தருகின்றன. நுட்பமான பொருளை உணர்த்தும் சொற்கள் தனித்தோ, பால்விகுதி பெற்றோ, அடைச்சொல் பெற்றோ மக்கட் பெயராய் அமையுமானால் அவற்றை நுண் பொருள் பெயர்கள் எனக் கூறமுடிகிறது.

**சான்றாக**: முருகன் - பெயர்

முருகு+அன் (படக்கை ஆண்பால் வினை முற்று விகுதி)

முருகவேல், வேல்முருகன் - அடைகள் அமைந்த பெயர்கள்

## பருப்பொருள் பெயர்கள்

பருப்பொருள் என்பதற்கு அகராதி 'நூலின் திரண்ட பொருள், பாட்டின் திரண்ட பொருள்' என விளக்கம் தருகிறது. இத்தகைய பொருள் உணர்த்தும் சொற்கள் தனித்தோ, பால் விகுதி பெற்றோ, அடைச்சொல் பெற்றோ மக்கட் பெயராய் அமையுமானால் அவற்றைப் பருப்பொருள் பெயர்கள் என அறியமுடிகின்றது.

**சான்றாக:** மணி-பெயர்

மணி+அன்=மணியன் (படர்க்கை ஆண் பால் வினைமுற்று விகுதி)

சத்திமணி, ஜோதிமணி, வீரமணி (அடைகள் அமைந்த பெயர்கள்)

தெய்வங்கள், ஊர்ப்பெயர்கள், விலங்குகள், பறவைகள், தாவரங்கள், உலோகங்கள் போன்றவற்றின் பெயர்களும் சாதி, பண்டிகைகள் போன்ற பிற பெயர்களும் தனித்தோ, விகுதி பெற்றோ, அடைச் சொல் பொற்றோ இயற்பெயராய் அமையுமானால் அப்பெயர்களைத் தனிப்பெயர்களாகக் கொள்ளவேண்டும்.

## கூட்டுப் பெயர்கள்

தனிப்பெயருக்குரிய இலக்கணங்களைக் கொண்டு இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட பெயர்கள் இணைந்து ஓர் இயற்பெயராய் அமையுமானால் அது கூட்டுப் பெயர் ஆகும்.

**சான்றாக**: சுந்தரப்பாண்டியன், சண்முகசுந்தரம், முத்துமீனாள், பாண்டித்துரை, சீதாலெட்சுமி, ராமவள்ளி, ராசசேகர பாண்டியன், சிவராம கிருட்டிணன், சுந்தர்ராஜ், சுந்தரலிங்கம் போன்றவையாகும்.

ஒரு கூட்டுப் பெயரில் முன்னொட்டாக இடம் பெற்ற ஒரு தனிப்பெயர். பிறிதொரு கூட்டுப் பெயரில் பின்னொட்டாக அமைந்து விளங்குகிறது. கூட்டுப் பெயர்களில் காணப்படும் பெரும்பாலான பெயர்கள் மக்களின் விருப்பத்திற்கு ஏற்றவாறு முன் பகுதியிலோ அல்லது பின்பகுதியிலோ இணைந்து இயற்பெயர்களாய் அமைகின்றன. கூட்டுப் பெயர்களின் சேர்க்கையால் இவ்விருமுறைகளும் சிறப்பிடம் பெறுகின்றன.

**சான்றாக:** பாண்டியன், சுந்தரம் - தனிப்பெயர்கள்

சுந்தரபாண்டியன், ராசசேகரப் பாண்டியன் - பின்னொட்டாக அமைந்த பெயர்கள்

சுந்தரலிங்கம், சுந்தர்ராஜ் - முன்னொட்டாக அமைந்த பெயர்கள்

இப்பெயரமைப்பு மக்களின் விருப்பத்திற்கேற்றவாறு வேறுபட்ட பெயர்களை இடுவதற்குத் துணை புரிகின்றன.

இவ்வமைப்பு முறையால் குறிப்பிட்ட பகுதிகளுக்குரிய சிறப்பானக் கூறுகளை மக்கட் பெயர்களில் முன்னொட்டாகவும், பின்னொட்டாகவும் அமைத்து அந்தந்தப் பகுதிகளின் தனித் தன்மையுடைய கூறுகளை மக்கள்

போற்றி வருகின்றனர். கூட்டுப் பெயர்களில் சில காரணத்தோடு இணைந்து வழங்குவதும் உண்டு. முதல் பெண் மருத்துவர் என்ற சிறப்பு பெற்றவர் டாக்டர்.முத்துலெட்சுமி ரெட்டி அம்மையார். இம்மாவட்டத்தில் பிறந்தவர் என்பதால் அவரின் பெயரை மக்கள் தங்கள் குழந்தைகளுக்கு முன், பின் ஒட்டுகள் இணைத்து வைக்கின்றனர்.

**சான்றாக:** முத்துசெல்வி, முத்துமணி, முத்துமீனா, வீரலெட்சுமி, சுப்புலெட்சுமி கூட்டுப் பெயர்களில் இரு பெயர்கள் இணைந்து வழங்கும் போது ஒற்று தோன்றல், திரிதல், கெடுதல், மாற்றமின்மை முதலான நான்கு அமைப்பில் பெயர்கள் அமைவதைக் காணமுடிகின்றன.

**சான்றாக:** பாண்டி+துறை=பாண்டித்துறை - தோன்றல்

தமிழ் +அருவி=தமிழருவி - திரிதல்

சுந்தரம் +பாண்டியன் =சுந்தரபாண்டியன் - கெடுதல்

முத்து+மீனாள் =முத்துமீனாள் - மாற்றமின்மை

தற்காலப் பெயரிடு முறைகளில் கூட்டுப் பெயர்கள் குறைந்து வருகின்றன. உச்சரிப்பு எளிமை கருதிப் பெரும்பாலும் ஈரசைப் பெயர்களையே விரும்பி இடுகின்றனர்.

## அசை அடிப்படையில் பெயரமைப்பு

மக்கட் பெயர்களின் மொழியமைப்பை நோக்கும் போது பல்வேறு அசைகளின் (Syllables) சேர்க்கையால் பெயர்கள் வடிவம் பெற்றிருப்பதை அறியமுடிகிறது. பெரும்பாலும் ஓரசை அல்லது அதற்கு மேற்பட்ட அசைகளைக் கொண்டே பெயர்கள் அமைகின்றன. ஆங்கிலப் பெயர்களில் பெரும்பாலும் ஈரசைப் பெயர்கள் பெண்களுக்கும் ஓரசைப் பெயர்கள் ஆண்களுக்கும் அமைவதாகக் கோலியர்ஸ் கலைக்களஞ்சியம் குறிப்பிடுகிறது (colliers Encyclopeadia 1958:579). தொல்காப்பிய இலக்கணப்படி ஓரசை முதல் நான்கு அசைகள் வரையிலும் காணப்படுகிறது. மக்கள் பெயர்களில் ஒன்று முதல் ஏழு வரை காணப்படும். இவற்றை இரண்டாகப் பிரிக்கலாம்.




## ஓரசைப் பெயர்கள்

ஓர் அசைப் பெயர்கள் என்பது ஓர் அசையால் மட்டுமே பிரிக்கக் கூடியது. அவை நாள், மலர், காசு, பிறப்பு என்னும் வாய்ப்பாடுகளில் வரும். அவ்வாறு வரக்கூடியப் பெயர்கள் ஓர் அசைப் பெயர்கள் என்ற அடிப்படையில் அமைகிறது.

**சான்றாக:** மதி - நிரை (மலர்)

பாலு - நேர்பு (காசு)

கனகு - நிரைபு (பிறப்பு)

இம்மாவட்டத்தில் நேர் (நாள்) என்ற ஓர் அசைப் பெயர் மட்டும் காணப்படவில்லை. ஓர் எழுத்தில் பெயர்கள் இடுவது இம்மக்கள் மத்தியில் காணப்படவில்லை. குறைவாக இரண்டு எழுத்தில் இருந்தும் அதிகமாக பதின்மூன்று எழுத்துக்கள் வரையிலும் காணப்படுகிறது.

## ஈரசைப்பெயர்கள்

இரண்டு அசைகளால் பிரிக்கக் கூடியது. இவை மாச்சீர், விளச்சீர் என்று நான்கு வகைகளில் அமைக்கப்பட்டிருக்கும். இவை மக்கட் பெயர்களிலும் அமையப்பட்டுள்ளதை அறியப்படுகிறது.

**சான்றாக:** சுப்பு - நேர், நேர்- தேமா

சுவாதி - நிரை, நேர் - புளிமா

தவமணி - நிரை, நிரை - கருவிளம்

வாசுகி - நேர், நிரை - கூவிளம்

என்ற அடிப்படையில் பெயர்களைக் காணமுடிகின்றன.

## மூவசைப் பெயர்கள்

மூன்று அசைகளாகப் பிரிக்கக் கூடிய பெயர்கள். அத்தகைய பெயர்கள் எட்டு வகைகளாகப் பிரியக்கூடியவை. அவை காய்ச்சீர், கனிச்சீர்கள் என்பதாகும்.

**சான்றாக:** மூக்கையா - தேமாங்காய் - நே. நே. நே.

தமிழ்வேந்தன் - புளிமாங்காய் - நி. நே. நே.

பழனிமுத்து - கருவிளங்காய் - நி. நி. நி.

சாமிஅய்யா - கூவிளங்காய் - நே. நி. நே.

ஆகியவை காய்ச்சீர் பெற்ற பெயர்களாகும். கனிச்சீர் பெற்ற பெயர்களும் இம்மாவட்டத்தில் உள்ள மக்கட் பெயர்களில் காணப்படுகின்றன.

**சான்றாக:** நாராயணன் - தேமாங்கனி - நே. நே. நி.

மயில்வாகனன் - புளிமாங்கனி - நி. நே. நி.

ரதிசுலோச்சனா - கருவிளங்கனி - நி. நி. நி.

வெங்கடாசலம் - கூவிளங்கனி - நே. நி. நி.

காய்ச்சீர்களுக்கு வெண்பாவுரிச்சீர் என்றும் கனிச்சீர்களுக்கு வஞ்சியுரிச்சீர் என்றும் கூறுவதுண்டு. அவ்வகை இலக்கணங்கள் இம்மாவட்ட மக்கள் பெயர்களில் காணப்படுகின்றன.

## நாலசைப் பெயர்கள்

நான்கு அசைகள் பெற்று வரக்கூடியவை நாலசைச்சீர் என்பர். இது பொதுச்சீர் என்ற பெயரிலும் அழைக்கப்படுகிறது. நேரீற்றுப் பொதுச்சீர். நிரையீற்றுப் பொதுச்சீர் என பதினாறு பிரிவுகளில் காணப்படும். இம்மாவட்ட மக்கட் பெயர்களில் கூட்டுப் பெயர்களை இணைத்து இச்சீர் அமைப்பு அமைக்கப்படுகின்றது.

**சான்றாக:** வெள்ளைச்சாமி - தேமாந்தண்பூ - நே. நே. நே. நே

ஷகிலாபானு - புளிமாந்தண்பூ - நி. நே. நே. நே.

சுரேந்திரபாபு - கருவிளந்தண்பூ - நி. நி. நே. நே.

அன்னமாணிக்கம் - கூவிளந்தண்பூ - நே. நி. நே. நே.

பெர்லின்பெனிட்டா - தேமாநறும்பூ - நே. நே. நி. நே.

இராதாகிருஷ்ணன் -புளிமாநறும்பு - நி. நே. நி. நே.

சுகிபிரிசிலாணி - கருவிளநறும்பு - நி. நி. நி. நே.

மோகனபிரசாத் - கூவிளநறும்பு - நே. நி. நி. நே.

ஆகியவை நேரீற்றுப் பொதுச் சீர் ஆகும். மேலும் நிரையீற்றுப் பொதுச் சீர்கள் எட்டு ஆகும். அத்தகைய சீர்களிலும் பெயர்கள் அமைந்துள்ளன.

**சான்றாக:** அன்னபூரணி - தேமாந்தண்ணிழல்- நே. நே. நே. நி.

இராமச்சந்திரன் - புளிமாந்தண்ணிழல் - நி. நே. நே. நி

அடைக்கலங்காத்தபன் - கருவிளந்தண்ணிழல் - நி. நி. நே. நி.

சுந்தரபாண்டியன் - கூவிளந்தண்ணிழல் - நே. நி. நே. நி.

மாணிக்கவாசகம் - தேமாநறுநிழல் - நே. நே. நி. நி.

தனபாக்கியவதி - புளிமா நறுநிழல் - நி. நே. நி. நி.

கவிப்பிரியதர்ஷினி - கருவிள நறுநிழல் - நி. நி. நி. நி.

வான்மிகவனதனன் - கூவிள நிறுநிழல் - நே. நி. நி. நி.

இத்தகைய பெயர்கள் இலக்கண விதிகளுக்கு உட்பட்டவை. இலக்கண விதிகளுக்கு உட்படாதவை ஐந்து அசை முதல் ஏழசை வரைக் காணப்படுவதை இம்மாவட்ட மக்கட் பெயர்களின் வழி அறியமுடிகிறது.

## ஐந்தசைப் பெயர்கள்

ஒன்றிற்கு மேற்பட்ட பெயர்களைக் கொண்ட கூட்டுப் பெயர்களில் இலக்கணச் சீர்களுக்கு உட்படாமல் ஐந்து சீர்கள் பெற்று அமைந்துள்ளன.

**சான்றாக**: இராசசேகரப்பாண்டியன், முத்துமாடத்தியம்மாள்,

சின்னப்போர்விலாவன், கபிலன்முத்துலிங்கம்,

முகமதுஇப்ரான்ஸா, ராபித்துரிஸ்வானா, அந்தோணிலிவிங்ஸ்டன்

போன்ற பெயர்கள் உள்ளன.

## ஆறசைப் பெயர்கள்

ஆறு அசைகளைக் கொண்ட மக்கட் பெயர்கள் காணப்படுகின்றன.

**சான்றாக:** மணிகண்ட முத்துக்கருப்பன், சந்திரசேகரப் பாண்டியன் போன்றப் பெயர்களை அறியமுடிகின்றன.

## ஏழசைப் பெயர்கள்

ஏழு அசைகளைப் பெற்ற பெயர்களையும் இம்மாவட்டத்தில் காணமுடிகிறது.

**சான்றாக:** செந்தூர்வேந்தன்சேனானி, மனோரஞ்சிதபாக்கியலெட்சுமி

போன்ற ஏழு சீர்கள் வரையிலும் மக்கட் பெயர்கள் காணப்படுகின்றன. நீண்ட பெயர்களைக் காட்டிலும் சிறய பெயர்கள் காலங்காலமாய் அமைப்பில் மாற்றம் பெறுவதில்லை. சிறிய பெயர்கள் ஒலி உச்சரிப்பிற்கு எளிமையாக இருப்பதால் மக்களிடம் சிறப்பிடம் பெறுகின்றன. மக்கட் பெயர்களின் உள்ளடக்கம் அசைகளின் முறையான ஒருங்கிணைப்பால் ஆனவை என்பது புலனாகிறது. அசைகளின் அடிப்படையில் ஒரு பெயரின் கட்டமைப்பை நோக்கும் போது விருப்பத்திற்கேற்றவாறு மக்களின் வடிவம் பெறுவது குறிப்பிடத்தக்கது. எனவே பெயரிடும் முறைக்கும், பெயர் அமைப்பிற்கும் நெருங்கிய தொடர்பு உண்டென்பதை அறியமுடிகிறது.

## உவம உருபுகளில் பெயரமைப்பு

ஒரு பொருளை அல்லது ஒரு செயலைச் சிறப்பித்துக் கூற அதைவிடச் சிறந்த மற்றொரு பொருளோடு ஒப்பிட்டுக் கூறுவது பேச்சு வழக்கிலும் செய்யுள் வழக்கிலும் உண்டு. இதனை மக்கட் பெயர்களிலும் காணமுடிகிறது. ““உவமைத் தொடரில் உவமைப் பொருள் (உவமானம்) முன்னும் உவமிக்கப்படும் பொருள் (உவமேயம்) பின்னுமாக அமைந்திருக்கும்.”[1] அவற்றை மக்கட் பெயர்களிலும் காணலாம்.

**சான்றகா:** எழில் அரசி, மலையழகு, பூவழகன், பொன்னம்மாள், கங்காதேவி, மதியழகு, தமிழ்கண்ணன், அழகுமீனாள்

போன்றப் பெயர்களைக் கூறலாம்.

## பெயர்களில் "பதம்" அமைப்பு

பதம் என்பதற்குச் சொல் என்று பொருள். பதம் இருவகைப்படும்.

1. பகாப்பதம்,
2. பகுபதம்

ஆகும். இதனை நன்னூலார்,

**"பகுப்பாற் பயனற்று இடுகுறியாகி**
**முன்னே ஒன்றாய் முடிந்தியல் கின்ற**
**பெயர்வினை இடையுரி நான்கும் பகாப்பதம்"[2] (நன்.131)**

இத்தகைய பகாப்பதம் இன்றைய நவீன காலப் பெயர்களில் மிகுதியாக உள்ளன. பெயர்கள் எவ்வளவு எழுத்துக்கள் இருந்தாலும் இரண்டு அல்லது மூன்று எழுத்துக்களில் பகாப்பதங்கலாகவே அழைக்கப்படுகின்றன. இத்தகைய போக்கு பேச்சு வழக்கில் அதிகமாகவும் செய்யுள் வழக்கில் குறைவாகவும் காணப்படுகிறது.

**சான்றாக:** பெயர் பகாபதம் - தமிழ்அரசன் என்பதனைத் தமிழ் என்றும், வினைப்பகாபதம் - வளர்மதி என்பதனை "வளர்" என்றும், உரிப்பகாபதம் - தவமணி என்பதனைத் தவ என்றும் நனியன் என்பதனை நனி என்றும், இடைப்பகாபதம் - மதிஅழகன் என்பதில் போன்ற என்பது அழைப்பதில்லை.

பகாபதங்களை உடைய சொற்களில் அழைப்பதை இன்றும் இம்மாவட்ட மக்கட் பெயர்களில் காணமுடிகிறது.

## பகுபதப் பெயர்கள்

பிரிக்கக் கூடியதும் பிரித்தால் பொருள் தருவதுமான பதம், பகுபதம் எனப்படும். இத்தகைய பகுபதம் பெயர்ப் பகுபதம், வினைப்பகுபதம் என்று இரு வகைப்படும். பெயர் ஆய்விற்குப் பெயர்ப்பகுபதம் மட்டும் எடுத்துக் கொள்ளப்படுகிறது. இது ஆறு வகைப்படும். அது தொடர்பான பெயர்களை இம்மாவட்ட மக்கட் பெயர்களிலும் அறியக்கிடைக்கின்றன.

**சான்றாக:** பொருட்பெயர் பகுபதம் - பொன்னம்மாள், செல்வம், முத்துமீனாள்

இடப்பெயர்ப் பகுபதம் - திருப்பதி, சிதம்பரம்

காலப்பெயர்ப் பகுபதம் - கார்த்திகேயன், சித்திரைவேல்

சினைப்பெயர்ப் பகுபதம் - கண்ணன், மூக்கன், மோளையன்

பண்புப்பெயர்ப் பகுபதம் - கருப்பையா, வெள்ளையம்மாள், சிகப்பி

தொழிற்பெயர்ப் பகுபதம் - வேளார், ஐயர், ஆசிரியர்

போன்றவை ஆகும்.

## பெயரமைப்பின் விகுதிகளின் பங்கு

ஒரு பகுபதத்தின் இறுதியில் நிற்கும் உறுப்பு “விகுதி” எனப்படும். விகுதிக்கு வேறு பெயர் “இறுதி நிலை” என்பதாகும். இத்தகைய இறுதி நிலைகள் மக்கட் பெயர்களில் எவ்வாறு இடம் பெற்றிருக்கிறது என்பதனை நன்னூல் ஆசிரியர்

**"அன் ஆன் அள் ஆள் அர் ஆர் பம்மார்**
**அ ஆ குடுதுறு என் ஏன் அல் அன்**
**அம் ஆம் எம் ஏம் ஓமொடு உம் ஊர்**
**கடதற ஐ ஆய் இம்மின் இர்ஈர்**
**ஈயர் கயவும் என்பவும் பிறவும்**
**வினையின் விகுதி பெயரினும் சிலவே”** **(நன்.140)**

என்கிறார்.

வினைகளில் வரும் பெயர்களில் சிறுபான்மை வரும் என்பதன் வழி எந்தெந்த விகுதிகள் மக்கள் பெயர்களில் அமையும் என்பதனை அறியமுடிகிறது. இம்மாவட்ட மக்கட் பெயர்களில் விகுதிகள் எவ்வாறு அமைந்துள்ளன என்பதனை உணரமுடிகின்றது.

## "அன்” விகுதி அமைந்த பெயர்கள்

குப்பன், லெட்சுமணன், அழகப்பன் போன்ற பெயர்களில் “அன்” விகுதி அமைந்துள்ளது.

### "ஆன்" விகுதிப் பெயர்கள்

பெரியான், நல்லான், காத்தான், தொப்புலான் போன்ற பெயர்களில் அன், ஆன் என்ற விகுதிகள் ஆண்பால் வினைமுற்று விகுதிகள் என்பதனால் ஆண் பெயர்களில் மட்டும் இவ்விகுதிகள் காணப்படுவதை அறிய முடிகிறது.

### அள், ஆள் விகுதிப் பெயர்கள்

அள், ஆள் விகுதி பெண்பால் வினைமுற்று "விகுதி" என்பதால் பெண்கள் பெயர்களில் மட்டும் காணப்படுகிறது. இவற்றில் அள் "விகுதி" காணப்படவில்லை. ஆள் "விகுதி" பெயர்கள் காணப்படுகின்றன.

**சான்றாக**: மாரியம்மாள், பொன்னம்மாள், பிச்சையம்மாள், அந்தோணியம்மாள், மீனாள், முத்துமீனாள் ஆகிய பெயர்களைக் கூறலாம்.

### அர், ஆர் விகுதிப் பெயர்கள்

அர், ஆர் விகுதிகள் பலர்பால் வினைமுற்று விகுதிகள். இத்தகைய விகுதிகளை மக்கட் பெயர்களில் உயர்வு நிலையில் மதிக்கப்பட வேண்டும் என்ற அடிப்படையில் இடம்பெற்றுள்ளன.

### அர் விகுதிப் பெயர்கள்

**சான்றாக:** அலிஅக்பர், களியமெய்யர், விஜயபாஸ்கர், சௌந்தர், குறிஞ்சிமலர், சேகர் போன்ற பெயர்கள் அர் விகுதிப் பெயர்கள் ஆகும். ஆர் "விகுதி" பெயர்களாக, செபஸ்தியார், அப்துல்அஜார், செந்தில்குமார், முத்துக்குமார், கல்யாண்குமார் போன்ற விகுதி அமைந்த பெயர்கள் ஆண் பெயர்களில் பெரும்பாலும் காணப்படுகிறது.

### அ, ஆ பலவின் பால் வினைமுற்றுப் பெயர்கள்

"அ" என்ற விகுதியில் மக்கட் பெயர்கள் காணவில்லை. "ஆ" என்ற விகுதியில் அதிக அளவில் மக்கள் பெயர்கள் அமைந்து காணப்படுகிறது.

**சான்றாக:** சின்னராஜா, சின்னம்மா, செல்வா, சங்கீதா, கலா, சித்ரா, கருப்பையா, செல்லையா, ஓவியா, ராதா, சா்மிளா, தேவவா்ஷியா போன்ற பெயா்களைக் கூறலாம்.

## அல், அன், என், ஏன் விகுதிகளில் பெயர் அமைப்பு

**அல்:** விகுதிப் பெயா் கிறிஸ்டல்

**அன்:** விகுதிப் பெயா்கள் சிலம்பன், கவிராமன், செம்பன்

**என்:** மெய்யென் ஆகிய விகுதிகளில் மட்டும் பெயா் காணப்படுகிறது.

## இ, ஆய், ஐ முன்னிலை ஒருமை வினைமுற்று விகுதி

## இ, விகுதிப்பெயர்கள்

பொப்பி, சிகப்பி, முத்தழகி, சிந்தாமணி, முரளி, சஞ்சீவி என்றும், முருகாயி, மூக்காயி, மாரியாயி, செல்லாயி என்றும் வழக்கிலுள்ளன.

## ஐ விகுதிப் பெயர்கள்

தெய்வாணை, பிச்சை, செந்தாரை போன்ற விகுதிகளில் பெயா்கள் காணப்படுகின்றன. “ஆய்” விகுதியில் பெயா்கள் இல்லை என்பதனையும் அறியமுடிகின்றது.

எனவே குறிப்பிட்ட சில ஈறுகளும் விகுதிகளும் பெயரிடுவோரின் மனநிலைக்கேற்றவாறு அமைகின்றன. இருபாற் பெயா்களையும் இனம் காண்பதற்குப் பால் காட்டும் விகுதிகள் பெருந்துணை புரிகின்றன. தற்காலத்தில் புதுமை நாட்டத்தாலும் நாகரிக வளா்ச்சியாலும் பெயா் அமைப்பு முறை மாறுபாடு அடைந்து வருகின்றது. பெரும்பாலான பெயா்களில் பால்காட்டும் விகுதிகள் இடம் பெறாமலே இயற்பெயா்கள் அமைகின்றன.

**சான்றாக:** சுப்பு, விஜஜ், கனகு, பாலு, ராசு, வா்ஷா

ஆகியவை. பெண்பாற் பெயா்களிலும் இத்தகையபோக்குக் காணப்படுகிறது. வேறுபட்ட அமைப்புடைய பெயா்கள் உருவாவதற்குத் திரைப்படத் துறையும் பத்திரிக்கைத் துறையும் காரணமாக விளங்குகின்றன.

## மக்கட் பெயரின் பொதுவான புற அமைப்பு முறை

மக்கட் பெயர்களில் முன்னும், பின்னும் பெறும் அலகுகளை அடிப்படையாகக் கொண்டு பொதுவான புறத்தோற்றத்தைப் பின்வருமாறு பாகுபாடு செய்யமுடிகிறது. அவை பெற்றோர் பெயரை முன்னிடுவது, தலைமுறைப் பெயரை முன்னிடுவது, பின்னொட்டு என்ற அடிப்படையில் தொழில், பதவி, பட்டம், இனம், சமயம் போன்ற அடிப்படையில் புற அமைப்பு முறை அமைந்துள்ளதை உணரமுடிகிறது.

## முன்னொட்டுப் பெயர்கள்

முன்னொட்டுப் பெயர்கள் ஒரு நபரை அல்லது அவரின் தலைமுறைகளில் மட்டும் இடம்பெற்றுள்ளன. தான் யார் என்று அடையாளம் காட்டுவதற்கும் சந்ததியினரை நினைவு கூறும் வகையிலும் இத்தகைய அமைப்பு அமைகிறது. தந்தைப் பெயரின் முதல் எழுத்தைத் தன் இயற்பெயருக்கு இடுவது முன்னொட்டுப் பெயர் என்பதாகும்.

**சான்றாக:** க. பாண்டியன், மெ. அழகப்பன், ச. சத்தியசீலன்

போன்ற பெயர்களைக் கூறலாம். தற்போது தந்தை, தாய் இருவரின் முதல் எழுத்தையும் கொண்டு அமைகிறது.

**சான்றாக:** டெ.ப.ரத்தினா, அ.பொ.அழகேசன். இதில் முதலில் தாய் பெயரும், பின் தந்தை பெயரும் இறுதியில், இயற்பெயரும் அமைவதாக உள்ளது. தந்தை, தாத்தா, பாட்டன், முப்பாட்டன் என்ற அடிப்படையில் முன்னொட்டுப் பெயர்கள் காணப்படுகின்றன. இந்த நிலைப் பெரும்பாண்மையாக நகரத்தார் இன மக்களிடம் உள்ளது.

**சான்றாக:** ப. வீ. பழ. இராம. பழநியப்ப செட்டியார் (திருமயம் தொகுதி முன்னால் சட்டமன்ற உறுப்பினர், ராயாவரம்)

இவ்வாறு தன் தலைமுறைகளை நினைவுகூரும் வகையில் அமைந்துள்ளன. அதனைத் தொடர்ந்து ஒவ்வொரு தனி மனிதனின் திறமைக்கு ஏற்ற வகையில் தம்மை வேறுபடுத்துவது பதவி, பட்டம், தொழில் ஆகியவை ஆகும். இச்சிறப்பினை இயற்பெயருக்கு முன்னர் இட்டுவருகின்றனர். சிறப்பு முன்னொட்டாக அமையும் என்பதனைத் தொல்காப்பியர்,

**"சிறப்பி னாகிய பெயர்நிலைக் கிளவிக்கும்**
**இயற்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்"[5]** **(தொல்.சொல்.524)**

என்பர்.

"சிறப்பினால் ஒருவர் பெற்ற பெயர்ச் சொல்லுக்கும் முற்பட இயற்பெயர்ச் சொல்லையமைத்துக் கூறமாட்டார். சிறப்புப் பெயருக்குப் பிற்படவே இயற்பெயரை அமைத்துக் கூறுவர்."[6] என்பதனைத் தொல்காப்பியத்தின் வழி கண்டுணரமுடிகிறது.

## பதவி குறித்த முன்னொட்டு

ஒருவரின் திறமைக்குக் கிடைப்பது பதவி. அத்தகையப் பதவியை இயற்பெயருக்கு முன்னதாக அமைத்துக் கூறுவர். இந்த அமைப்பு முறையை இம்மாவட்ட மக்களிட் பெயர்களிலும் உணரமுடிகிறது.

**சான்றாக:** மத்திய வங்கி மேலாளர், திரு. அ. பழனிச்சாமி, தலைமை ஆசிரியர், திரு. கு. சுப்பையா, பேராசிரியர் திரு. கை. புரவி

போன்ற பெயர்களுக்கு முன்னால் பதவியின் பெயர் முன்னொட்டாக அமைந்துள்ளதைக் காணலாம்.

## பட்டம் குறித்த முன்னொட்டு

அறிவின் வெளிப்பாடாகத் திகழ்வது கல்வி அத்தகையக் கல்வியைக் குறிப்பிட்ட கால எல்லைக்குள் பயில்வோறுக்காக அளிக்கப்படுவது பட்டம் ஆகும். அத்தகைய பட்டங்களைச் சிறப்பு பெயர் என்ற அடிப்படையில் முன்னொட்டாக இடுவதுண்டு. இப்போக்கு இம்மாவட்ட மக்களிடமும் காணப்படுகிறது.

**சான்றாக:** முனைவர். இராம. சண்முகம்
மருத்துவர் (Dr) இரா. ராமன்
வழக்குரைஞர் க. கருணாநிதி
தமிழ்பண்டிட் ச. மாசிலாமணி

போன்ற முன்னொட்டுப் பெயர்களில் தொழில் குறித்த முன்னொட்டும், பதவி குறித்த முன்னொட்டும் ஒன்றாகக் கருதமுடிகின்றன.

## பின்னொட்டு அமைப்பு

ஒருவரின் இயற்பெயரோடு சாதி, சமயப் பெயர்கள் சேர்க்கப்படுவதால் அவை பதிவுப்பெயர்களாகக் கருதப்படுவதில்லை. அவை சிறப்புக் கருதாது அமைவதால் பின்னொட்டு எனலாம். திருமணமான ஆண்கள் இயற்பெயரோடு சாதிப் பெயரையும் இணைத்துக் கொள்கின்றனர். குறிப்பாக சமுதாயத்தில் உயர்ந்த சாதியினர் எனக் கருதிக்கொள்ளும் பிரிவினர்களிடம் இவ்வழக்கம் இன்னும் நடைமுறையில் உள்ளது. இச்சாதி சமயப் பெயர்களை வயது வந்தோர் உரிமையாக எண்ணி இணைத்துக் கொள்கின்றனர்.

## சாதி குறித்த பின்னொட்டு

இம்மாவட்டத்தில் சாதித் தொடர்பான பெயர்கள் அதிக அளவில் காணப்படுகின்றன.

**சான்றாக:** ஆபதூதாரணக் குருக்கள், வேலாயுதச் செட்டியார், அழகப்ப கோனார், கருப்பையா தேவர், வெள்ளையன் ஆசாரி, மொக்கையாக் கவுண்டர், வேணுகோபால் நாயுடு

போன்ற மேல் தட்டு வர்க்கமாகக் கருதப்படும் மக்களிடையே இத்தகைய போக்குகளைக் காணமுடிகின்றன. இவ்வாறு சமயங்களில் வேறுபடுத்திக் காட்டுவதையும் காணலாம்.

**சான்றாக:** செபஸ்திய பிள்ளை, இருதயம் பிள்ளை, சையது ராவுத்தர், இப்ராஹிம் ராவுத்தர், மாதவன் நாயுடு, ஆண்டிக் கோனார், சின்னையா சேர்வை என சமயங்களைக் காட்டும் விதமாகவும் பின்னொட்டுக்களை இணைத்துள்ளனர்.

## தொகுப்புரை

- ❖ அமைப்பியல் அணுகுமுறை பல வடிவங்களைப் பற்றி அறிந்துகொள்வதை விட; அவ்வடிவங்களுக்கிடையேயான தொடர்புகளைப் பற்றி அறிவதிலேயே மிகுந்த கவனம் செலுத்துகிறது.
- ❖ மொழியின் அமைப்புக்களை மொழியின் முழுவடிவமாகவும், தனிக்கூறுகளாகவும் பகுத்தாராய்கின்றனர்.

❖ ஒரு நாட்டில் காணப்படும் வேறுபட்ட பெயரிடுமுறைகளே பெயரமைப்பை முடிவு செய்கின்றன.

❖ மக்கட் பெயர் அமைப்பில் தனிப்பெயர்களும், கூட்டுப் பெயர்களும் சிறப்பிடம் பெறுகின்றன. இப்பாகுபாட்டின் மூலம் குறிப்பிட்ட சமுதாயத்தின் மொழியமைப்பையும், கடவுட் கொள்கை, சமயச் சிந்தனை முதலியவற்றையும் அறிய முடிகிறது.

❖ மக்கட் பெயர்களின் உள்ளடக்கம் அவைகளின் முறையான ஒருங்கிணைப்பால் ஆனவை என்பது தெளிவாகிறது.

❖ சிறிய பெயர்கள் உச்சரிப்பிற்கு எளிமையாக இருப்பதால் சமுதாயத்தில் அவை விரும்பி இடப்படுகிறது. மக்கட் பெயர்களில் கட்டமைப்பு காலந்தோறும் மாறுபாடு அடையும் தன்மையுடையது.

❖ மக்கட் பெயர்களில் இடம்பெறும் ஒட்டுக்கள் உயர்வு தாழ்வுடைய சமுதாயத்தின் படிநிலைகளை உணர்த்துகின்றன.

## சான்றெண் விளக்கம்

1. கோ.குமரன், தமிழ் இலக்கணம் ஓர் எளிய அறிமுகம், ப.80
2. மேலது, ப.82
3. மேலது, ப.86
4. தினதந்தி,
5. தமிழண்ணல், தொல்காப்பியம், ப.145, பா.524
6. மேலது, ப.145

# இயல்-4
# மக்கட் பெயர்களில் இயற்கைப் பெயர்கள்

மனிதன் குடும்பம், சமுதாயம், சமயம், பண்பாடு, நாகரிகம் என ஒன்றை ஒன்று சார்ந்து வாழும் சமூக ஒட்டுண்ணியாவான். நன்மை, தீமை என்ற இருபெரும் கோட்பாடுகளுக்கு உட்பட்டவன். ஆதிமனிதன் முதன் முதலில் நன்மையும், தீமையும் செய்யும் இயற்கையை வணங்கினான். அவற்றைப் போற்றிப் பாதுகாக்கும் வகையிலும் நீண்ட நாள் வாழ வேண்டும் என்ற அவாவின் காரணமாகவும், இயற்கையைத் தனக்கும் தன் குழந்தைக்கும் பெயராகச் சூட்டிக் கொண்டான். இத்தகைய இயற்கையின் வளர்ச்சி நிலைகள் புதுக்கோட்டை மாவட்ட மக்கள் பெயர்களில் பதிவாகியுள்ளதைக் கண்டறிவது இவ்வியலின் நோக்கமாகும்.

### இயற்கை

எந்த ஒன்றை மனிதனால் முழுமையாக ஆக்கவும், அழிக்கவும் முடியாதோ அந்த ஒன்றே இயற்கை ஆகும். இயற்கை தரும் இன்னாதவை, இனியவை பல. இயற்கையை வணங்குதல் மரபாகப் போற்றப்படுகிறது. நவீன இயந்திரங்கள், பல்வேறு ஊடகங்கள் தோன்றினாலும் இயற்கை என்ற சக்திக்கு நிகர் ஏதுமில்லை என்றே கூறலாம். தொல்காப்பியர் ‘இயற்கைப் பொருளை இற்றென கிளத்தல்’ என்கிறார்.

### மக்கட்பெயர்களில் இயற்கை

மக்கட் பெயர்கள் பற்றிய பல்வேறு நம்பிக்கைகள் நாட்டுப்புற மக்களிடம் நிலவுகின்றன. இந்த நம்பிக்கைகளுள் முதன்மையாக தெய்வம் விளங்குகிறது. தெய்வம் பற்றிய நம்பிக்கை, மக்கட் பெயர்களில் இயற்கையை மையமிட்டதாகவும் அமைகின்றது. புதுக்கோட்டை மாவட்ட மக்கட் பெயர்களில் காணலாகும் இயற்கை வளங்கள் பண்பாடு, நாகரிகம், நம்பிக்கைகள் போன்றவை இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளன.

## இயற்கை வழிபாட்டின் தோற்றம்

ஆதி மனிதன் இயற்கைச் சக்திகளைக் கண்டு அஞ்சினான். அந்த அச்சம் அவன் அவற்றை வணங்குவதற்குக் காரணமாய் அமைந்தது. இடி, மின்னல், மழை, தீ, காற்று, ஞாயிறு, திங்கள், மலை, ஆறு, கடல், தாவரங்கள், விலங்கு, பறவை முதலியவற்றின் மீது தோன்றிய அச்சமும், அவற்றின் பயன்பாட்டால் கிட்டிய நன்மைகளும் அவற்றை வழிபடுவதற்குக் காரணமாய் அமைந்தன. இதனைத் தொல்காப்பியர்,

**"நிலம் தீ நீர் வளி விசும்பொடு ஐந்தும்**
**கலந்த மயக்கம் உலகம் ஆதலான்"[1]** **(நூற்பா:1589)**

என்பர். இயற்கை தரும் நன்மைகள் அவனை அன்பு செய்ய வைத்தன. அவை படுத்தும் அல்லல்கள் அவனை அச்சப்படுத்தின. நன்மை செய்த ஒருவர் மீது அன்பு காட்டினால் அவர் மேலும் நன்மை செய்வார். தீமை செய்த ஒருவர்முன் பணிந்து போற்றினால் அவர் தீமை செய்யாது இருப்பார் என்ற மனிதனின் கருத்து ஏற்கத்தக்கதாகும்.

**"மண்டிணிந்த நிலனும்**
**நிலனேந்திய விசும்பும்**
**விசும்புதைவரு வளியும்**
**வளித்தலைஇய தீயும்**
**தீமுரணிய நீரும் என்றாங்கு**
**ஐம்பெரும் பூதத்து இயற்கை போலப்**
**போற்றார்ப் பொறுத்தலும் ஆழ்ச்சியது அகலமும்**
**வலியும் தெளலும் அளியும் உடையோய்"[2]** **(புறம்:2:1-8)**

என்று இயற்கையின் சிறப்பினைப் புறநானூற்றின் வழி அறியமுடியும்.

## இயற்கை அடிப்படையில் அமைந்த மக்கட் பெயர்கள்

நிலத்தின் இயல்புக்கு ஏற்ப அங்கு வாழும் மக்களின் நிறம், வாழ்க்கை முறை, பண்பாடு ஆகியன அமையும் என்பர். இதை நாட்டுப்புறத்தில் மண் வாகு என்பர். ஊர்ப் பெயரும் மக்கட் பெயரும் நிலப்பாகுபாட்டை அடியொற்றி அமைந்துள்ளன.

**"ஒன்றனிற் போற்றிய விசும்பும் நீயே**
**இரண்டின் உணரும் வளியும் நீயே**
**மூன்றின் உணரும் தீயும் நீயே**
**நான்கின் உணரும் நீரும் நீயே**
**ஐந்துடன் முற்றிய நிலனும் நீயே"[3]** **(பரி.13:18-23)**

என்றும்,

**"வஞ்சமனத்... பூதங்கள்... நகும்"[4]** **(குறள்.271)**

என்றும்,

**"தீவளி விஅம்பு நிலன்நீர் ஐந்தும்"[5]** **(பரி.3:4)**

என்றும்,

**"நீர்நிலம் தீவளி விசும்போடு ஐந்தும்**
**அறந்துகடை அறியினும் அளப்பருங் குரையே"[6]** **(பதிற்.24:15-16)**

என்றும்,

**"நீரும் நிலனும் தீயும் வளியும்**
**மாக விசும்போடு ஐந்தூன் இயற்றிய"[7]** **(மதுரைக்.453-454)**

என்றும், இலக்கியங்கள் பலவும் இயற்கை வழிபாட்டைக் குறிப்பிடுகின்றன. அங்குள்ள விலங்குகள், பறவைகள், தாவரங்கள் ஆகியவற்றின் அடிப்படையிலும் பெயர்கள் அமைந்துள்ளன.

**"தெய்வம் உணாவே மா மரம் புள்பறை"[8]** **(தொல்.அகத்.964)**

என்ற நூற்பாவானது முதற்பொருள், கருப்பொருள் பற்றிச் சுட்டுகிறது. இதில் பெயர்கள் முதற்பொருளில் நிலம் தொடர்பாகவும் கருப்பொருளில் தாவரங்கள், விலங்குகள், பறவைகள் தொடர்பாகவும் அமைந்திருப்பதைக் காணமுடிகிறது. "புதுக்கோட்டை மாவட்டத்தில்" இதனை அடியொற்றி மிகுதியான பெயர்கள் நிலவுகின்றன. இறைவழிபாட்டோடு இயற்கைக்குத் தலை வணங்கிய தமிழரின் சால்பை மக்கட் பெயர்கள் பறைசாற்றுகின்றன. இதனை,

**"துறையும் ஆலமும் தொல்வளி மராஅமும்**
**முறையுளி பராஅய், பாய்ந்தனர் தொழூஉ"[9]** **(முல்லைக்கலி.101:13-14)**

என்ற அடிகள் மெய்ப்பிக்கின்றன. இயற்கை தொடர்பான பெயர்களைப் பல வகையாகப் பாகுபடுத்த இயலும். அவை,

நிலம் தொடர்பான பெயர்கள்

நீர் தொடர்பான பெயர்கள்

நெருப்பு தொடர்பான பெயர்கள்

வளி தொடர்பான பெயர்கள்

விண் தொடர்பான பெயர்கள்

தாவரங்கள் தொடர்பான பெயர்கள்

விலங்குகள், பறவைகள், பூச்சிகள் அடியொற்றிய பெயர்களை மக்கள் பெயரிடுவதை இதன்வழி அறியமுடியும்.

## நிலம் தொடர்புடைய பெயர்கள்

ஓரிடத்தை அடையாளம் தெரிந்து கொள்ளவும், அதைக் கொண்டு பிறரிடம் தொடர்பு கொள்ளவும், குறிப்பிட்ட நில அமைவிடத்திற்கு ஒரு குறிப்பிட்ட பெயரிட்டு அழைக்கப்படுவது தொன்றுதொட்ட வழக்கம் ஆகும். இயற்கைப் பொருள்களில் முதன்மையானதாக நிலம் போற்றப்படுகிறது. இதனை,

**"ஐந்துடன் முற்றிய நிலனும் நீயே"[10] (பரி.13:18-23)**

என்றும்,

**"மண்டினிந்த நிலனும்**
**நிலனேந்திய விரும்பும்"[11] (புறம்.2:1-8)**

என்றும் புறமுடன் கூறுவதன் வழி உணர முடியும்.

**"நிலத்தினும் பெரிதே"[12] (புறம்.3:1-2)**

என்று கூறுவதன் வழி உலகத்து இயற்கைப் பொருளில் பெரியதும் முதன்மையானதும் நிலம் என்பது பெறப்படுகிறது. அத்தகு நிலத்தின் சிறப்பினைப் புதுக்கோட்டை மாவட்ட மக்கள் பெயர்களின் வழியும் அறியமுடிகிறது.

ஓரிடத்தின்ள பெயர் அவ்விடத்தின் பண்புகளை வெளிப்படுத்துவதாகவும், அவ்விடத்தின் இயற்கை அமைப்பு, உயிரினங்கள், வரலாற்று நிகழ்வுகள், வரலாற்று நாயகர்கள், அங்கு வாழும் மக்கள், குடிகொண்டுள்ள இறைவன் ஆகியனவற்றுடன் தொடர்புடையதாகவும் இருக்கும். "ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக வழங்கிய பல இடங்களின் பெயர்கள் காலப்போக்கில் மாறுபட்டு உச்சரிக்கப்பட்டு வந்திருப்பதையும், மனிதன் தனது விருப்பு வெறுப்புகளுக்கேற்ப ஊர்ப்பெயர்களை மாற்றி இருப்பதையும், தனது செயல்களுக்கு வடிவம் கொடுக்கும் நினைவுச் சின்னமாக ஆக்கிக் கொண்டிருப்பதையும் ஆவணங்கள் தெரிவிக்கின்றன."[13]

தற்காலத்தில் புதுக்கோட்டை 'புதுகை' என்றும், கீரனூர் 'கீரை' என்றும், அறந்தாங்கி 'அறந்தை' என்றும், திருமெய்யம் 'திருமயம்' என்றும் எழுதப்படுவது காலப்போக்கில் இவ்வட்டார ஊர்ப்பெயர்களில் ஏற்பட்ட மாற்றங்களுக்கு எடுத்துக்காட்டுகளாகும்.

"சுமார் 75 ஆண்டுகளாக மேற்கண்ட இடப்பெயர்களில் மாற்றம் இருந்து வருவதை ஆவணங்கள் காட்டுகின்ற."[14] என்பார். இதேபோன்று மக்கட் பெயர்களிலும் மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. பூமாதேவி, பூமிநாதன், பூமா, புவி, உலகநாதன், உலகம்மை, உலககநாயகி என்னும் பெயர்கள் இன்று பூமிகா, புவியரசி, புவியரசன், தாரணி, லோகேஸ், லோகோஷ்வரன், தரணி, ஶ்ரீதரன் என்று நவீனம், வடமொழித் தாக்கத்தால் மாற்றம் பெற்றுத் திகழ்கின்றன.

## மலைத்தொடர்புடைய பெயர்கள்

புதுக்கோட்டை மாவட்ட மக்களில் சிலர் மலைகளின் பெயர்களை ஊர்ப்பெயராகவும், இயற்பெயராகவும் இட்டுள்ளனர்.

**"குண கடல் இவர்ந்து குரூஉக் கதிர் பரப்பி**
**பகல் கெழு செல்வன் குடமலை மறைய"[15] (நற்றிணை.215:1-2)**

என்று மலைகள் தெய்வங்களோடு இணைத்துப் பேசப்படுவதால் மக்கள் மலையை இயற்பெயராகக் கொள்கின்றனர். "புதுக்கோட்டையில்" குடுமியான்மலை, கோட்டைமலை, நார்த்தாமலை ஆகியவை உள்ளன. மலைகள் தெய்வங்கள் உறையும் இடங்களாகக் கருதப்படுகின்றன. "குன்று இருக்கும் இடமெல்லாம் குமரன் இருக்கும் என்பர்." இத்தகைய தெய்வத் தன்மையுடைய பெயரை மக்களுக்கு இடுவதால் பேரும் புகழும்

வாய்க்கப்பெருவார்கள் என்ற நம்பிக்கையில் முன்னொட்டாகவும் பின்னொட்டாகவும் இடுகின்றனர்.

**சான்றாக:** திருமலை, சாமிமலைத்தேவர், மலையப்பன், திருமலைக்கண்ணன், பசுமலை, பிரான்மலையன், மலையாண்டி, மலையம்மாள், மலையப்பன், மலையலிங்கம் ஆகிய பெயர்கள் உள்ளன. இன்றைய தலைமுறையினருக்குப் பெயர்கள் தவப்பொழில், மலையரசி, மலையரசன் என இட்டுள்ளதை ஆய்வில் காண முடிகிறது.

## காடு தொடர்புடைய மக்கட் பெயர்கள்

காடுகளின் பயன்பாட்டின் காரணமாக மக்கள் காடுகளைப் போற்றும் வகையில் அக்காடுகளின் பெயர்களை இட்டுள்ளனர். செடி, கொடி, கனி, பூ தொடர்புடையப் பெயர்களை அதிகமாக இட்டுள்ளதைக் காணமுடிகிறது.

திருமயம் வட்டத்திலுள்ள வெள்ளுகுடிப்பட்டியில் ஒரு தகவலாளியின் பெயர் 'காட்டுராஜா' இவரின் தாய் காட்டில் வேலை பார்த்துக் கொண்டிருக்கும் போது இவர் காட்டில் பிறந்ததால் இப்பெயர் இட்டுள்ளனர். புதுக்கோட்டை மாவட்டம் கோனாடு காடுகள் நிறைந்த பகுதியாகும். மக்களின் தேவைக்கேற்ப காடுகள் திருத்தப்பட்டு நாடாக்கப்பட்டுள்ளன. அங்கிருந்த மரங்களை முன்வைத்துப் பல ஊர்ப்பெயர்கள் தோன்றின. மாங்காடு, வடகாடு, கோட்டைக்காடு, வடக்கன்காடு, ஆலங்காடு, முட்டுக்காடு போன்றவை இப்பகுதியின் காடுகளை மையமிட்ட ஊர்களாக உள்ளன. சங்க காலத்தில் இது வழக்கிலிருந்ததற்கு

**"வேங்கைலும் ஒள் இணர் விரிந்தன**
**நெடுவெண் திங்களும் ஊர் கொண்டன்றே"[16] (அகம்.2:15)**

என்ற அடிகள் சான்று பகர்கின்றன. ஓர் ஊரில் எழுந்தருளியுள்ள கடவுளுக்கும் அங்கிருந்த மரங்களின் பெயரைக் கொண்டு பெயரிடப்பட்டுள்ளது. "ஆலங்குடி ஒன்றியத்தில் குளவாய்ப்பட்டி கோயிலில் உள்ள சிவபெருமானுக்கு 'அதவீஸ்வரர்' என்றும் பெயர். (அத்திக் காட்டுக்கு அரசன்) வைத்தூர் கோவில் சிவபெருமான் 'தாளவனேஸ்வரர்' (பனங்காட்டு ஈஸ்வரன்) திருமயச் சத்திமூர்த்தி கோயில் அம்மனுக்கு 'வேணுவனேஸ்வரி' (மூங்கில் காட்டு அரசி) என்று"[17] வழங்கியுள்ளதைக் காணமுடிகிறது.

மூங்கில் காட்டை நினைவு கூறும் வகையில் பெயர்கள் அமைந்துள்ளனர்.

**சான்றாக:** வேணுகோபால், வேணி, நீலவேணி, கிருஷ்ணவேணி,

என்றும் பெயர்கள் உள்ளன. இன்றைய தலைமுறையினரும் அவற்றைப் போற்றும் வகையிலும் தெய்வம் தம்மைக் காக்கும் என்ற நிலையிலும் பெயர்களை இட்டு வருகின்றனர்.

**சான்றாக:** வேணுஸ்ரீ, வேணுராஜ்

போன்ற பெயர்களைக் காணமுடிகிறது. கடம்பமரம், ஆலமரம், குருந்தமரம், மருதமரம், அரசமரம், வேலாமரம் தொடர்பாகவும் பெயர்கள் காணப்படுகின்றன.

**சான்றாக:** கடம்பன், கடம்பி, கடம்பாயி, ஆலடியான், குருந்தப்பன், குருந்தாயி, மருது, மருதமுத்து, மருதாயி, வேலாயுதம், வேலாயி, வேளான் என்பனவாகும்.

வள்ளிக்காடு என்று ஊரில் பெரும் பகுதி வள்ளியை முன்னொட்டாகவும் பின்னொட்டாகவும் மக்களுக்குப் பெயர்களாக இட்டுள்ளனர்.

**சான்றாக:** வள்ளியம்மை, வள்ளி, மாணிக்கவள்ளி, வள்ளியப்பன், வள்ளிக்கண்ணு

என்பதாகும். குருந்தடிமனை என்ற ஊரில் அவ்வாறே பெயர்கள் அமைந்துள்ளன.

**சான்றாக:** குருந்தாயி, குருந்தம்மாள், குருந்தப்பன், குருந்தன்

போன்ற பெயர்களைக் காணமுடிகிறது. இளைய தலைமுறைகளுக்கு அப்பெயர்கள் முன்னொட்டாகவும் பின்னொட்டாகவும் வழங்கி வருகின்றன.

**சான்றாக:** குருநாதன், குருமூர்த்தி, சிவகுருநாதன், குருஸ்ரீ

போன்ற பெயர்கள் இதற்குச் சான்றுகளாகும்.

## மரம் தொடர்புடைய பெயர்கள்

தொல்காப்பியர் கருப்பொருள்களில் ஒன்றாக மரத்தைச் சுட்டியுள்ளார். மரம் இயற்கையின் ஓர் அங்கமாகத் திகழ்கிறது. மரத்தின் மூலம் அடையும் நன்மைகள் பலவாகும். சிறப்புமிக்க மரத்தின் மருத்துவப் பயன் கருதியும் இறைவன் அதில் உறைந்துள்ளார் என்ற நம்பிக்கையினாலும், போர் மறவர்களின் வெற்றியைக் கணிப்பது என்ற நிலையிலும் மரத்திற்கும்

முக்கியத்துவம் தந்துள்ளது மட்டுமின்றி மக்களுக்குப் பெயராகச் சூட்டி மகிழ்கின்றனர். இதனை.

**"தொன்று உறை கடவுள் சேர்ந்த பராரை"[18] (நற்.303:3)**

**"கடவுள் முதுமரத்து உடனுரை பழகிய"[19] (நற்.83)**

**"எரிமருள் வேங்கைக் கடவுள் காக்கும்"[20] (நற்.216:6-7)**

**"கடவுள் மரத்த முன்மிடைகுடம்பை"[21] (அகம்.270)**

**"கரும்பு அமல் படப்பை பெரும்பெயர்க் கள்ளூர்"[22] (அகம்.15)**

என்பதன் வழி அறியமுடிகிறது. ஒரு திருக்கோயிலில் தலம், தீர்த்தம், மூர்த்தி, விருட்சம் என்னும் மரம் ஆகிய நான்கும் அடிப்படையானவை.

### வயல் தொடர்பான மக்கள் பெயர்கள்

பழந்தமிழர் வாழ்வில் மக்கள் வாழ்ந்த இடமும் காலமும் முதற்பொருளாகக் கொள்ளப்பட்டன. அவை

**"முதல் எனப்படுவது நிலம் பொழுது இரண்டின்**
**இயல்பென மொழி இயல்புணர்ந் தோரே"[23]**

என்பது தொல்காப்பியம். இதனைப் பதிற்றுப்பத்தின் வழியிலும் அறியமுடியும்.

**"மருதம் சானற மலர்தலை விளைவயிற்**
**குறும்பல் யாணர்க் குரவை அயரும்"[24] (பதிற்றுப்.73:4-7)**

பூமி, உலகம், தரணி போன்ற பெயர்களை அடிப்படையாகக் கொண்டும் மக்கட் பெயர்கள் நிலவுகின்றன. பண்டையத் தமிழர் நிலத்தைப் பெண்ணாக உருவகித்து 'நிலமடந்தை', 'பூமாதேவி', 'பூமித்தாய்' என பலவாறாகக் குறிப்பிட்டுள்ளனர். மக்கள் 'உலகம்' எனப் பொருள்படும் சொற்களை இயற்பெயராகக்கிக் கொள்ளும் சிறப்பினை அறியலாம். இவ்வமைப்பில் இனப்பாகுபாடின்றி மிகுதியான பெயர்கள் இம்மாவட்டத்தின் அனைத்துப் பகுதிகளிலும் உள்ளன. "வயல் என்று முடியும் ஊர்ப்பெயர்கள் 210. வயல் என்பது கழனி ஆகும். இவை மருதநிலம் சார்ந்த ஊர்கள் நஞ்சை சாகுபடி அதிகம் உள்ள பகுதி "புல்வயல், புதுவயல், மணமவயல், விருதுவயல்,

வெட்டிவயல், ராவுத்தன்வயல்”[25] என இம்மாவட்டத்தில் உள்ளன. பூமி, உலகு, புவி எனும் பெயர்கள் முன்னொட்டு, பின்னொட்டுச் சேர்ந்தும் மக்கட்பெயராய் அமைகின்றன.

**சான்றாக:** மருதாயி, மருதமுத்து, மருதப்பன், மருதுபாண்டி, மருதுராஜ் என்ற பெயர்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

## செடிகள் தொடர்பான மக்கட் பெயர்கள்

மரங்களைப் போலவே செடிகள் தொடர்பான பெயர்களும் உள்ளன. துளசி, பருத்தி, கரும்பு, குப்பைமணி, செம்பருத்தி போன்ற செடிகள் மருத்துவத் தன்மை உள்ளதால் அவற்றைப் பாதுகாக்கும் வகையில் மக்களுக்குப் பெயர்களாக இட்டு மகிழ்கின்றனர்.

**சான்றாக:** துளசராணி, துளசி, பஞ்சுநாதன், செம்பருத்தி, சக்கரைத்தேவர், முரளி (துளசி) என்றும் பெயர்கள் உள்ளன. நவீனப் பெயர்களாக, முரளிதரன், முரளீஸ், முரளீஸ்வரன் போன்ற பெயர்கள் சூட்டியுள்ளனர்.

## கொடித் தொடர்பான மக்கட் பெயர்கள்

ஒரு குறிப்பிட்ட நிலத்தில் அதிகமாகக் காணப்படும் செடி, கொடிகளின் பெயரைக் கொண்டும் அவற்றின் பெயராலேயோ அல்லது அந்த அடிப்படையிலான பெயர் திரிந்தும் மாறுதல் அடைந்தும் அந்த பகுதியிலுள்ள ஊர்ப் பெயர்கள் வழங்கப்படுவதுண்டு. இம்மாவட்டத்தில் “ஓணான்கொடி (ஓணான்குடி), ஆட்டான்கொடி (ஆட்டான்குடி), மொச்சக்கொடி (மோசகுடி), சூரைக்கொடி (சூரைக்காடு), பேய்மிரட்டி (பேயாடிப்பட்டி), பொன்கொடி (பொன்கொடிப்பட்டி), முதலைக்கொடி (முதலைப்பட்டி) மல்லிக்கொடி (மல்லிகை வனம்)”[26] எனக் கொடி நிறைந்த இடத்திற்கு அவற்றின் பெயர்கள் இடப்பட்டுள்ளது. இவற்றின் எச்சம் மக்கட் பெயர்களிலும் காணப்படுகிறது.

**சான்றாக:** பூங்கொடி, மலர்கொடி, பொற்கொடி, அன்னக்கொடி, கொடிமலர் என்று பெயர்கள் அமைந்துள்ளன.

### மலர் தொடர்பான மக்கட் பெயர்கள்

பழங்காலந்தொட்டே மலர்கள் புனிதத் தன்மை உடையதாகவும் பூசைப் பொருளில் முதன்மையுமாகவும் திகழ்ந்துள்ளன. சங்ககாலத்தில் போருக்குச் செல்லும் வழியில் மலர்கள் மலர்ந்து இருந்தால் வெற்றி கிட்டும் என்ற நம்பிக்கையில் மலர்கள் சிறப்பிடம் பெற்றுள்ளன. அதனைப் போற்றிப் பாதுகாக்கும் நிலையில் மக்களுக்குப் பெயராகவும் இட்டுள்ளனர்.

**சான்றாக:** பூவாயி, பூங்கோதை, பூபதி, பூவரசி, பூவரசன், தாமரைச்செல்வி, தாமரை, தாமரைச்செல்வன், மல்லிகா, மலர்விழி, பூமலர், பூமாலா, செந்தாமரை, கமலம், கமலநாதன் ஆகிய பெயர்களைக் காணமுடிகிறது. நவீனப் பெயர்களாக இன்று இடப்படும் பெயர்கள் ஜாஸ்மின்பேகம், லில்லி, டெய்சி, ரோஸி, பவுன்ரோஜா, ரோஜா போன்றவைகளாகும்.

### கனி தொடர்பான பெயர்கள்

வேட்டைச் சமூகத்தில் மனிதன் நாடோடிகளாக இயற்கையில் கிடைக்கும் காய், கனி, கிழங்குகளைப் பச்சையாக உட்கொண்டு உயிர் வாழ்ந்தான். அவற்றின் பயன்களாலும், அவை பாதுகாக்கப்பட வேண்டும் என்ற நிலையிலும் அவற்றிற்குப் பெயர் வைத்து அப்பெயரையே மக்களுக்கும் இட்டு வந்துள்ளதை, பிச்சைக்கனி, ராவுத்தர், கனி.்.பா என்ற பெயர்கள் வெளிக்காட்டுகின்றன. இன்றைய தலைமுறைப் பெயர்களாக, கனிமொழி, கனிஷ்கா, கனிஸ்மூர்த்தி போன்ற பெயர்களைக் காணமுடிகிறது.

### விலங்குகள் தொடர்பான பெயர்கள்

விலங்குகளினால் பல்வேறு இடையூறுகள் இருந்திருக்கின்றன. அவற்றை வணங்கினால் துன்பம் செய்யாது என்னும் நம்பிக்கையில் மக்கட் பெயர்களிலும் இட்டுள்ளனர்.

**சான்றாக:** காளையன். காளைராஜன், பசுபதி, லெட்சுமி, லெட்சுமணன், சிங்கமுத்து, சிங்கத்துரை, புலித்தேவர், வேங்கையப்பன், சிங்கம்மாள் போன்ற பெயர்களைக் காணமுடிகிறது.

நவீனப் பெயர்களாக விலங்குப் பெயர்களைப் பட்டப்பெயராகத் தான் இடுகிறார்கள். பணியில் ஆர்வமுடன் செயல்படுபவரை

‘சிங்கம்’ என்றும், உடலில் வலிமை உள்ளவரை ‘சிறுத்தை’ என்றும், உடல்பருமன் உள்ளவரை ‘யானை’ என்றும், கோபமாகப் பேசுபவர்களை ‘நாய்’, ‘குரங்கு’ என்றும் வழங்குவதை இம்மாவட்டத்தில் அதிகமாகக் காணமுடிகிறது.

## கடல் வாழ்விகள் தொடர்பான மக்கள் பெயர்கள்

‘புதுக்கோட்டை’ கடற்கரை மிகுதியாகக் கொண்ட மாவட்டமாகும். கோட்டைப்பட்டினம், மீமிசல், மணமேல்குடி ஆகியவை இந்தச் சூழலின் விளைவாகக் கடல்வாழ் பூச்சியினங்களான, சங்கு, முத்து, பவளம் ஆகியவை. மக்கட் பெயர்களில் இடம்பெறுகின்றன. இதனை,

**"பெருங்கடல் தெய்வநீர் நோக்கித் தெளித்தேன்"[27] (கலித்.131:1)**

என்ற அடி மெய்ப்பிக்கின்றது. இவைத் தனிப்பெயராகவும் முன்னொட்டும், பின்னொட்டும் சேர்ந்தும் அமைந்துள்ளன.

**சான்றாக:** முத்து, முத்துச்செல்வி, முத்து ஆசாரி, முத்துக்கண்ணு, பேச்சிமுத்து, சோலைமுத்து, செல்லமுத்து, பவனப்பாள், சங்கர், சங்கர்கணேஷ், பாப்பாத்தி அம்மாள், தேனியப்பன், சங்கன், முத்துராமலிங்கம், முத்துமணி, முத்துகணேசன், முத்தன் போன்ற பெயர்கள் இப்பகுதி மக்களின் பெயரிடு முறையில் இடம் பெறுகின்றன. முத்து என்றும் பெயர் சிறப்பிடம் பெற்றுள்ளது. எனவே முத்து தொடர்பான பெயர்கள் இங்கு அதிகளவில் காணப்படுகின்றன. இத்தகைய பெயர்கள் இருபாலருக்கும் இடப்படுகின்றன என்பதைக் காணமுடியும்.

## பறவைகள் தொடர்பான பெயர்கள்

பறவைகள் மூலம் மக்கள் அடையும் நன்மைகள் பலவாகும். சகுனம் பார்த்தலுக்கு, உணவாக உட்கொள்வதற்கு என பலவகையில் நன்மை செய்ததனால் அவற்றைப் பிற தெய்வங்களின் வாகனமாக வணங்குதல் மட்டுமல்லாது மக்கட் பெயராகவும் சூட்டி மகிழ்கின்றனர்.

**சான்றாக:** சிட்டுப்பிள்ளை, சிட்டா, சிட்டு, பஞ்சவர்ணம், அன்னக்கிளி, மயில்வாகனன் போன்ற பெயர்களாகும்

### ஊர்வன தொடர்பான பெயர்கள்

விலங்குகளைப் போன்று ஊர்வன வகைகளும் அறிய துன்பங்களைத் தந்துள்ளன. அதனை வணங்கினால் நன்மை தரும் என்பதனை,

**"கரந்துபாம்பு ஒருங்கும் பயம்புமா யருவே**
**குறிக்கொண்டு மரங்கொட்டி நோக்கி**
**செறிதொடி விறலியர் கைதொழுஉப் பழிச்ச**
**வறிதுநெறிஓரிஇ வலஞ்செயாக் கழிமின்"[28] (மலைபடு.199-202)**

என்று மலைபடுகடாமின் வழி அறியமுடியும்.

இம்மாவட்டத்தில் 'பேரையூரில்' நாகத்திற்கான பெரிய ஆலயம் உள்ளது. அவ்வூர் மக்கள் மற்றும் குலதெய்வமாக வழிபடுபவர்கள் அதன் நினைவாகத் தங்கள் குழந்தைகளுக்கு நாகம் என்பதனை முன்னொட்டாகவும் பின்னொட்டாகவும் இட்டுவருவதை அறியமுடியும்.

**சான்றாக:** நாகம்மாள், நாகநாதர், நாகராஜன், நாகலெட்சுமி, நாகவள்ளி, நாகஜோதி, திருநாகலிங்கம் போன்ற பெயர்களைக் காணமுடிகிறது. இன்றைய தலைமுறைப் பெயர்களாகவும்

**சான்றாக:** நாகவேணி, நாகராணி, நாகேஷ்வரி, நாகேந்திரன், நாகேஷ், நாகர்ஜுன் போன்றப் பெயர்களைக் காணமுடிகிறது.

### நீர் தொடர்பான மக்கட் பெயர்கள்/மழை தொடர்பான மக்கட் பெயர்கள்

உணவுப் பொருள்களைப் பெருக்கி மக்களை வாழவைப்பது நீர்நிலைகளாகும். "நீரின்றி அமையாது உலகம்" என்பது வள்ளுவர் வாக்கு. இதனைப் புறம்

**"நீர்மிகிற் சிறையும் இல்லை"[29] (புறம்.51:1)**

என்று கூறுகிறது. மக்கள் நீரின் பெருமையை உணர்ந்து மழையைத் தரும் தெய்வத்திற்கு 'மாரி' எனப் பெயர் சூட்டினர். கடுமையான வெப்பத்தினால் வரக்கூடிய அம்மை நோயைப் போக்கும் 'மாரி' தெய்வமாகப் போற்றப்பட்டாள். இங்கு மாரி என்னும் பெண் தெய்வத்தின் பெயர் மாவட்டமெங்கும் மிகுதியாகக் காணப்படுகின்றது. மாரி என்பது தனிப் பெயராகவும் முன்னொட்டுப் பின்னொட்டு இணைந்தும் அமைந்துள்ளது.

**சான்றாக:** மாரி, மாரிமுத்து, மாரிக்கண்ணு, மாரியாயி, மாரியப்பன், மாரியம்மாள், மாரிச்சாமி பெயர்கள் வழங்கப்படுவதைக் காண முடிகிறது.

**சான்றாக:** தற்பொழுது மாரிஸ், மாரிக்கா, மாரிக்கனி ஆகிய பெயர்களைக் காணமுடிகிறது.

## ஆறு தொடர்பான மக்கட் பெயர்கள்

நாட்டின் உயிரென விளங்கும் நதிகளின் பெயர்கள் ஆண், பெண் இருபாலருக்கும் இயற்பெயர்களாய் அமைகின்றன.

**"மலைத் தலைய கடற்காவேரி"[30]** **(பட்டினப்.318)**

என்று பட்டிணப்பாலையும் இதனைச் சுட்டுகிறது. சிந்து, கங்கை, காவேரி ஆகியவை இந்துக்களால் புண்ணிய நதிகளாகப் போற்றப்படுகின்றன.

**சான்றாக:** சிந்து, கங்கா, கங்காதேவி, கௌரிசங்கர், கங்காகௌரி, காவேரி போன்ற பெயர்கள் உள்ளன.

**சான்றாக:** சிந்துஜா, கங்காஸ்ரீ போன்ற பெயர்களும் இருக்கின்றன. 'புதுக்கோட்டை மாவட்டத்தில்' பாம்பாறு, குண்டாறு, பாலாறு, வெள்ளாரு போன்ற சிற்றாருகள் ஓடுகின்றன. இவ் ஆறுகளின் பெயர்களை மக்கள் முன்னொட்டாகவும், பின்னொட்டாகவும் இடுவதைப் புண்ணியம் எனக் கருதுகின்றனர்.

**சான்றாக:** பாலாயி, பாலாமணி, பாலா, பாலாராஜ்,பால்வண்ணன், பால்பாண்டி ஆகிய பெயர்கள் இதற்குச் சான்றுகளாகும்.

## வளித் தொடர்பான மக்கட் பெயர்கள்

ஐம்பெரும் பூதங்களுள் ஒன்று காற்று ஆகும். இதனை

**"வளிஎன வரூஉம் பூதக் கிளவியும்"[31]** **(தொல்.242)**

என்றும்,

**"வளிமிகின் வலியும் இல்லை"[32]** **(புறம்.51:3)**

என்றும் இலக்கியங்களக் உணர்த்துகின்றன. வடமொழியில் வாயு பகவான் என்பர். காற்றில் இறைவன் இருப்பதாகப் பழந்தமிழர் நம்பினர். அதனை வழிபாட்டின் ஓர் அங்கமாகவும் மருதநில மக்களின் விவசாய வாழ்வாதாரமாகவும் கருதுகின்றனர்.

**"தென்மலை தனில்வாழும் தென்றலே வன்றன்**
**தன்மனை நான்தானோ தென்றலே**
**அலர்தளிர் களிலுறையும் தென்றலே-நீயும்**
**சிலர்பா உம்கொள்வ தென்னே தென்றலே**
**தாமரை மேலுலவு தென்றலே-நீயும்**
**காமனுக் கேதுறவு தென்றலே"[33]** **(நவகுற்றால.1)**

என்ற அடிகள் இக்கருத்திற்கு அணி செய்கின்றன. அவற்றைப் பெயராக மக்கள் முன்னொட்டாகவும் பின்னொட்டாகவும் வைத்துள்ளதை அறியமுடிகிறது.

**சான்றாக:** காத்தாயி, காத்தப்பன், காத்தமுத்து, காத்துப்பிள்ளை, சூறையன் போன்றவையும் தென்றல், இளந்தென்றல், பூந்தென்றல் போன்றவை ஆகும்.

## நெருப்பு தொடர்பான மக்கட் பெயர்கள்

நெருப்பில் இறைவன் இருப்பதாகப் பழந்தமிழர் நம்பினர். இதனை,

**"தீமிகின்**
**மன்னுயிர் நிழற்ற நிகலும் இல்லை"[34]** **(புறம்.51:1-2)**

என்றும்,

**"ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப"[35]** **(முருகு.254)**

என்றும் பாடல்கள் பதிவுசெய்துள்ளன. சிறுதெய்வ வழிபாட்டின் ஓர் அங்கமாக நெருப்பில் நடத்தல் முக்கிய விழாவாகக் கருதப்படுகிறது. இதனைப் 'பூக்குழி இறங்குதல்' அல்லது 'குண்டம் இறங்குதல்' எனக் கூறுவர். சுடர்விட்டு எரிகின்ற தீயினைச் 'சோதி' எனக் கூறுவர். இதனை அடியொற்றி ஆண், பெண் இருபாலருக்கும் பெயர்கள் அமைகின்றன. சில பெயர்கள் 'தீ' என்பதனை மையமாகவும் கொண்டு அமைந்துள்ளது.

**சான்றாக:** ஜோதிமணி, ஜோதிலெட்சுமி, மகரஜோதி, தீபா ஜோதிலிங்கம் தீபிகா, தீனா, தீனதயாளன், ஜோதிகா, தீபக், தீபராஜ் போன்ற பெயர்கள்.

இத்தகைய பெயர்கள் பிராமணர்களிடையே அதிக அளவில் வழக்கில் உள்ளன. திருவண்ணாமலையில் சிவபெருமான் சோதி உருவமாய்க் காணப்படுவதாகப் வரலாறு புராணம் கூறுகின்றது. இயற்கை நிகழ்வினை இறைவன் மேல் செலுத்துவதும் பின்பு அதன் புனிதத்தைப் போற்றும் வகையில் இயற்பெயராக அமைப்பதும் தமிழர் பெயர்களின் சிறப்புக் கூறெனச் சுட்ட இயலும்.

## ஆகாயம் தொடர்பான பெயர்கள்

இயற்கையினை வியந்து போற்றும் தமிழர் பண்பில் ஆகாயம் முக்கியப் பங்கு வகிக்கிறது. இதனை,

**"விண்ணென வரூஉம் காயப் பெயர்வயின்"[36] (தொல்.305)**

**"வானத் தன்ன வண்மையும் மூன்றும்"[37] (புறம்.55:15)**

**"உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு**
**பலர்புகழ் ஞாயிறு" (முருக.1-2)**

என்றும்,

**"வானம் ஊர்ந்த வயங்கொளி மண்டிலம்"[39] (அகம்.11:1)**

**"நெருப்பெனச் சிவந்த உருப்பவிர் மண்டிலம்"[40] (அகம்.31:1)**

**"செஞ்ஞா யிற்றுச் செலவும் அஞ்ஞாற்றுப்**
**பரிப்பும் பரிப்புச் சூழ்ந்த மண்டிலமும்"[41] (புறம்.30:1-2)**

என்றும் இயற்கைப் பொருளான ஞாயிறு பற்றிச் சங்கப் பாடல்கள் வழி அறியமுடியும்.

ஆகாயம் தொடர்பான பெயர்களும், சூரியனையும், சந்திரனையும் தெய்வமாகப் போற்றியதால் அவை தொடர்பான வழிபாடுகள் பழங்காலந்தொட்டு

வழக்கிலுள்ளன. விண்மீன்கள், மேகம், மின்னல், ஒளி, இருள், நிறங்கள் முதலியவைகளும் மக்கட் பெயர்களுக்கு நிலைக்களனாய் விளங்குகின்றன.

## சூரியன் தொடர்பான மக்கட் பெயர்கள்

முத்தீ வழிபாடு தமிழரின் தொன்மையான வழிபாடு என்பதைத் தொல்காப்பியம் கூறுகிறது. இளங்கோவடிகள் ஞாயிறு போற்றுதும், ஞாயிறு போற்றுதும் என்பார், எனினும் பழங்கால வழிபாட்டின் எச்சமாகவும் இயற்கையினைப் போற்றும் மரபாகவும் "ஞாயிறு" தொடர்பான இயற்பெயர்களை மக்கள் இட்டுள்ளனர். பண்டுதொட்டு இவ்வழிபாடு இருந்தமை தெரிகிறது. இப்பகுதியில் ஞாயிற்றின் பெயர்கள் இயற்பெயர்களாய் அமைந்துள்ளன. இவற்றுள் வடமொழிப் பெயர்களும் அடங்கும். சூரியன் உதிப்பதையும் மறைவதையும் பெயர்களையும் இம்மாவட்டத்தில் அதிக அளவில் காணமுடிகிறது.

**சான்றாக:** சூரியன், ரவிச்சந்திரன், ரவிக்குமார், பாஸ்கரன், தினகரன், ரவிசங்கர் ஆகிய பெயர்கள் உள்ளன. சூரிய உதயத்தைப் புலப்படுத்தும் வகையினும் இயற்பெயர்கள் உள்ளன.

**சான்றாக:** உதயகுமார், உதயசூரியன், பானுபிரியா, பானுமதி, ரம்ஜான்பானு, நபிஷாபானு போன்ற பெயர்களைக் காணமுடிகிறது. மாலைநேரம், சூரியன் மறைதலை உணர்த்தும் வகையிலும் பெயர்கள் அமைந்துள்ளன.

**சான்றாக:** சந்தியா என நவீனப் பெயர்களாகப் பல்வேறு பெயர்கள் காணப்படுகின்றன.

**சான்றாக:** உதயா, உதயபதி, சூர்யா, சூர்யகலா, சன்விகா சஷ்டி, ஜமீம்பானு, ஜாஸ்மின்பானு போன்ற பெயர்களைச் சுட்டலாம்.

## சந்திரன் தொடர்பான மக்கட் பெயர்கள்

சூரியனைப் போன்று சந்திரனும் மக்களிடையே மாபெரும் சக்தியாக விளங்குகிறது. பண்டையத் தமிழகத்தில் மூன்றாம் பிறையைத் தொழும் வழக்கம் புறநானூற்றில் பேசப்படுகிறது (புறம்.18). இதுபோன்று திருக்குறளிலும் அதிக அளவில் பேசப்படுகிறது.

**"அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப்போல**
**மறுஉண்டோ மாதர் முகத்து"[42]** **(குறள்.1117)**

என்றும்,

**"மாதர் முகம்சூபால் ஒளிவிட வல்லையேல்**
**காதலை வாழி மதி"[43]** **(குறள்.1118)**

என்றும்,

**"மலர்அன்ன கண்ணாள் முகம்ஒத்தி யாயின்**
**பலர்காணத் தோன்றல் மதி"** **(குறள்.1119)**

என்னும் குறள்கள் குறிப்பிடுகின்றன. இசுலாம் இனமக்கள் பிறையைக் கடவுளாகவும் வணங்கி வருகின்றனர். சிலப்பதிகாரம் மங்கல வாழ்த்துப் பாடலில் 'திங்கள் வணக்கம்' சுட்டப்படுகின்றது. சங்கக் கவிஞர்கள் சந்திரனின் அழகிய தோற்றத்தை வியந்து பாடியுள்ளனர்.

**"சுடரொடு சூழ்வரு தாரகை மேருங்**
**புடைவரு சூழல் புலமாண் வழுதி"[45]** **(பரி.19:19-20)**

என்றும்,

**"திங்களின் தண்பெருஞ் சாயலும்"[46]** **(புறம்.55:14)**

என்றும்,

**"திங்களும் நுழையா எந்திரப் படுபுழை"[47]** **(புறம். 177:4-5)**

என்றும்,

**"வளர்பிறை போல வழிவழிப் பெருகி"[48]** **(ஐங்.289:1)**

என்றும்,

**"நெடுவெண் திங்களும் ஊர்கொண் டன்றே"[49]** **(அக்.2:17)**

என்றும்,

**"கோடுகூடு மதியம் முகழ்நிலா விளங்கும்**
**மையன் மாலை"[50]** **(புறம்.67:4-5)**

என்றும்,

**"நாணிலை மதியத்தனையை"[51] (புறம். 102:70)**

என்றும்,

**"நாள்முதிர் மதியம் தோன்றி நிலாவிரிபு"[53] (மதுரைக்.348)**

என்றும் இலக்கியங்கள் சந்திரனைச் சுட்டுகின்றன. இத்தகைய சிறப்புமிக்க சந்திரன் மக்கட் பெயர்களில் கலந்து சிறப்படைவதைக் காணமுடிகிறது.

**சான்றாக:** சந்திரன், ராமச்சந்திரன், ரவிச்சந்திரன், சந்திரமோகன், சந்திரசேகரன், சந்திரபோஸ், மதி, மதியழகன், மதிக்கி, மதிவாணன், மதியழகி, வெண்ணிலா, நிலா, சந்திரா நிலாவர்ஷினி, நிலா.்.பர்நிஷா, நிலா.்.பர்ராணி, மதிவதனி, சந்திரவதனி, மூன்நிஷா, சந்திரமாலிகா, சந்திரகலா, சந்திரலேகா போன்றவை இதற்குச் சான்றுகளாகும்.

## விண்மீன்கள் தொடர்பான பெயர்கள்

சூரியன், சந்திரன் போன்று விண்ணிலுள்ள நட்சத்திரத்தை அடியொற்றியும் மக்கள் பெயர்கள் அமைகின்றன. இதனை,

**"மதியும் மடந்தை முகனும் அறியா**
**பதியின் கலங்கிய மீன்"[54] (குறள், 116)**

என்று குறள் மூலம் அறியலாம்.

வானத்து 27 நாள் மீன்களை மகளிராகவும், திங்களை அவற்றைச் சாரும் காதலானகவும் கூறுவது இலக்கிய மரபு. அதில் எந்த நட்சத்திரத்தை நாள்மீன் சாருகிறதோ, அதை வைத்து, அந்நாள் குறிக்கப்பட்டது. "கார்த்திகை நாள் மீனுடன் மதி சேரும் நாளைக் 'கார்த்திகை நாள்' என்று குறிப்பிட வேண்டும். திருவாங்கூர் மன்னர்களின் பெயர்களை, அவரவர் பிறந்த நாளை நட்சத்திரத்தை வைத்தே குறிப்பிடுவர். 'மூலந்திருநாள்' இவரென்பர்"[55] என்பது குறிப்பிடத்தக்கது.

**"விசும்புவழங்கு மகளிருள்ளும் சிறந்த**
**செம்மீன் அனையள்நின் தொன்னகர்ச் செல்வி"[55] (பதிற்.31)**

என்பதில் விசும்பு வழங்கும் மகளிர், நாள் மீன்களாகவே இருக்க வேண்டும். "தாருகவனத்து இருடிகளின் மனைவியராதல் இயலாது. இதிலிருந்து, நாள்மீனின் சிறப்பு அடிப்படையில் தான் 'அருந்ததி பார்த்தல்' சடங்கு, தமிழரதாய்த் தோன்றியிருக்க வேண்டும்"[56] வடமீன் என்பதால் அதன் திசையும்,

**"வடமீன்போல் தொழுதேத்த வயங்கிய கற்பினனாள்**
**வடமீன் புரையும் கற்பு"[58] (புறம்.122)**

என்று குறிப்பிடப்பெற்றள்ளது செம்மீன் என்பதில் அதன் நிறமும், சிறுமீன் என்பதில் அளவும் உணர்த்தப்படுகிறது. இதனை,

**"பெருநல் வானத்து வடவயின் விளங்கும்**
**சிறுமீன்புரையும் கற்பின் நறுதல்"[58] (பெரும்.302-303)**

என்ற அடிகள் தெளிவுபடுத்துகின்றன.

சாலினி என்றும், கடவுள் ஒருமீன் என்றும், அணங்கரும் கடவுள் என்றும் கூறுவனவற்றில் அதன் தெய்வத்தன்மையும் உணர்த்தப்படுகின்றன. "கார்த்திகை நாள்மீன் பழந்தமிழில் 'ஆரல்' எனப்பட்டது. அறுமீன் எனவும் வழங்கியது. ஆறு புள்ளிகளாக வானில் விளங்குவது அது இதிலிருந்து தான் அறுவகைத் தாய்மார், தாமரைப் பாயலில் வளர்க்க முருகன் வளர்ந்தானென்று தொன்மம் உருவாகியுள்ளது"[59] என வே.அண்ணாமலை குறிப்பிட்டுள்ளார்.

இம்மாவட்ட மக்கள், பெயர்களிலும் நட்சத்திரப் பெயர்களைப் பெரும்பான்மை இட்டுள்ளதனை அறியமுடிகிறது.

திசையைக் குறிக்கும் நாள்மீன்களாக 'வடகயல், வடமீனாள்' என்பனவும் நிறத்தைக் குறிக்கும் பெயர்களாக 'செங்கயன், செங்கி, செம்படவன்' என்ற பெயரும், சாலினி என்ற பெயரும் அதிக அளவில் காணமுடிகிறது.

**சான்றான:** விசாலினி, சாலாட்சி, கவிசாலினி, சாலினி என்பனவாகும்.

கார்த்திகை நாள்மீன் பழந்தமிழில் 'ஆரல்' என வழங்கப்பட்டதிலிருந்து அவற்றையும் பெயராக இட்டுள்ளனர். சான்றாக ஆரி, ஆரால், ஆராயி, கார்த்திக், கார்த்தி, கார்த்திகேயன், கார்த்திக்ராஜா, கார்த்தி, கார்த்திகா போன்ற பெயர்களைக் குறிப்பிடலாம்.

## மேகம் தொடர்பான மக்கட் பெயர்கள்

சங்கப் புலவர்கள் மேகத்தின் அழகையும், பொழிவையும் அழகிய உவமைகளாகக் கையாண்டுள்ளனர். பழந்தமிழர் கார்முகிலைத் தங்கள் உயிராகக் கருதினர். 'வானம் பார்த்த பூமி'யில் உள்ள மக்கள் மழை மேகத்தை நம்பினர். அதனைப் போற்றும் வகையில் மேகத்தை அடியொற்றிப் பெயர்கள் அமைந்துள்ளன. 'மேகம்' முன்னொட்டாகவும், பின்னொட்டாகவும் சேர்த்து வழங்கப்படுகிறது.

**சான்றாக:** நீலமேகம், கார்மேகம், கார்குழலி,கார்மேஷ், நீலகமலா, கார்வேந்தன் போன்றவையாகும்.

## மாதங்கள் தொடர்பான மக்கட் பெயர்கள்

நல் நிகழ்வுகளுக்கு மாதங்கள் முக்கியப் பங்கு வகிப்பதாக மக்கள் நம்புகின்றனர். மங்கல நிகழ்ச்சிகள் மனிதர்களுக்கு உகந்தது என்றும், அமங்கல மாதங்கள் தெய்வத்திற்கு உரியது என்றும், அம்மாதத்தைத் தெய்வத்திற்கு வகுத்துவிட்டால் தெய்வம் நன்மை செய்யும் என்றும் நம்புகின்றனர். இசுலாம் இன மக்கள் தெய்வத்திற்கு வகுத்துவிட்ட மாதமே நல்ல நாளாகக் கருதி அந்நாளில் மங்கல நிகழ்வுகள் நிகழ்த்துகின்றனர்.

'நாளும் கோளும் நலிந்தோர்க்கு இல்லை' என்றும் கூறுவர். எந்த மாதத்தில் குழந்தை பிறந்ததோ அதே மாதத்தைக் குழந்தைகளுக்குப் பெயராக முன்னொட்டு, பின்னொட்டு சேர்த்து இடுகின்றனர்.

**சான்றாக:** சித்திரை - சித்திரைச்செல்வன், சித்ரா, சித்தார்த்தன், சித்ராதேவி

வைகாசி - வைதேகி, காசிநாதன், காசிமுத்து

ஆனி - ஆனிமுத்து, திருகாணி

ஆடி - காலாடி

ஆவணி - ஆவணியா

கார்த்திகை - கார்த்திகா, கார்த்திக், கார்த்திகேயன்

தை - தைப்பாவை

மாசி - மாசி, மாசிலாமணி, மாசிவேந்தன்

என்று மாதங்களையே பெயராக வைத்துள்ளனர். அம்மாதம் தெய்வத்திற்கு உகந்ததால் தெய்வம் தொடர்பான பெயர்களும் வழங்கி வருகின்றனர்.

## வருடம் தொடர்பான மக்கட் பெயர்கள்

தமிழில் அறுபது ஆண்டுகள் உள்ளன. வருடத்தில் மாதங்கள் முக்கியப்பங்கு வகிக்கின்றன. சித்திரை முதல் கார்த்திகை வரை ஜய ஆண்டு என்றும், மார்கழி முதல் பங்குனி வரை விஜய ஆண்டு என்றும் கணித்துள்ளனர். இந்த ஆண்டுகளை நினைவு கூறும் வகையில் குழந்தைகளுக்குப் பெயராக முன்னொட்டு, பின்னொட்டு, அல்லது இயற்பெயராகவும் இட்டுள்ளதை அறிந்துகொள்ள முடிகிறது.

**சான்றாக:** ஜயமேரி, ஜயலெட்சுமி, விஜயா, விஜயலெட்சுமி, விஜய், விஜயேந்திரன், விஜயகாந்த், விஜய்வரதன் போன்ற பெயர்கள் ஆகும்.

## ராசி தொடர்பான மக்கட் பெயர்கள்

சோதிட வல்லுநர்கள் ஒருவர் பிறந்த போது சந்திரன் எந்த ராசியில் அமைந்திருக்கிறரோ அதனையே ராசியென்றும், அவரை அந்த ராசிக்காரர் என்றும் குறிப்பிடுவர். சூரியன் செல்லும் வீதியைப் பன்னிரண்டு மாதங்களாகவும் அதில் ஒவ்வொரு மாதமும், ஒவ்வொரு இராசிக்கு உரியதாகவும் வகுத்துப் பன்னிரண்டு மாதங்களுக்குப் பன்னிரண்டு இராசிகளைப் பகுத்துள்ளனர். அவை மேசம், ரிஷபம், மிதுனம், கடகம், சிம்மன், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் என்பனவாகும். அத்தகைய ராசிகளை இம்மாவட்ட மக்கள் பெயராகவும் இடுகின்றனர். முதல் எழுத்து, அல்லது முன்னொட்டு, பின்னொட்டு வரும்படி அமைத்துள்ளனர்.

**சான்றாக:** மேஷம் - ரமேஷ்

ரிஷபம் - ஹரிஷ்ர்த், ஹரிஷ், ஹரிஹரன்

மிதுனம் - மிதுன். மிதுனிகா

சிம்மம் - நரசிம்மன்

கன்னி - கன்னிகா, கன்னிகாஸ்ரீ

தனுசு - தனுஷ், தனுஷ்கோடி

மகரம் - மகரஜோதி

மீனம் - மீனலோசனி, மீனாட்சி

போன்ற பெயர்களைக் காணமுடிகிறது.

## ராசியின் நட்சத்திரம், தொடர்பான மக்கட் பெயர்கள்

ஒரு குழந்தை பிறந்த உடன் பிறந்த நட்சத்திரம் எதுவோ, எந்தப் பாதமோ, அதற்கு என்ன எழுத்து அடிப்படையில் வருகிறதோ, அதையே முதல் எழுத்தாக வரும்படி பெயர் வைப்பதும் வழக்கமாக உள்ளது. அப்படிப் பெயர் வைத்தால் குழந்தைக்கு நீண்ட ஆயுளுடன் நன்மைகளும் கிட்டும் என்ற நம்பிக்கை அடிப்படையிலும் மக்கள் பெயரிடுகின்றனர். குறிப்பாகப் பிராமணர், செட்டியார், வெள்ளாளர், மறவர், ஆசாரி போன்ற சாதியினரிடம் இவ்வழக்கு மிகுதியாகக் காணப்படுகிறது.

**சான்றாக:** கோபிகா, பாலா

சதயம் நட்சத்திரத்தில் பிறந்த தன் குழந்தைக்குப் பெயர் இராசி மற்றும் நாம நட்சத்திர எழுத்துக்களின் அடிப்படையில் கோபிகா என்றும், பூராடம் நட்சத்திரத்தில் பாலா என்றும் பெயரிட்டதாக சிதம்பரம் என்ற தகவலாளி குறிப்பிடுகிறார். (சிதம்பரம்.கரு. நாள்:24.6.2013) எவ்விதக் காரணமுமின்றி பெயர், இராசி என்பதைக் குறிக்கோளை மையமிட்டு இயற்பெயர் அமைவதை மேற்கூறிய பெயரின் வழி அறியமுடியும்.

ஒரு நட்சத்திரத்திற்கு நான்கு பாதங்கள் அமையும். ஒவ்வொரு பாதத்திற்கும் ஓர் எழுத்து உண்டு. குறிப்பிட்டவருக்குரிய பாதத்தைக் கணக்கிட்டுப் பின்பு அப்பாதத்திற்குரிய நாம எழுத்துக்கள் இயற்பெயரில் முதல் எழுத்தாக வருமாறு அமைக்கின்றார்கள்.

**சான்றாக:** அசுவினி நட்சத்திர நாம எழுத்துக்கள்

பாதம்: சு - சுந்தரி, சுரேந்தர் 1ஆம் பாதம்

சே - சேகர் 2ஆம் பாதம்

சோ - சோனியா, சோமு 3ஆம் பாதம்

ல - லட்சுமி, இலட்சனா 4ஆம் பாதம்

இவ்வாறான பெயரிடுமுறையில் குறிப்பிட்ட இயற்பெயருக்குரிய முதல் எழுத்தைக் கணிப்பதே சோதிடரின் பணியாக உள்ளது. அவ்வெழுத்துக்குரிய பெயரைத் தேர்வு செய்வது பெற்றோரின் பணியாக உள்ளது. குறிப்பிட்ட எழுத்தின் நட்சத்திரம், பாதம் இவைகளைப் பலரும் அறிந்து கொள்ளும் வகையில் சோதிட வல்லுனர்கள் அதனைப் பட்டியலிட்டு அட்டவணைப்படுத்தி உள்ளனர். இதனை நாமநட்சத்திர அட்டவணை எனக் கூறுவர். இந்த அட்டவணை 36 நட்சத்திரத்திற்குரிய நாம எழுத்துக்கள். கணம் மிருகம், பட்சி, விருட்சம் முதலியவற்றை அறியமுடியும். இவ்வட்டவணை கூடுதல் தகவலுக்காகப் பின்னிணைப்பில் கொடுக்கப்பட்டுளளது. பன்னிரண்டு இராசிகளுள் குறிப்பிட்ட இரசியின் நட்சத்திரம் மட்டுமே இயற்பெயராய் அமைவதுண்டு.

**சான்றாக:** உத்திரஞ்சன், அனுசியா, அனுஷ்கா, மீனலோசனி, மீனாட்சி

இவ்வாறு நட்சத்திரத்தில் பெயரிடுதல் குறைவாக, சோதிடத்தில் நம்பிக்கையுள்ளவர்களிடம் மட்டுமே காணப்படுகிறது.

## எண் கணிதம் தொடர்பான பெயர்கள்

பழமையான கலைகளுள் ஒன்று சோதிடக்கலை. ரேகைகள், எண் கணிதம் ஆகியவை மனிதனின் எதிர்காலத்தைக் கணிப்பதாக மக்கள் நம்புகின்றனர். கல்வியறிவு மிக்க குடும்பங்கள் சிலவற்றில் எண் கணிதமுறை கடைபிடிக்கப்படுகிறது. ஊரகங்களில் பெயர், இராசி, நட்சத்திரம் பார்த்துப் பெயரிடும் முறை இன்றும் வழக்கில் உள்ளது. ஒவ்வொருவருக்கும் பிறந்த தேதி, மாதம், ஆண்டு ஆகியவற்றின் கூட்டுத் தொகையைப் 'பிறந்த எண்' என்பர். ஒவ்வொரு எழுத்துக்கும் ஓர் எண் உள்ளது. அதனடிப்படையில் பெயர் எண் கணக்கிடப்படுகின்றன. பெயர் எண் கூட்டுத்தொகை இராசி இல்லையென்றால் சில எழுத்துக்களைச் சேர்த்தோ அல்லது குறைத்தோ தங்கள் பெயரை இராசி உள்ளதாக மாற்றிக் கொள்கின்றனர். இதனை 'எண் கணிதமுறை' அல்லது 'நியுமராலஜி' எனக் கூறுவர்.

"நியூமராலஜி எனப்படுகிற இந்த எண்கணித எழுத்து விஞ்ஞானக்கலை நாட்டில் மிகமிகப் பழமையான காலம்தொட்டு வழக்கில் இருந்து வருகிறது. அக்கலையை ஆய்வு செய்து வெளிப்படுத்திய கீரோ (தமிழ்வாணன் 1985:91) என்னும் புனைப்பெயர் கொண்ட மேல்நாட்டு அறிஞர், எண் கணிதம் தொடர்பாக 'கிரோஸ் புக் ஆப் நம்பர்ஸ்' என்ற நூலை முதன் முதலில் எழுதினார்.

இந்நூலில் இருபத்தாறு எழுத்துகளுக்கும் அவர் எண்களை வகுத்துக் கொடுத்திருக்கிறார். அவை பின்வருமாறு:

A-1

B-2 N-5

C-3 P-8

D-4 Q-1

E-5 R-2

F-8 S-3

G-3 T-4

H-5 U-6

I-1 V-6

J-1 W-6

K-2 X-5

L-3 Y-1

M-4 Z-7

இவ்வடிப்படையில் ஒரு பெயருக்குரிய பெயர் எண் கீழ்க்கண்டவாறு கணக்கிடப்படுகிறது.

சான்றாக: P. VELLAISAMY

8 6533113141

8+6+5+3+3+1+1+3+1+4+1=36

3+6=9

இப்பெயரில் 9 என்பது பெயர் எண்ணாகும். இவ்வெண்ணோடு ஒருவரின் பிறந்த எண்ணை ஒப்பீடு செய்து அவரின் குணங்களைக் கணக்கிடுகிறார்கள். இதே அமைப்பில் தமிழ் எழுத்துக்களுக்கும் அதற்குரிய எண்களை எண் கணித நூல்கள் குறிப்பிடுகின்றன."[60] இவ்வாறு ஒருவரின் பெயர் எண் ஆங்கில

எழுத்துக்களின் மூலமாகவும், தமிழ் எழுத்துக்களின் மூலமாகவும் கணக்கிட முடியும்.

இம்முறையில் ஒருவருடைய பெயர் எண்ணை இராசியில்லாத எண்ணாகக் கருதினால் குறிப்பிட்ட பெயரில் சில எழுத்துக்களைச் சேர்த்தோ அல்லது குறைத்தோ நல்ல எண் வருமாறு மாற்றி அமைக்கிறார்கள்.

**சான்றாக:** வாகனங்களுக்கு எண் வாங்கும் பொழுது பார்க்க முடியும்.

இது எண் கணித முறையின் சிறப்பம்சமாகும். வாழ்க்கையில் முன்னேற்றம் அடைதல் எடுத்த வினைகளில் வெற்றி அடைதல் பெயரிடுமுறைகளில் கையாளப்படுகிறது.

## ஒளி தொடர்பான பெயர்கள்

மக்கள் உணர்வும் இலட்சிய வேட்கையும் குறிக்கோளாகக் கொண்டு பெயரிடுகின்றனர். உளவியல் அடிப்படையில் பெயர்கள் இளமையும், வளமையும், முருகியல் உணர்வை வெளிப்படுத்தும் வகையிலும் அமைகின்றன. ஒளி தொடர்பான மக்கட் பெயர்கள் இவ்வுணர்வை அடிப்படையாகக் கொண்டவையாகும். கிரேக்கம் மற்றும் இலத்தின் மக்கட் பெயர்களில் ஒளியை அடிப்படையாகக் கொண்டு

"Helen-light"[61], (ப.104),

பெண்களுக்குப் பெயர் அமைகிறது.

"The world book eneyclo……1970"[62] (ப.105)

எனவே மனித வாழ்வின் இருளை அகற்றும் கூறாகப் பெயர்கள் அமைகின்றன.

**சான்றாக:** பிரகாசம், ஞானபிரகாசம், தமிழ்ஒளி, ஒளியன் என்று பெயர்கள் வைத்துள்ளனர். பிரகாஷ், ஒளிவியா போன்ற பெயர்களைக் கூறலாம்.

## இருள் தொடர்பான மக்கட் பெயர்கள்

பகல் - இரவு இரு கண்களுக்கு ஒப்பாகும் என்று மக்கள் பெயராக இட்டு வருவதை அறியமுடிகிறது.

**சான்றாக:** இருளப்பன், இருளாயி, இருளாண்டி, அம்மாசி, கருப்பன், கருப்பாயி போன்ற பெயர்கள்.

## தொகுப்புரை

- ❖ ஓர் அறிவு உயிர் முதல் ஆறறிவுள்ள மனித இனம் வரை தான் வாழும் சூழலுக்கு ஏற்ப தன்னைத் தகவமைத்துக் கொள்கின்றன. அறிவு வளர்ச்சி பெற்ற நிலையில் 'காட்டை அழித்துக் கழினி செய்தல்' என்பதனைத் தொல்காப்பியத்தில் அறியமுடியும்.

- ❖ நிலத்தின் தன்மைகளை அறிய அங்குள்ள மக்கட் பெயர்களும் ஊர்ப் பெயர்களும் துணைசெய்கின்றன. ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியில் கால சூழலுக்கு ஏற்ப மரங்கள், பறவைகள், மற்றும் பல்வேறு உயிரினங்கள் வாழும். அதுபோல மனித உயிர்களும் தான் எந்த சூழல் சமூகத்தில் வாழ்கிறோமோ அந்தந்த இடத்தையும் தெய்வத்தையும் பெயராக இட்டு வந்துள்ளதை இதன்வழிக் காணமுடியும்.

- ❖ பஞ்சபூதங்களையும் அவற்றின் மேற்பரப்பில் வாழும் உயிரினங்களையும் இயற்கைப் பொருளாக அறியமுடிகிறது. அத்தகைய இயற்கையை மக்கள் தலைமுறை தலைமுறையாகப் பெயர்களின் மூலம் போற்றிப் பாதுகாத்துவந்துள்ளனர் என்பதனைப் 'புதுக்கோட்டை மாவட்ட' மக்கள் பெயர்களில் காணமுடிகிறது.

- ❖ இயற்கை, முன்னோர் பெயர்களில் அதிக அளவு இடம்பெற்றுள்ளது. இன்றைய தலைமுறையினரிடம் நவீனகாலத்திற்கு ஏற்ற வகையில் பெயர்களின் இறுதியில் வடமொழி எழுத்துக்களான ஸ்ரீ, ஹ, ஷ், ஹா போன்றவை சேர்ந்து வருவதைக் காணமுடிகிறது.

## சான்றெண் விளக்கம்

1. பெ. சுப்பிரமணியன்(உ. ஆ.), பரிபாடல் (மூலமும் உரையும்), ப. 1
2. அ. ஆலிஸ்(உ.ஆ.), பதிற்றுப்பத்து (மூலமும் உரையும்), ப. 16
3. பெ. சுப்பிரமணியன்(உ. ஆ.), பரிபாடல் (மூலமும் உரையும்), ப. 60
4. மு. வரதராசனார், திருக்குறள் தெளிவுரை, ப. 47

5. பெ. சுப்பிரமணியன்(உ. ஆ.), பரிபாடல் (மூலமும் உரையும்), ப. 71
6. அ. ஆலிஸ்(உ. ஆ.), பதிற்றுப்பத்து (மூலமும் உரையும்), ப. 67
7. இரா. மோகன், பத்துப்பாட்டு (மதுரைக்காஞ்சி), ப. 288
8. தமிழண்ணல், தொல்காப்பியம், ப. 964
9. சி.வை.தாமோதரம்பிள்ளை, கலித்தொகை, ப. 106
10. பெ.சுப்பிரமணியன்(உ. ஆ.), பரிபாடல் (மூலமும் உரையும்), ப. 398
11. வ. குருநாதன், புறநானூறு (மூலமும் உரையும்), ப. 3
12. வி. நாகராசன்(உ. ஆ.), குறுந்தொகை (மூலமும் உரையும்), ப. 13
13. ஜெ. ராஜாமுகமது, புதுக்கோட்டை மாவட்ட வரலாறு, ப. 266
14. மேலது, ப. 265
15. சு. துரைசாமிப் பிள்ளை, நற்றிணை (மூலமும் உரையும்), ப. 853
16. இரா. செயபால்(உ. ஆ.), அகநானூறு (மூலமும் உரையும்), ப.6
17. ஜெ. ராஜாமுகமது, புதுக்கோட்டை மாவட்ட வரலாறு, ப. 265
18. சு. துரைசாமிப் பிள்ளை, நற்றிணை (மூலமும் உரையும்), ப. 107
19. மேலது, ப. 34
20. மேலது, ப. 857
21. இரா. செயபால்(உ.ஆ.), அகநானூறு (மூலமும் உரையும்), ப. 808
22. மேலது, ப. 43
23. தமிழண்ணல், தொல்காப்பியம் மூலமும் உரையும் கருத்து, ப. 5
24. அ. ஆலிஸ்(உ.ஆ.), பதிற்றுப்பத்து (மூலமும் உரையும்), ப. 262
25. ஜெ. ராஜாமுகமது, புதுக்கோட்டை மாவட்ட வரலாறு, ப. 268
26. மேலது, ப. 267
27. சி. வை. தாமோதரம்பிள்ளை, கலித்தொகை, ப. 72
28. இரா. மோகன், பத்துப்பாட்டு (மலைபடுகடாம்), ப. 47
29. வ. குருநாதன், புறநானூறு (மூலமும் உரையும்), ப. 109
30. இரா. மோகன், பத்துப்பாட்டு (மலைபடுகடாம்), ப. 45
31. தமிழண்ணல், தொல்காப்பியம் (மூலமும் உரையும்), ப. 5

32. வ. குருநாதன், புறநானூறு (மூலமும் உரையும்), ப. 109

33. வை. மு. கிருஷ்ணமாச்சாரியார், சிற்றிலக்கியம், ப.72

34. வ.குருநாதன், புறநானூறு (மூலமும் உரையும்), ப. 109

35. இரா.மோகன் (உ.ஆ.), முதற்தொகுதி, பத்துப்பாட்டு (மலைபடுகடாம்), ப. 16

36. தமிழண்ணல், தொல்காப்பியம், ப. 72

37. வ. குருநாதன், புறநானூறு (மூலமும் உரையும்), ப. 117

38. இரா. மோகன் (உ.ஆ.), முதற்தொகுதி, பத்துப்பாட்டு முதற்தொகுதி (மூலமும் உரையும்), ப. 72

39. இரா. செயபால் (உ.ஆ.), அகநானூறு (மூலமும் உரையும்), ப. 32

40. இரா. செயபால் (உ.ஆ.), அகநானூறு (மூலமும் உரையும்), ப. 89

41. வ. குருநாதன், புறநானூறு (மூலமும் உரையும்), ப. 68

42. மு. வரதராசனார், திருக்குறள் தெளிவுரை, ப. 229

43. மேலது, ப. 229

44. மேலது, ப. 229

45. வை. மு. கிருஷ்ணமாச்சாரியார், சிற்றிலக்கியம், ப. 19

46. பெ.சுப்பிரமணியன், பரிபாடல் (மூலமும் உரையும்), ப. 479

47. வ. குருநாதன், புறநானூறு (மூலமும் உரையும்), ப. 117

48. மேலது, ப. 213

49. வி.நாகராசன் (உ.ஆ.), குறுந்தொகை (மூலமும் உரையும்), ப. 675

50. இரா. செயபால் (உ.ஆ.), அகநானூறு (மூலமும் உரையும்), ப. 6

51. வ. குருநாதன், புறநானூறு (மூலமும் உரையும்), ப. 141

52. மேலது, ப. 195

53. இரா. மோகன், பத்துப்பாட்டு (மதுரைக்காஞ்சி), ப. 384

54. மு. வரதராசனார், திருக்குறள் தெளிவுரை, ப. 229

55. வே.அண்ணாமலையார், சங்க இலக்கியத் தொன்மக்களஞ்சியம்,ப.24

56. அ. ஆலிஸ் (உ.ஆ.), பதிற்றுப்பத்து (மூலமும் உரையும்), ப. 97

57. வே.அண்ணாமலையான், சங்க இலக்கியத் தொன்மக் களஞ்சியம், ப. 24

58. வ. குருநாதன், புறநானூறு (மூலமும் உரையும்), ப. 221

59. இரா. மோகன் (உ. ஆ. ), பத்துப்பாட்டு முதற்தொகுதி (மூலமும் உரையும்), ப. 216

60. வே.அண்ணாமலையார், சங்க இலக்கியத் தொன்மக் களஞ்சியம்,ப. 27

61. கா. பாஸ்கரன், தமிழியல் ஆய்வில் நூலில் மக்கட் பெயர்கள்,ப.104

62. மேலது, ப. 104

63. மேலது, ப. 105

64. தமிழண்ணல், தொல்காப்பியம் (மூலமும் உரையும்), ப. 60

# இயல்-5

# மக்கட் பெயர்களில் தெய்வப் பெயர்கள்

மக்கள் தங்களுக்கு மேலான சக்தி இருப்பதாக எண்ணி அதனைத் தெய்வமாக வணங்குகின்றனர். சிக்மண்ட் பிராய்டு மக்களின் அச்ச உணர்வும் குற்ற உணர்வும் வழிபாட்டிற்குரியக் காரணங்கள் என்பார். அவரவர் நம்பும் தெய்வங்களின் பெயர்களைத் தங்கள் தலைமுறையினருக்குச் சூட்டியுள்ளதைப் பெயர்களில் அறியமுடிகிறது. மக்களின் வாழ்வியல் ஆவணமாக விளங்குவன அவர்களின் பெயர்கள் ஆகும். பெயர்களின் மூலம் காலம், சமயம், சமுதாயம், வாழ்க்கை முறை குறித்த பல்வேறு செய்திகளை அறியமுடிகின்றன. இவற்றைக் கருத்தில் கொண்டு, 'புதுக்கோட்டை மாவட்ட' மக்கட் பெயர்களில் காணலாகும் தெய்வப் பெயர்கள் குறித்து இவ்வியலில் கண்டறியப் பெற்றுள்ளது.

## தெய்வம் பொருள் விளக்கம்

தெய்வம் என்பதற்குக் "கடவுள், ஊழ், வினை, ஆண், புதுமை"[1] (ப.158) என கோனார் தமிழ் அகராதியும், "கடவுள், கிருபை, ஊழ், எண்வகை மணத்திலொன்று, வருடம், ஐவகையாகத்தொன்று, தெய்வதம்"[2] (ப.283) என தமிழ்ச்சொல்லகராதியும்: "கடவுள், இறைவன்"[3] (ப.576) எனக் க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதியும் பல்வேறு பொருட்களைக் கூறுகின்றன.

## தெய்வத்தின் தோற்றம்

ஆதிகால மனிதன் இயற்கைச் சக்திகளைக் கண்டு அஞ்சினான். அந்த அச்சமே அவன் அவற்றை வணங்குவதற்குக் காரணமாய் அமைந்தது. முதற்தெய்வமாக இயற்கையை வணங்கினர். பின்பு தம் குடும்பத்தில் பிறந்து வயது முதிர்வினால் இறந்தவர்கள், போரில் வீர மரணமடைந்தவர்கள் பேய் வடிவில் வந்து துன்பம் செய்யாமலும் தம் குடும்பத்தைக் காக்கவும் வணங்கினர். அதனை,

**"அணங்கே விலங்கே கள்வர்தம் இறைஎனப்**
**பிணங்கல் சாலா அச்சம் நான்கே"[4] (தொல். 1202)**

**"அருநிலை உயர்தெய்வத் தணங்குசால்"[5] (பரிபா. 92)**

**"பேயும் அணங்கும் உருவுகொண்டு ஆய்கோல்"[6] (மதுரைக்.632)**

**"அணங்குவழங்கும் அகலாங்கண்
நிலத்தாற்றுங் குழுஉப்புதவின்
அரந்தைப் பெண்டிர் இனைந்தனர் அகவ"[7] (மதுரைக்.164-166)**

**"மணம்புணர்ந்து ஓங்கிய அணங்குடை நல்லில்"[8] (மதுரைக்.578)**

என்று முன்னோர், தெய்வங்களை வழிபட்டதைத் தமிழ் இலக்கியங்களின் வழி உணர முடிகிறது. ஆரியர் வருகையால் மொழிக்கலப்பு மட்டுமின்றி தெய்வக் கலப்பும் நிகழ்ந்து பெருந்தெய்வம், சிறுதெய்வம் என்ற பாகுபாடு ஏற்பட்டது.

## இலக்கிய இலக்கணங்களில் தெய்வம்

தெய்வம் என்னும் பெயர் கடவுளர் பொதுப்பெயராகச் சங்க காலத்திற்கு முன்பிருந்தே வழங்கி வருகிறது. தொல்காப்பியர் கருப்பொருள்களை விளக்குமிடத்து

**"தெய்வம் உணாவே"[9] (தொல்.பொரு. 1:2)**

என்று தொடங்குகின்றார். இதற்கு உரை வரைந்த ஆசிரியர் "நிலத்திற்குரிய தெய்வத்தையே முதலில் வைத்துள்ளனர். மக்களைப் போலவே தெய்வம் சுட்டிய பெரும் உயர்திணை என்னும் விளக்கமும் அவர் தந்துள்ளார்."[10] (தொல். சொல். 1-4) என்பர். மேலும்,

**"பால் வரை தெய்வம்"[11] (தொல். சொல். 1:58)**

என்றும்,

**"மொழிப்பொருள் தெய்வம்"[12] (தொல்.பொரு. 1:58)**

என்றும்,

**"உள்ளுறை தெய்வம்"[13] (தொல்.பொரு.செய். 106)**

என்றும் பல இடங்களில் தெய்வம் என்னும் பெயரைத் தொல்காப்பியர் பயன்படுத்தியுள்ளதை அறியமுடிகிறது.

கடவுள் என்பதையும் அவருடைய நூலுள் காண்கிறோம். என்றாலும் இச்சொல்லாட்சி தெய்வம் என்பதினும் குறைவே. "சங்க இலக்கியங்களிலும்

சிலப்பதிகாரம் மணிமேகலைக் காவியங்களிலும் கூடத் தெய்வம் என்பதே ஆட்சி மிகுதிமுடையதாய்க் காணப்படுகிறது."[15]

தெய்வம் குறித்துத் திருக்குறளில் மிகுதியாகக் காணப்படுகிறது. அவை,

**"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்**
**பெய்யெனப் பெய்யு மழை"[16] (குறள். 55)**

என்றும்,

**"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு**
**ஐம்புலத்தாறு ஓம்பல் தலை."[17] (குறள். 143)**

என்றும்,

**"குடிசெய்வல் என்னு மொருவற்குத் தெய்வம்**
**மடிதற்றுத் தான்முந் துறும்"[18] (குறள். 1023)**

என்று வள்ளுவர் தெய்வம் பற்றி பல்வேறு இடங்களில் குறிப்பிட்டுள்ளார்.

சிலப்பதிகாரத்தின் இறுதியில்,

**"தெய்வந் தெளிமின், தெளிந்தார்ப் பேணுமின்"[19]**

என்று இளங்கோவடிகள் அறமுரைக்கிறார். மாணிக்கவாசகர் திருவாசகத்தில்

**"தெய்வ மென்பதோர் சித்தமுண் டாகி**
**முனிவி லாததொர் பொருளது கருதலும்"[20]**

என்று தெய்வச் சிந்தனை எழுச்சி பற்றிப் பேசியுள்ளார்.

**"யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வமாகி யாங்கே**
**மாதொருபாக னார்தாம் வந்தருள் புரிவர்"[21] (பா.159)**

என்று சைவப் பெரியாரும்.

**"நும்மின்கவி கொண்டுநும் மிட்டா தெய்வத்தை ஏத்தினால்**
**செம்மின் மணிமுடியெம் திருமாலுக்கே சேரும்"[22]**

என்று வைணவ ஆழ்வாரும் தெய்வம் என்பதைப் பொதுப் பெயர் எனக் கொண்டு பாடியிருத்தலைக் காண முடிகிறது.

## தெய்வங்களின் வகைகள்

தெய்வங்களை அடிப்படையில் இரண்டு வகைகளாகப் பிரிக்க முடியும். அவை சிறுதெய்வம், பெருந்தெய்வம் ஆகும். சிறுதெய்வ வழிபாடு என்பது நாட்டுப்புறங்களில் பிறப்பு, இறப்பு என்ற நிலைகளில் இறந்த முன்னோரை வழிபடும் குலதெய்வ நிலையில் உருவானது ஆகும். சங்க இலக்கியத்தில் தெய்வம் பற்றி பெரும்பாண்மையாகப் பேசப்பட்டுள்ளது.

**"அந்தர மகளிர்க்குத் தெய்வமும் போன்றே"[23] (பா.76:4)**

என்று ஐங்குறுநூறும்,

**"கொடுஞ்சுழிப் புகார்த் தெய்வம் நோக்கி"[25] (அக.110:4)**

என்று அகநானூற்றிலும் காணமுடிகிறது. கலித்தொகையில்,

**"ஜயத்தால் என்னைக் கதியாதி தீதின்மை**
**தெய்வத்தால் கண்டீ தெளிக்கு"[26] (கலி.91:"7-8)**

எனவும், பரிபாடலில்

**"அருநிலை உயர்தெய்வத் தணங்குசால்"[27] (பரி.9-2)**

என்றும், பதிற்றுப்பத்தில்

**"வண்மையும் மாண்பும் வளனும் எச்சமும்**
**தெய்வமும் யாவதும்..."[28] (பதிற்.74:25-26)**

எனவும், நெடுநல்வாடை

**"தேளங் கொண்டு தெய்வம் நோக்கி"[29] (நெடுநல்.77)**

என்றும், பட்டினப்பாலையில்

**"மையறு சிறப்பின் தெய்வம் சேர்த்திய**
**மலரணி வாயிற் பலர்தொழு கொடியும்"[30] (பட்டினப்.159-160)**

என்றும், பெரும்பாணாற்றுப்படையில்

**"தெய்வ மடையில் தேக்கிலைக் குவைஇ"[31] (பெரும்பாண்.104)**

என்றும், திருமுருகாற்றுப்படையில்

**"தெய்வ உத்தியொடு வலம்புரி வயின்வைத்து"[32] (திருமுருகு.23)**

என்றும் தெய்வம் பற்றியக் குறிப்புக்களைச் சங்க இலக்கியங்களின் வழி அறிய முடிகிறது.

முன்னோர், தலைமக்களுக்கு நன்றி பாராட்டும் விதமாக அவர்களுக்குப் பிடித்த பொருளை அவர் இறந்த இடத்தில், புதைக்கப்பட்ட இடத்தில் வைத்து நினைவைப் போற்றும் வகையில் வணங்குவர். இதிலிருந்து சிறுதெய்வ வழிபாட்டின் தோற்றம் பற்றி அறியப்படுகிறது.

இவ்வாறு தோற்றம் பெற்ற தெய்வம் நாளடைவில் பிற நாடுகளின் தொடர்பால் மொழி, பழக்க வழக்கம், நாகரிகம், நடை, உடை எனப் பல்வேறு மாற்றங்களுடன் கலந்து சிறுதெய்வம் பெருந்தெய்வம் என உருவெடுத்துள்ளன. அவற்றைக் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தலாம்




## சிறுதெய்வம்

நாட்டார் வழக்காற்றில் சிறுதெய்வ வழிபாடே சிறப்பிடம் பெறும். மக்கள் தாங்கள் வாழும் ஊர்களிலுள்ள சதுக்கங்களிலும் சந்துகளிலும் கூடும் மன்றங்களிலும், தாம் வாழும் இல்லங்களிலும் சிறுதெய்வங்களைச் சமைத்து வணங்கி வந்தனர். "சதுக்கம் என்பது நான்கு தெருக்கள் கூடுமிடம். சந்து என்பது முச்சந்தி, ஐஞ்சந்தியைக் குறிக்கும். ஊருக்கு நடுவில் எல்லோரும் வந்து கூடுவதற்குப் பயன்படும் மரத்தடியே மன்று எனப்படும்."[33] (ப.24) என வே.வேலு குறிப்பிடுகிறார்.

மன்றம் அந்தந்த ஊர்களில் ஊருக்கு நடுவாய் செழித்து வளர்ந்திருக்கும் மரத்தைக் குறிப்பதாகும். நாட்டுப்புறங்களில் வாழும் மக்களின் வழிபடு தெய்வங்கள் காளி, கருப்பன், முனியன், மாடன், ஊமையன், அடைக்கலங்காத்தான் போன்ற சிறு தெய்வங்கள் ஆகும்.

சிறுதெய்வ வழிபாட்டில் உயிர்ப்பலி உண்டு. அச்சம் தரும் தோற்றமுடையது. இதனை அகநானூறு,

**"உயிர்ப்பலி பொறூஉம் உருகெடு தெய்வம்"[34] (166)**

எனக் குறிப்பிடுகிறது.

## சிறுதெய்வங்களில் மக்கள் பெயர்கள்

சிறுதெய்வங்கள் பலநிலைகளில் உள்ளன. இறந்தவரை நினைவு கூறும் வகையிலும், அவர்கள் தங்கள் குடும்பத்தைக் காத்து நிற்பர் என்ற நிலையிலும், அவர்களின் பெயர்களைத் தங்கள் குழந்தைகளுக்கு இட்டு வருகின்றனர். 'புதுக்கோட்டை மாவட்ட' மக்கள் 'முன்னோர் மரபை பொன்னே! போல் போற்றுதல் மரபு' என்ற நூற்பாவிற்கு இணங்க தங்கள் சிறுதெய்வங்களான முன்னோர், இல்லுரைதெய்வம், குலதெய்வம், காவல்தெய்வம் பெயர்களைத் தங்கள் குழந்தைகளுக்கு இட்டு வருகின்றனர்.

## முன்னோர்

மனித குலத்தில் முன் வாழ்ந்தவர். "ஒரு பரம்பரையின் மூதாதையர் (fore father: ances fors) (ப.859)"[35] என்று க்ரியா தற்காலத் தமிழ் அகராதி தெரிவிக்கின்றது. இறைவனடி சேர்ந்த முன்னோர்களின் உயிரானது (ஆத்மாவானது) தெய்வங்களாகத் தங்களது வீடுகளில் இருக்கின்றன, என்னும் நம்பிக்கையைக் கொண்டவர்கள் கம்மவார்கள் என்று அழைக்கப்படும் வலையர்கள். ஒவ்வொரு செயலையும் கண்காணித்து நம்மைக் காத்து வழி நடத்தி, நல்லவற்றை முன்னோர்களாகிய ஆத்மாக்கள் செய்கின்றன என்று முன்னோர்களைச் சிறப்பாக நினைத்து வழிபடுகின்றனர். "கம்மவார் இன மக்கள் முன்னோர் வழிபாட்டில் இறந்த ஒவ்வொருவரையும் அவர் இறந்த நினைவு நாளன்று சிறப்பாக நினைத்து வழிபடுதல், இறந்து போன முன்னோர்கள் அனைவரையும் ஒட்டு மொத்தமாக ஒரு நாளில் வழிபடுதல் என இரு நிலைகளில் உள்ளதாக"[36] கோ.சுரேஷ் குறிப்பிட்டுள்ளார்.

## முன்னோர் பற்றிய பிறநாட்டவர் கருத்து

உயிர் அழியாதது எனும் கருத்தில் முன்னோர் வழிபாடு கருக்கொண்டு இருத்தல் வேண்டும். உடலிலிருந்து நீங்கிய முன்னோர் உயிரை நினைத்துப் போற்றும் முகமாகவே நினைவிடம் எழுப்பப்பட்டது. இறந்தோர் உடலை எரிக்காமல் புதைக்கும் வழக்கமும் போற்றப்பட்டது. குறிப்பாக அரசர்கள், சமய தலைவர்கள், ஊர்ப் பெரியோர்கள் ஆகியோர்கள் இறப்பிற்குப் பிறகு உடல் எரிக்கப்படாமல் புதைக்கப்பட்டன. "எகிப்திய 'மம்மி' பண்பாட்டிற்கும் அடிப்படை இது தான். எகிப்திய முன்னோர் இறந்த தம் அரசருடன் அவர்தம் மனைவியரையும் பணியாட்களையும் உணவுப் பொருட்களையும் இன்னபிறவற்றையும் சேர்த்தே உள்ளே வைத்துப் பிரமிடைக் கட்டினர்."[37], என்று க.ப.அறவாணன் (ப.52) குறிப்பிட்டுள்ளார்.

"ஆல்பர்ட் ஸ்பென்சர் எனனும் சமூகவியலார் டார்வின் வழங்கிய பரிணாமக் கோட்பாட்டை உள்வாங்கிச் சமூகவியல் கோட்பாட்டை உலகுக்கு வழங்கினார். ஒவ்வொரு சமயமும் முன்னோர் வழிபாட்டையே வேர் மூலமாகக் கொண்டிருக்கிறது என்பது ஸ்பென்சரின் கருத்துகளுள் முதன்மையானது ஆகும்."[38] என்பர்.

ஒவ்வொரு சமயமும் முன்னோர் வழிபாட்டை மூலமாகவும் அடித்தளமாகவும் கொண்டிருக்கின்றன. இந்தியர்கள் இறந்த தாத்தா, பாட்டி ஆகியோர் கடவுளாக உலவுவதாகக் கருதுகின்றனர். கிரேக்கர் போராடுவதும், போரில் இறப்பதும் தம் நாட்டிற்காகவும், தம் பெற்றோரின் கல்லறைகளுக்காகவும், கடவுளின் இருப்பிடங்களுக்காவும் என்று நம்பினர். கடவுளின் இருப்பிடங்களை வழிபடுவதற்கு முன்னால், முன்னோர்கள் அடக்கம் செய்யப்பட்ட கல்லறைகளை முதலில் வணங்குதல் கிரேக்கர்களின் வழக்கம் ஆகும். பிஜித் தீவு வாழ்மக்கள் கிட்டத்தட்ட தம்மை ஆளும் அரசனைக் கடவுளுக்கு அடுத்த வரிசை என்று எண்ணி வழிபட்டனர். ஆப்பிரிக்காவில் மேற்குக் கடற்கரையில் வாழும் தகோதியர், தம் அரசரை, கடவுளால் பூமிக்கு அனுப்பப்பட்ட தூதுவர் என்று சிற்சில சமயங்களில் தம் கடவுளே என்றும், அரசன் முற்றும் கடவுளாகவே கருதி வழிபடப் பெற்றான் என்றும் நம்புகின்றனர்.

"நியூசிலாந்து தீவு வாழ் பழங்குடி மக்கள் இறந்துவிட்ட தன் இனக் குழுக் தலைவர்களைத் தெய்வமாக வழிபட்டனர். சீனா, முன்னோர் வழிபாட்டில் நம்பிக்கையுடைய நாடு ஆகும். சீனாவில் 4000 ஆண்டுகளாக முன்னோர் வழிபாடு போற்றப் பெறுகிறது. எகிப்திலும் முன்னோர் வழிபாடு பெரிய அளவில்

இருந்துள்ளது. கடவுளுக்கு அளிக்கப்பெறும் புனித மதிப்புகள் அரசர்களுக்கும், அவர்கள் வாழும் காலத்திலேயே எகிப்தியரால் செய்யப் பெற்றன. கிரேக்க மதம் முன்னோர் வழிபாட்டை அடித்தளமாகக் கொண்டு எழுப்பப் பெற்றது. இறந்தோர் ஆவியே பேயாகின்றன என பழங்குடி மக்கள் நம்பினர். இறப்பிற்குச் செய்யப்படும் பல்வேறு சடங்குகள் இறந்தோர்தம் ஆவியின் கோபத்தைத் தணிப்பதற்கும், மீண்டும் அவர்கள் மண் உலகிற்கு வரக்கூடாது என்பதற்காகவும் செய்யப்பட்டது"[39] என்பர் மாக்சு முல்லர்.

## முன்னோர் வழிபாட்டு நம்பிக்கை

இறந்தவர் தெய்வமாக இருந்து நம்மை வழிநடத்துவர். நமக்குத் துன்பம் நேராமல் காப்பர் என்ற நம்பிக்கை குடும்பத்தில் உள்ள மூத்தவர்கள் மீது இளையவர்களுக்கு மதிப்பு ஏற்படக் காரணமாகிறது. குடும்பங்களிடையே அன்புறவு வலுவாக மேன்மையடைய வாய்ப்பு ஏற்படுத்துகிறது. தெய்வத்தின் மேல் உள்ள நம்பிக்கை அதிகரிக்க உதவுகிறது. முன்னோர் வழிபாட்டை நாளடைவில் இல்லுறைத் தெய்வம், குலதெய்வம், ஊர்த்தெய்வம், காவல் தெய்வம் எனப் பல பெயர்களில் அழைக்கின்றனர்.

## முன்னோர் பெயர்களில் மக்கட் பெயர்கள்

பிறர் நலனில் ஆர்வம் கொண்டு பல்வேறு நன்மைகளைச் செய்து வந்தவருக்கு வயது முதிர்வின் காரணமாக இறப்பு நேரிடிகிறது. அவர் இறந்தாலும் அவர் தமக்கும் தம் சுற்றத்தார்க்கும் ஆற்றிய அரும் செயல்களை மறக்க முடியாது. இருந்த போதிலும் அவர் இன்னும் நம்முடனே வாழ்கிறார் என்ற நம்பிக்கையில் தன் மகனுடைய அல்லது மகளுடைய சந்ததியில் பேரன் பேத்திகளுக்கு அவர் பெயரை இட்டு மகிழ்கின்றனர்.

அவ்வாறு இடுவதின் நோக்கம் தம் பிள்ளையை ஆபத்தில் இருந்து அவர் காப்பார். அவரது புகழைத் தன் குழந்தையும் பெற வேண்டு என அவரின் பெயர் இடப்படுகிறது.

'புதுக்கோட்டை மாவட்ட' மக்கள் தங்களின் முன்னோர் பெயர்களை அதிக அளவில் தம் குழந்தைப் பெயர்களில் இட்டு வருவதைக் 'கள ஆய்வின்' வழி அறிய முடிகிறது. ஆடவர் வழிபாடு மட்டுமின்றி பெண்டிர்க்கும் இத்தகைய வழிபாட்டுச் சிறப்பு வழங்கப்பட்டது.

**"கடவுட் பத்தினிக் கற்கோள் வேண்டின்"[40]** **(பதிற்.45)**

என்ற பதிற்றுப்பத்தின் பதிகத்தில் பெண்டிர் வழிபாட்டையும் காண முடிகிறது. மக்கள் தெய்வங்களை வழிபட்டது மட்டுமின்றி மனிதருள் சிறந்தோரையும் தெய்வமாக மதித்து வழிபட்ட செய்தியினைத் திருவள்ளுவரும் தெளிவுபடுத்தியுள்ளார்.

**"வையத்து வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்**
**தெய்வத்துள் வைக்கப் படும்"[41]** **(குறள். 50)**

என்பதில் முன்னோரைப் போற்றும் மரபில் தனி மனிதர்களைத் தெய்வ நிலைக்கு உயர்த்திய கால வளர்ச்சியை அறியமுடிகிறது. கல்வி, அறிவு, ஒழுக்கங்களால் சிறந்தவர்களும், சமுதாயத் தலைவர்களுமாகிய மன்னர்களும் தெய்வத்தோடு ஒருங்கவைத்துப் போற்றிய வீரமரபைத் தங்களின் பெயர்கள் மூலம் வெளிப்படுத்துகின்றனர். "கிராமங்களில் எல்லா இனமக்களாலும் கொண்டாடப்பெறும சிறுதெய்வங்கள் அவர்களின் முன்னோர்களாக இருந்து வீரமரணம் அடைந்தவர்களாக இருக்க வேண்டும்"[42] என்பது துளசி இராமசாமியின் கருத்து ஆகும். முன்னோரைப் போற்றும் மரபாக அவர்கள் தம் இயற்பெயரை வழிவழியாக வைக்கின்றனர்.

## முன்னோர் பற்றிய நம்பிக்கை

முன்னோர்கள் பற்றிய நம்பிக்கைகள் பல்வேறு இடங்களில் இன்னும் உள்ளது. குறிப்பாக தினத்தந்தி நாளிதழில், வெளிநாட்டுச் செய்திகள் என்ற பகுதியில் "தென் ஆப்பிரிக்காவில் புமலங்கா என்ற ஊரில் 9 வயது பள்ளி மாணவன் ஒருவனுக்கும், 62 வயது மூதாட்டிக்கும் திருமணம் நடைபெற்றது. அம்மாணவனின் பெயர் 'சனே மசிலலா' பெற்றோருக்கு ஐந்தாவது பிள்ளையாகப் பிறந்தவன். மூதாட்டியின் பெயர் ஹெலன் ஷாபாங்கு. ஹெலனின் முன்னாள் கணவர் 'அல்பிரட் ஷாபாங்கு' முன்னிலையில் இத்திருமணம் நடைபெற்றது. இதன் மூலம் உலகிலேயே இளவயது மணமகன் என்ற பெருமையை 'சனே மசிலலா' பெற்றுள்ளான். இறந்த மூதாதையர் அடுத்த ஆண்டு அவனது கனவில் வந்து உடனே திருமணம் செய்யுமாறு கூறியதால் இந்த திருமணம் நடத்தப்பட்டதாக அவனுடைய பெற்றோர் தெரிவித்தனர்."[43] (தினத்தந்தி, ப.18, 23.7.2014)

இச்செய்தியின் மூலம் முன்னோர்களின் வழக்குகளை எவ்வாறுப் போற்றுகின்றனர் என்பதை இந்த நூற்றாண்டிலும் உணர்ந்து கொள்ள முடிகிறது. சங்க இலக்கியங்களில்,

**"சீர்கெழு மடந்தையீரமை பொருந்தா**
**நள்ளென் கங்குற கள்வன்போல்**
**அகன்துறை யூரனும் வந்தனென்**
**சிறந்தோன் பெயரன் பிறந்த மாதே"[44] (நற்றி. 40:9:12)**

என்ற அடிகளால் இவ்வழக்கினை அறிய முடிகிறது.

**"இனியெல்லா யாம் தீதிலே மெனன்று தெளிப்பவும் கைந்நீவி**
**யாதென்று மெங்கன் மறுத்தர வில்லாயின்**
**மேதக்க எந்தைப் பெயரனை யாங் கொள்வோம்**
**தாவா விருப்பொடு கன்றுயா துழிச்செல்லும்**
**ஆபோற் படர்தக நாம்"[45] (கலித். 81:3337)**

என்ற கலித்தொகைப் பாடல் மூலம் முன்னோர் பெயரைக் குழந்தைகளுக்கு வைப்பது வழக்கமாக இருந்திருக்கிறது என்பதைக் கண்டு கொள்ள இயலுகிறது.

## அமாவாசையும் முன்னோர்களும்

மாதந்தோறும் வரும் அமாவாசை முன்னோர்களுக்கென்றே தோன்றியது என்று கூறுவர். தினத்தந்தியில் அருள்தரும் ஆன்மிகம் (22.7.2014) என்ற இதழில் அமாவாசைப் பற்றிய செய்திகள் முன்னோர்கள் பற்றிய நம்பிக்கைகளைத் தெளிவுபடுத்துகின்றன. "அமாவாசை தினமானது இறந்த நமது முன்னோர்களை நினைத்து விரதம் மேற்கொள்ள உகந்த நாள் ஆகும். இவற்றில் தை அமாவாசை, ஆடி அமாவாசை, புரட்டாசி அமாவாசை போன்றவை முக்கியத்துவம் கொண்டவை. மிகவும் சிறப்பானது ஆடி அமாவாசையாகும். ஆடி மாதத்தில் சந்திரன் உச்சம் பெற்ற கடக ராசியில், சூரியன் சஞ்சரிப்பதே இதற்குக் காரணம். சூரியன் சிவ அம்சம், சந்திரன் சக்தியின் அம்சம். இவ்விரண்டு அம்சங்களும் ஆடி அமாவாசை தினத்தில் ஒன்றிணைவதால் ஆடி அமாவாசை முக்கியத்துவம் பெறுகிறது. இந்த விரதம் நமது முன்னோர்களை வேண்டி வணங்கும் விரதம் ஆகும்."[46] என்பர்.

முன்னோர்களை நினைத்து வழிபடும் சிறப்புத் தலங்களும் உள்ளன. "மூதாதையர்களுக்குத் தர்ப்பணம் செய்வதற்கு இந்தியாவில் காசியும், இலங்கையில் கீரி மலைக் கடற்கரையும் சிறப்புத் தலங்களாகக் கருதப்படுகிறது."[47] விரதம் மேற்கொண்டு வீடு சுத்தம் செய்து பல்வேறு உணவுகள் தயாரிக்கின்றனர். பின்பு இலைபோட்டுத் தயாரித்த உணவுகளைப் படையல் செய்து தீப-தூபம் காட்டி வழிபடுகின்றனர். ஒரு சிறு இலையில் படைத்த உணவுகளில் சிறிது சிறிதாக அனைத்து உணவுகளிலும் எடுத்து வைத்துக் காகத்திற்குப் படைக்கின்றனர். மக்களிடம், காக வடிவில் இறந்த முன்னோர்கள் வந்து உண்பதாக நம்பிக்கை உள்ளது.

## முன்னோர்

முன்னோர்கள் தெய்வ நிலை அடைந்துள்ளனர் என்றும், நம் குடும்பத்தைக் காத்து நிற்பர் என்ற நம்பிக்கையிலும் முன்னோர் மரபு போற்றப்படுவதை அறிய முடிகிறது. திருமயம் வட்டம் பிலிவலம் என்ற சிற்றூரில் கொள்ளுத் தாத்தாவின் பெயர் அழகன். அவர் பெயரையே கொள்ளுப் பேரனுக்கும் இட்டுள்ளனர். (தகவலாளி சுப்பையா, 19.6.13)

தாத்தா பெயர் நாராயண வேளார் ஆதலால் அவரின் முதல் எழுத்தில் வருமாறு பெயரனுக்கு நாகராஜன் என வைத்துள்ளதாக ஆலங்குடி வட்டம் கோட்டை என்ற ஊரில் கள ஆய்வில் அறியப்பட்டது.

அதே போன்று தாத்தா பெயர் ஜெயம்கொண்டமூர்த்தி. பெயரனுக்கு அவர் பெயரில் ஜெயசிம்மன் என்று வைத்துள்ளனர். (தகவலாளி, ஜெயசிம்மன், வெங்களூர், 15.6.13).

தாத்தாவின் பெயர் முத்தையா. பேரனுக்கு முதல் எழுத்தில் வருவதற்காக முத்துக்கண்ணு. த\பெ-அழகேசன் கண்ணனூர் 24.6.13.

தாத்தா பெயர் ஆறுமுகம் பேரனுக்கு அதே பெயரை இட்டுள்ளனர். த\பெ ஆறுமுகம் ராராபுரம் 14.6.13. திருமயம் வட்டம் விராச்சிலையில் தாத்தா பெயர் இராமநாதன் என்பதைக் கொள்ளுப் பெயரனுக்குப் பின்னொட்டாக சேதுராமன் என இட்டுள்ளனர்.

திருமயம் வட்டம் கோட்டூரில் தாத்தா பெயர் வீரப்பன். முன்னோர் பெயரை விடமுடியாமல் நவீன காலத்திற்கு ஏற்றார் போல் தாத்தா பெயர் மற்றும் நவீனப் பெயர்களை வீரப்பன் (எ) பிரசாந் என வைத்துள்ளனர்.

கொள்ளுப் பாட்டன் பெயர் ராமன். பெயரனுக்குப் பின்னொட்டாக ஜெயராமச்சந்திரன் என பெயரிட்டுள்ளனர்.

திருமயம் தாலுகாவில் குருவிக் கொண்டான்பட்டி என்ற சிற்றூரில் கொள்ளுத் தாத்தா பெயர் அழகப்பன். அவர் பெயரை நினைவூட்டும் வண்ணம் கொள்ளுப் பெயரனுக்குப் பின்னொட்டாக மதியழகன் என்று இட்டுள்ளனர். (த\பெ- முத்தையா 18.6.13.)

கொள்ளுத் தாத்தா பெயர் செல்லையா. அவர் பெயர் எழுத்துக்களை முன்னொட்டாகக் கொள்ளுப் பெயரனுக்கும், பெயர்த்திக்கும் இட்டுள்ளனர். அவை,

செல்வபிரகாஷ்

செல்வக் களஞ்சியம்

கொள்ளுத் தாத்தா பெயர் வடுகநாதன். பெயரனுக்கு அவர் பெயரையே இட்டுள்ளனர். த\பெ-கணேசன் சங்கரம்பட்டி 14.8.13.

கொள்ளுப் பாட்டி பெயர் சிவகாமி அதே பெயரைப் பெயர்த்திக்கு இட்டுள்ளனர்.

கொள்ளுப் பாட்டி பெயர் சௌந்தரம். நவீன் காலத்திற்கு ஏற்றார் போல் முன்னோர் பெயர்களை முன்னோட்டாகச் சேர்த்து சௌந்தர்யா என இட்டுள்ளனர்.

கொள்ளுப் பாட்டி பெயர் சாத்தம்மை. கொள்ளுப் பெயர்த்திக்குச் சந்தியா (எ) சாத்தாம்மை என இட்டுள்ளனர். (தகவலாளி சுப்பிரமணியன், கோட்டூர், 26.6.13).

'புதுக்கோட்டை மாவட்டத்தில்' பெரும்பான்மையினர் தங்கள் குழந்தைகளுக்குப் பெயர்களை இயற்பெயராகவும், முன்னொட்டு, பின்னொட்டுப் பெயராகவும், இரு பெயராகவும் இட்டுவருவதைக் கொண்டு முன்னோர் மரபும் பொன்னே போல் காக்கப்படுவதைக் கள ஆய்வின் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது.

தெய்வங்களை வணங்கினால் நன்மையும் வணங்காவிடின் தீமையும் செய்வதாக மக்கள் நம்புகின்றனர். வீட்டுத் தெய்வ வழிபாடு முன்னோர் வழிபாட்டில் அடங்கும். தனது வீட்டில் தன்னோடு வளர்ந்து வாழ்ந்து நோயினாலும் இன்னும் பிற காரணங்களினாலும் இறந்த ஆண், பெண்ணைத்

தெய்வமாக வணங்குவதோடு தம் வீட்டிலேயே இருப்பதாகவும் எண்ணுகின்றனர். அவர்கள் பயன்படுத்திச் சென்ற பொருட்கள் இவ் வழிபாட்டில் இடம்பெருகின்றன. இதனைச் சங்க இலக்கியங்கள் வாயிலாக,

**"இரும்பிரை விளக்கினில்**
**நெல்லும் மலரும் தூவி"[48] (நெடுநல். 42-3)**

என்றும்,

**"அந்திக் கோவலர் அம்பணை இமிழ் இசை**
**அரமிய வியலகத்து இயம்பும்"[49] (அகம். 124)**

என்றும் உணர முடிகிறது. தமது கழனியில் விளைந்த தானியங்களைச் சமைத்து முதலில் இல்லுரைத் தெய்வத்திற்குப் படைப்பர். எந்த விழாவானலும் அந்த விழாவிற்கு உரிய பொருட்களை இல்லுரைத் தெய்வத்திற்குப் படைத்து விட்டுப் பின்னர் அவற்றை மற்றவர் உண்டனர். இல்லுறை தெய்வத்தை மதித்துப்போற்றுவதைத் தற்பொழுதும் நடைமுறையிலும் காண முடிகிறது. இவ்வாறு போற்றப்படுவதுடன் சில வீடுகளில் இல்லுரைத் தெய்வத்தின் பெயர்களைத் தம் குழந்தைகளுக்கு இட்டும் வருகின்றனர்.

மணமேல்குடி வட்டத்தில் முத்துராசா என்பவரது வீட்டில் நான்கு ஐந்து தலைமுறைக்கு முன் ஒரு பெண் தெய்வம் வாழ்ந்தது என்று நம்புகின்றனர். அதன் பெயரையே தம் குழந்தைக்கு இட்டதாகத் தகவலாளி தெரிவித்தார். பொசலி என்ற பெயரைத் தம் குழந்தைக்குப் பொசலி மீனா என வைத்ததாகத் தெரிவித்தார்.

திருமயம் வட்டம் பனையப்பட்டியில் அழகம்மை என்பவரின் தம்பி. விபத்தில் இறந்துவிட்டார். தன் தம்பியின் நினைவாகத் தன் குழந்தைக்குத் தமிழ்வேந்தன் என்ற பெயரை இட்டுள்ளார். (20.6.13)

மேலப்பனையூர் என்ற சிற்றூரில் சுப்பையா என்ற தகவலாளியின் தம்பி இறந்துவிட்டதால் அவர் மகனுக்கு இராமையா எனப் பெயர் சூட்டியுள்ளார். கரையாம்பட்டி என்ற சிற்றூரில் பெருமாள் என்பவரது மகள் பொஷ்பராணி குளத்தில் விழுந்து இறந்துவிட்டாள். அவருக்குப் பிறந்த இன்னொரு பெண் குழந்தைக்கு அப்பெயரை வைத்துள்ளார்.

கறம்பக்குடி வட்டத்தில் அருணாச்சலம் என்பவரது தம்பி விடம் தீண்டி இறந்தார். அவரின் பெயர் அழகேசன். அருணாச்சலம் தனக்குப் பிறந்த பெண் குழந்தைக்குப் முன்னொட்டுப் பெயராக 'அழகுஸ்ரீ' என்று பெயர் இட்டுள்ளார்.

இவ்வாறு சிறுதெய்வ வழிபாட்டில் இல்லுறைத் தெய்வம் பெறும் பல்வேறு சிறப்புகளையும், மரபுகளையும் 'கள ஆய்வு' வழி கிடைத்த பெயர் பற்றிய தகவல்களால் அறிந்துகொள்ள முடிகிறது.

## குலதெய்வங்களில் மக்கட் பெயர்கள்

ஒரே சாதியில் பிறந்த அண்ணன் தம்பியாகிய பங்காளிகள் மட்டும் வணங்குவது குலதெய்வம். இப்பங்காளிகள் கொத்துகளாய்ப் (கிளைகள்) பிரிக்கப்படுவர். மூத்த சகோதரரும் வாரிசுகளும் முதல் கொத்தில் அடங்குவர். பங்காளிகளின் எண்ணிக்கைக்குத் தகுந்தாற் போன்று கொத்துகளின் எண்ணிக்கை பெருகும். ஒரு குடும்பத்திற்குக் காலச் சூழலுக்கு ஏற்ப வரி விதித்து வசூல் செய்யப்பெற்று விழாக் குழுவினரால் பொதுமைப்படுத்தி இக்குலதெய்வம் வணங்கப்பட்டு வருகிறது. குலம் தழைக்கப் பாடுபட்ட கொள்கையாளர்களைக் குலதெய்வமாக வழிபட்டு வருகின்றனர். இதற்கு உரிமை உள்ளவர்கள் மட்டுமே முக்கியமாக இத்தெய்வத்தினை வழிபடுவர். "ஒரு குலத்தைச் சேர்ந்தவர்கள் வழிபடும் தெய்வம்: Deity (of a community)"[50] ப.331.

'புதுக்கோட்டை மாவட்ட' மக்களின் பெயர்களைக் கள ஆய்வின் வழி கண்ட பொழுது பெரும்பான்மையான மக்கள் தங்கள் குலதெய்வப் பெயர்களைக் குழந்தைகளுக்கு இயற்பெயராகவும், முன்னொட்டு, பின்னொட்டுக்களாகவும் இட்டுவருகின்றனர்.

| **குலதெய்வங்கள்** | | **மக்கட்பெயர்கள்** |
|---|---|---|
| பொன்னழகிஅம்மன் | - | பொன்னழகி, அழகு, அழகப்பன், அழகி, அழகம்மை, அழகம்மாள், அழகமீனாள், அழகுசோலை, அழகுசுந்தரம், அழகுலெட்சுமி. |
| கல்யாணி அப்பச்சி | - | கல்யாணசுந்தரம், கல்யாணி |
| மதுரைவீரன் | - | வீரய்யா, வீரமணி, வீராயி, வீரியம்மாள், வீரப்பன். |
| கருப்பன் | - | கருப்பையா, கருப்பன், கருப்பாயி, கருப்பு. |
| உருமையா | - | வீரய்யா, உருமாண்டி, உருமாயி, உருமையா. |
| தையல்நாயகி | - | தையல்நாயகி. |
| சுந்தாயி அம்மன் | - | சுந்தாயி, சுந்தரம், சுந்தர்ராஜ், சுந்தரமூர்த்தி. |
| வள்ளிலிங்கம் | - | வள்ளிக்கண்ணு, வள்ளியப்பன், வள்ளி, மாணிக்கவள்ளி. |
| மாயண்டி | - | மாயம்மாள், மாயாண்டி. |
| அர்சனாதேவி | - | அர்சனா, அர்சனாதேவி. |
| அலமேலம்மாள் | - | அலமேலுவள்ளி, அலமு. |
| அடைக்கலங்காத்தா | - | அடைகள், அடைக்கப்பன், அடைக்கம்மை, அடைக்கலம், அடைக்கி. |
| ரெங்கநாதர் | - | உஷா (எ) ரெங்கநாயகி. |
| மங்களநாச்சி | - | மங்களம், மங்களகுமார். |
| காளியம்மன் | - | காளியப்பன், காளி, காளிதாஸ், காளியம்மாள், காளிஸ்வரி, காளிஸ்வரன். |
| பிச்சநாதர் | - | பிச்சநாதன், பிச்சையப்பன், பிச்சையம்மாள், பிச்சாண்டி, பிச்சாயி. |
| சிட்டாலம்மன் | - | சிட்டா, சிட்டப்பன் |

குலதெய்வம் அடிப்படையில் தங்கள் குழந்தைகளுக்குக் காதுகுத்தி மொட்டையடித்து குலதெய்வங்கள் பெயரை முதலில் வைத்து, பின் நவீனப் பெயர்களைச் சூட்டுகின்றனர்.

## காவல் தெய்வங்களில் மக்கள் பெயர்கள்

தனக்கென வாழாது பிறர்க்கென வாழ்ந்து மறைந்த சான்றோருக்கு எடுககப்பட்ட நினைவுக்கல் நடுகல் என்பதைப் பல்வேறு இலக்கண, இலக்கியங்களின் வழி அறிய முடிகிறது.

**"காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்**
**சீர்த்தகு சிறப்பிற் பெரும்படை வாழ்த்தல்"[51] (தொல். 1006)**

எனவும்,

**"என்ஐமுன்...கல்நின்றவர்"[52] (குறள். 771)**

எனவும்,

**"விழுத்தொண்டை மறவர் வில்லிடத்**
**எடுத்தடை நடுகல் அன்ன"[53](அகம்.352:1-2)**

எனவும்,

**"விழுந்தொடை மறவர் வில்லிட**
**எழுத்துடை நடுகல் இன்னிழல் வதியும்**
**அருஞ்சுரக் கவலை நீந்தி"[54] (அகம்.53:10-12)**

எனவும்,

**"கடுங்கய் மறவர் பகழி மாய்த்தென்**
**மருங்குல்நுணுகிய பேஎழுதிர் நடுகல்**
**பெயர்பயம் பாடரத் அசைவுடன்**
**ஆறு செல் வம்பவர்"[55] (அகம்.297:6-6-10)**

எனவும் பல்வேறு இலக்கியங்களின் வழி நடுகல் பற்றியும், காவல் தெய்வம் பற்றியும் அறிய முடிகிறது. உடலுக்கு முக்கியத்துவம் கொடுத்த காலகட்டத்தில் காதல், வீரம் இரண்டும் சிறப்பிடம் பெற்றுள்ளன. சிறந்த வீரன் நடுகல்லுக்கு உரியவனாகிறான். வீரம் புகழுடையதாக அக்கால கட்டத்தில் கருதப்பட்டது. இதனை,

**"அத்தம் நடுகல் ஆள்என உதைத்த**
**கான யானை"[56] (அகம்.365:4-5)**

என்ற பாடல் உணர்த்தும். சங்க காலத்தில் வேந்தன் வீரமரணம் அடைந்த போது அவனுக்குப் 'பள்ளிப்படை' எடுத்து வணங்கினர். சாதாரண வீரனுக்கு 'நடுகல்' எடுக்கப்பட்டது. பள்ளிப்படையும், நடுகல்லும் முன்னவர் வழிபாடாக வளர்ந்து குலதெய்வமாக வணக்கமாக மலர்ந்துள்ளது.

இன்று அரசியல் தலைவர்கள், திரைப்பட நடிகர்கள் போன்றோர் இறப்புக்குப் பின் சமாதிக்கோயில், நினைவு மண்டபங்கள் எடுத்துத் அவர்களை மதிப்பதையும் வணங்குவதையும் காணலாம். முற்காலத்தில் அரசர்களாக இருந்து இறந்தவர்களுக்குச் சமாதிகளாக அமைக்கப் பெற்றவைகளை இன்றும் கோயில்களாகவும், பூசை வழிபாடுகளுடன் கூடிய சிறப்பான இடங்களாகவும் விழாக்களுடன் கொண்டாடுவதை உணரலாம்.

மக்களுக்குக் காவல்காரனாகவும் உயிர்காக்கும் அரணாகவும் விளங்கியவர்கள். இறந்தாலும் நமக்கு என்றும் காவலாக இருப்பர் என்ற நம்பிக்கையில் ஊர் எல்லையில் சிலை அமைத்து வழிபடுகிறார்கள். தனக்கென வாழாது சமுதாயத்திற்காக வாழ்ந்து மறைந்தவன் தெய்வம் ஆகிறான். அவனுக்குப் பின் வந்தவர்கள் அவன் இறந்தும் நம்மை செய்வான் என்று நம்பி நலந்தருமாறு வேண்டி வணங்குகின்றனர். அவ்வாறு வழிபடும் தெய்வங்களில் ஆண் தெய்வங்களும், பெண் தெய்வங்களும் அடங்கும். 'புதுக்கோட்டை மாவட்டத்தின்' எல்லைத் தெய்வங்களாகப் பல்வேறு தெய்வங்கள் காணப்படுகின்றன.

ஐயனார், கருப்பன், கொப்பனா கோட்டை முனி, சவ்வாது கருப்பர், பிடாரியம்மன், முத்துமாரியம்மன், அழகநாயகி அம்மன், சங்கிலிக் கருப்பர், நொண்டிக் கருப்பர், ஆளடிக் கருப்பர், மடையக் கருப்பர், பெரியநாயகி அம்மன், வீரமா காளியம்மன், சோலைநாதர், திருவப்பூர் முத்துமாரி, கொன்னையூர் முத்துமாரி, நார்த்தாமலை, கலிய பெருமாள், ஐயனார், காளி ஆகிய தெய்வங்கள் எல்லைத் தெய்வங்களாக உள்ளன. இத்தெய்வங்களின் பெயர்களைத் தங்கள் குழந்தைகளுக்கு வைத்தால் அவர்களை எல்லைத் தெய்வங்கள் காக்கும் என்றும் நம்புகின்றனர்.

## காவல் தெய்வங்கள்

தமிழ் மக்கள் பழங்காலந்தொட்டு மரபு வழியில் மிகுந்த நம்பிக்கையோடு நாட்டுப்புறத்தெய்வங்களை வணங்கி வருகின்றனர். இத்தெய்வங்கள் தேவதைகள், சிற்றூர் தெய்வங்கள் எனவும் அழைக்கப்படுகின்றன. இவை

மக்கட் பெயரிடுமுறையில் பெறும் பங்கு வகிக்கின்றன. ஒவ்வொரு ஊரும் ஒன்று அல்லது அதற்கு மேற்படட தெய்வங்களின் சக்திக்கு உட்பட்டிருப்பதாகக் கருதப்படுகிறது. ஊர்த்தெய்வங்கள் சிற்றூர் வாழ்வில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தெய்வங்களின் பெயரை இனப் பாகுபாடின்றி பலர் தங்கள் குழந்தைகளுக்கு இடுகின்றனர்.

சிற்றூர்த் தெய்வங்களுக்குச் சில இடங்களில் சிறப்பு வழிபாடுகளும் திருவிழாக்களும் நடைபெறுகின்றன. இவ்வழிபாட்டில் பல இன மக்களும் வணங்கி, நேர்த்திக்கடன்களைச் செலுத்துகின்றனர். இத்தெய்வ வழிபாடு வேற்றுமை உணர்வின்றிப் பொதுவழிபாடாகத் திகழ்கிறது. அவை தொடர்பான பெயரை வைப்பதில் மக்கள் சிறிதும் ஏற்றத்தாழ்வைப் பார்ப்பதில்லை. இத்தெய்வ வழிபாடு மக்களிடையே ஏற்றம் பெற்ற காலத்தில் பெயரிடு முறைகளிலும் பெரிய மாற்றங்கள் ஏற்பட்டன. மக்கள் தங்கள் வாழ்வின் தேவைகளைப் பெறவும். அம்மை, காலரா போன்ற கொடிய நோய்களினின்றும் காக்கவும், மழை பெறவும் இத்தெய்வங்களை இனப்பாகுபாடின்றி கூட்டாக வழிபாடு செய்கின்றனர். மக்களிடையே நிலவிய நாட்டுப்புற நம்பிக்கைகளும் பெயரிடுமுறைகளில் பெரும்பங்கு வகித்தன. மனித சமுதாயம் பல்வேறு பிரிவுகளாக வாழ்ந்தபோதிலும் ஊர்த்தெய்வ வழிபாடும் அவை தொடர்பான மக்கட்பெயர்களும் பொதுவான ஓர் இலக்கையே நோக்கி அமைந்துள்ளன.

இப்பகுதியில் ஓதுவாரல்லாத பிற இனத்தவரிடம் இத்தகைய பெயர்கள் மிகுதியாக அமைந்துள்ளன. இத்தெய்வங்களின் செல்வாக்கினை மாவட்டத்தின் பல பகுதிகளிலும் காணப்படும். இப்பெயர்கள் ஆண் தெய்வங்கள் தொடர்பான பெயர்கள், பெண் தெய்வங்ககள் தொடர்பான பெயர்கள் என இருவகையாகப் பாகுபாடு செய்யப்பட்டுள்ளன.

## ஆண் தெய்வங்கள் தொடர்பான பெயர்கள்

ஆண் தெய்வங்ககள் தொடர்பான பெயர்களில் ஐயனார், கருப்பர், கொப்பனா கோட்டை முனி, கோட்டை முனீஸ்வரன், சவ்வாதுக் கருப்பர், சங்கிலிக் கருப்பர், நொண்டி கருப்பர், பதினெட்டாம் படிக் கருப்பர், ஆளடிக் கருப்பர், மடையக் கருப்பர், சோலைநாதர், களிய பெருமாள் ஐயனார், சோலை அழகர் போன்றவை முக்கியப் பங்கு வகிக்கின்றன. குறிப்பிட்ட மக்களால் வணங்கப்படும் பொதுவான தெய்வங்களின் பெயர்களும் இதில் அடங்கும்.

## அய்யனார்

ஊரின் முன்னோடிக் காவல் தெய்வமாக அய்யனார் கருதப்படுகிறார். மாவட்டத்தின் பெரும்பாலான சிற்றூர்களில் இத்தெய்வக் கோவில் அமைந்துள்ளது. சிற்றூர் மக்கள் அனைவராலும் வழிபடும் தெய்வமாக அய்யனார் உள்ளார். கோவில் முன்புறம் இவரின் வாகனமாக இரு குதிரைகள் கம்பீரமாக நிற்கின்றன. பொருளாதார வசதிகொண்ட சில ஊர்களில் குதிரைகள் பெரிய பீடங்களில் பைஞ்சுதையால் (சிமெண்ட்) கட்டப்பட்டுள்ளன. அய்யனார்க்கும் சாத்தன் என்ற பெயரும் உண்டு. இப்பெயர் மக்கள் வழக்கில் மிகுதியாகக் காணப்படுகிறது.

**"உண்ம் என இரக்கும் பெரும்பெயர்ச் சாத்தன்"[57] (புறம். 178)**

என்பதைப் புறநானூற்றின் வழியும் காணலாம்.

இப்பெயரையொட்டிப் பல்வேறு ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. சாத்தான் குளம், சாத்தக்குடிப்பட்டி, சாத்தூர், சாத்தனூர் புக்கோட்டையில் இருந்து 20கி.மீ தொலைவில் கலிய பெருமாள் அய்யனார் கோவில் மாவட்ட அளவில் சிறப்பிடம் பெற்றது. இக்கோவில் மக்களின் ஆதரவால் பெருந்தெய்வக் கோவில் அமைப்பைப் போன்று கோபுரங்களுடன் காணப்படுகிறது. இப்பகுதியில் சாத்தப்பன், சாத்தையா, சாத்தாயி போன்ற பெயர்கள் மிக அதிகமாகக் காணப்படுகின்றன. இவ்வாறான பெயர்கள் இனப்பாகுபாடின்றி பிராமணரல்லாத எல்லா பிரிவினரிடமும் காணப்படுகிறது. சாத்தன் என்ற பெயர் தனிப்பெயராகவும் அதனோடு பின்னொட்டு இணைந்தும் அமைந்துள்ளது.

**சான்றாக:** சாத்தன், சாத்தப்பன், சாத்தையா, சாத்தக்கண்ணு, சாத்தாயி, சாத்தி, சாத்தமுத்து.

அய்யனார் என்ற வடிவம் ஐயனார் என்ற சொல்லின் மாற்று வடிவமாகும். இப்பெயர் ஐயன் என்ற சொல்லிலிருந்து வந்ததாகும். காவல் தெய்வங்களுள் தலைமையான தெய்வம் என்ற நிலையில் ஐயன் என்ற சொல் கடவுளைக் குறித்தது. பிற்காலத்தில் 'ஆர்' என்ற சிறப்பு விகுதி இட்டு ஐயனார் என வழங்கினர். தற்போது இவ்வடிவத்தை அய்யனார் என மாற்றம் செய்து மக்கட் பெயராக இடுகின்றனர். சாத்தன் என்னும் பெயர் பழங்காலந்தொட்டு மக்கள் பெயரிடுமுறையில் சிறப்பிடம் பெற்று வருகிறது. இவ்வடிவம் அய்யனாருக்குரிய பெயர் என்பதைச் சேந்தன் திவாகரம், பிங்கலம், சூடாமணி முதலிய

நிகண்டுகள் இயம்புகின்றன என்று கா.பாஸ்கரன் கூறுகிறார். இதன் மூலம் சாத்தன் என்ற பெயர் தமிழருக்கு வழங்கி வந்த பழமையான பெயர் என அறியபடுகிறது.

மக்கள் பெயரிடும் முறையில் சாத்தன் என்ற பெயர் காவல் தெய்வத்தை அடியொற்றி அமைந்துள்ளது. சிற்றூர்களில் பிற தெய்வங்களைக் காட்டிலும் சாத்தன் வழிபாடு சிறந்து விளங்குகிறது. சாத்தன் கோவில் ஒவ்வோர் ஊருக்கும் வட எல்லையில் காட்டுப்பகுதியில் அமைந்திருக்கிறது. அதன் இருப்பிடத்தை அடியொற்றியும் சில இயற்பெயர்கள் அமைந்துள்ளன.

**சான்றாக:** காடப்பன், காடையன், காட்டையா

சாத்தன், ஊரைக் காவல் புரிவதால் 'காத்தல்' எனும் தொழில் அடிப்படையிலும் பெயர்கள் இடப்பட்டுள்ளன.

**சான்றாக:** காத்தையா, காத்தப்பன், காத்தாயி, காத்தி

இத்தெய்வத்திற்குப் பல்வேறு பெயர்கள் வழங்குகின்றன. இப்பெயர்கள் வழிவழியாகச் சொல்லப்பட்டு வருவதால் அதன் பொருளை அறிவதில் பெரும்பாலும் மக்கள் அக்கரை காட்டுவதில்லை. இவ்வாறான பெயர்கள் மேலும் ஆய்வுக்குரியன.

இப்பகுதியில் அய்யனாரை அடியொட்டி மிகுதியான பெயர்கள் உள்ளன. அய்யனாரைத் தடிகொண்ட அய்யனார் எனவும், கலிய பெருமாள் அய்யனார் எனவும் கூறுகின்றனர்.

**சான்றாக:** கலியமூர்த்தி, கலியபெருமாள், கலியகோனார், கலியவரதன், கலியன், கலியாணி.

இப்பெயர்களை செட்டியார், யாதவர், வெள்ளாளர், மறவர், ஆசாரி, அகமுடையார், பள்ளர், மீனவர் எனப் பல இன மக்களும் தங்கள் குழந்தைகளுக்கு இடுகின்றனர். இதன் மூலம் இவ்வழிபாட்டின் சிறப்பினை அறிய முடிகிறது. தற்கால வழக்கில் சாத்தன் தொடர்பான பெயர்கள் வழக்கிழந்து வருகின்றன.

இச்சாத்தன் 'வழிபாடு கேரளாவில்' அய்யப்பன் வழிபாடாக மாற்றம் பெற்றுள்ளது. இப்பகுதியிலுள்ள மக்கள் வருடந்தோறும் கேரளம் சென்று வருகின்றனர். இங்கு 'அய்யப்பன்' என்ற பெயர் முக்கியப் பங்கு வகிக்கின்றது.

## கருப்பனசாமி

அய்யனாருக்குத் துணைக் காவல் தெய்வம் கருப்பர். இத்தெய்வம் குலதெய்வமாகவும், ஊர்த் தெய்வமாகவும் போற்றப்படுகிறது. இதற்குச் சில இடங்களில் தனிக்கோவில்கள் உள்ளன. சான்றாக, குளத்தூர் வட்டம் 'வெள்ளனூர்' என்ற ஊரிலுள்ள கருப்பன் கோவிலுக்கு வருடந்தோறும் சிறப்புப் பூசை செய்து உயிர்ப்பலியும் இடுகின்றனர். இந்தப் பூசை அவ்வூரிலுள்ள மறவர், வெள்ளாளர், பள்ளர் ஆகியோரால் நடத்தப்படுகிறது. இச்சிறப்பு நாளில் இம்மாவட்டத்தைச் சுற்றியுள்ளச் சிற்றூர் மக்கள் திரளாக வந்து வழிபடுகின்றனர். இத்தெய்வத்தைப் பல இன மக்களும் வழிபடுவதை அவர்களின் பெயர்கள் வாயிலாக அறிய முடிகிறது.

**சான்றாக:** கருப்பையா தேவர், கருப்பசாமி நாடார், கருப்பையாஆசாரி, கருப்பையா பிள்ளை, கருப்பையா சேர்வை, கருப்பையாக் கோனார், கருப்பி, கருப்பாயி, கருப்பு.

எனவும் ஆதிதிராவிடர்கள் கருப்பன், கருப்பணன் எனவும் பெயரிடுவதால் இத்தெய்வத்தின் மீது கொண்ட பக்தியுணர்வைத் தெளிவாக அறியப்படுகிறது. பெயரிடுமுறையில் ஊர்ப்பொதுத் தெய்வங்கள். இனப்பாகுபாடற்ற சமநிலையில் பங்கு வகிப்பது அறியத்தக்கது. தற்காலப் பெயரிடுமுறையில் கருப்பன், கருப்பசாமி போன்ற பெயர்கள் காணப்படவில்லை.

## முனியசாமி

கருப்பனுக்கு அடுத்த நிலையில் வணங்கப்படும் தெய்வம் முனியசாமி. மாவட்டத்தின் அனைத்துப் பகுதிகளிலும் இப்பெயர் மிகுதியாக அமைந்துள்ளது. இதற்கு உருவ வழிபாடு இல்லை. குத்துக்கல்லின் அருகில் அரிவாள் அல்லது சூலத்தை நட்டு வைக்கிறார்கள். இதனை இத்தெய்வத்திற்குரிய குறியீடுகளாக மக்கள் கருதுகின்றனர். சிற்றூர்த் தெய்வங்களின் அடையாளமாகக் குத்துக் கல்லும் சூலமும் விளங்குகின்றன. இவை நடுகல் வழிபாட்டை நினைவுப்படுத்துகின்றன.

'புதுக்கோட்டை மாவட்டம்' கோட்டைகள் நிறைந்த மாவட்டம் என்பதால் இங்கு அதிக அளவில் கோட்டையை மையமிட்ட முனிக்கோயில்கள் அதிகமாகக் காணப்படுகின்றன. கோட்டை முனிஸ்வரன், கொப்பனா கோட்டை

முனிஸ்வரன், முனிஸ்வரன் கோயில், பாண்டி முனிஸ்வரன் போன்ற கோயில்களைக் காணமுடிகின்றன.

அண்ணன்மார் சுவாமி கதையில் பெரிய காளி அம்மனின் ஆணையை நிறைவேற்றும் தெய்வமாக முனி விளங்குகிறது. இதனை,

**"வில்லளந்து சரந்தொடுத்த வீரமகாமுனியை**
**மலை பிளந்த நாளையிலே வாழும் மகாமுனியை**
**. . .**
**வீராதி வீரன் வீரமகாமுனியை"[58]          (கள்ளழகர் அம்மானை:1958:14)**

என்ற அடிகள் மூலம் அறியப்படுகிறது.

இத்தெய்வம் சிற்றூர்களில் அனைவராலும் வணங்கப்படுகின்றன. இறந்தவர்களே முனியாக மாறுவதாக மக்களிடையே கருத்து நிலவுகிறது. பேய், பிசாசு போன்று முனியும் தங்கள் குழந்தைகளிடம் பாய்ந்து விடாமல் காக்கக் குழந்தைகளுக்கு முனி தொடர்பான பெயர்களை இடுகின்றனர். இங்கு முனி என்ற பெயரோடு பின்னொட்டுக்கள் சேர்ந்து இயற்பெயர்கள் அமைகின்றன.

**சான்றாக:** முனியசாமி, முனியப்பன், முனியாண்டி, முனீஸ்வரன், முனிச்சாமி, முனிஸ்மூர்த்தி, முனியம்மாள், முனியாயி, முனிராஜ், கோட்டை, கோட்டையப்பன், கோட்டையம்மாள், கோட்டைராஜா.

'முனி' என்ற பெயரோடு முருகனைக் குறிக்கும் 'ஆண்டி' என்ற பெயர் இணைந்து வழங்கப்படுகிறது. முனியாண்டி, முனியசாமி போன்ற பெயர்கள் மாவட்டத்தில் அதிகமாகக் காணப்படுகின்றன. இனப்பாகுபாடின்றி அனைவராலும் இப்பெயர்கள் இடப்படுகின்றன. இவ்வாறான பெயர்கள் குழந்தைகளின் பாதுகாப்புக் கருதி இடப்படுகின்றன.

## பெண் தெய்வங்கள் தொடர்பான பெயர்கள்

ஊர்த் தெய்வங்களுள் காளியம்மனும், மாரியம்மனும் மக்களிடையே செல்வாக்குடன் விளங்குகின்றன. இம்மாவட்டச் சிற்றூர்களில் வாழும் மக்களிடம் இவ்விரு தெய்வங்களைப் பற்றிய பெயர்கள் அதிகமாகக் காணப்படுகின்றன. இத்தெய்வங்களின் வழிபாடு சாதிப்பாகுபாடற்ற வழிபாடாகத் திகழ்கிறது. இவை காவல் தெய்வங்களாகவும், அம்மை, காலரா போன்ற கொடிய

நோய்களினின்றும் காக்கும் தெய்வங்களாகவும் இருந்து வருகின்றன. இப்பெண் தெய்வங்களின் பெயர்கள் ஆடவருக்கும் பெயராய் அமைகின்றன.

**சான்றாக:** பிரகதம்மாள், அம்பாள், பிரகதீஸ்வரி, பிரகதீஸ்வரன் போன்றவையாகும்.

## காளியம்மன்

உலகின் எட்டுச் சக்திகளின் அவதாரம் காளி வழிபாடு. இத்தெய்வம் சிற்றூர்களின் வடக்குப் பகுதியில் நீர்நிலையின் கரையில் ஊரின் எல்லையில் அமைந்துள்ளது. இத்தெய்வத்திற்குக் கட்டட அமைப்புக் கொண்ட கோவில்கள் காணப்படுகின்றன. முற்காலத்தில் சுடுமண்ணால் செய்யப்பட்ட காளி சிலைகள் அமைத்துள்ளனர். தற்போது கல்லில் செதுக்கப்படுகின்றனர். இத்தெய்வம் பல இன மக்களாலும் வணங்கப்படுகிறது. பெண் தெய்வங்களுள் காளி, ஆற்றல் மிக்கத் தெய்வமாக நம்பப்படுகிறது. காளி தொடர்பான மக்கட் பெயர்கள் சிற்றூர்களில் மிகுந்த எண்ணிக்கையில் காணப்படுகின்றன. காளி எனத் தனிப் பெயராகவும், பின்னொட்டும் சேர்ந்தும் மக்கட் பெயர் அமைகின்றன.

**சான்றாக:** காளிமுத்து, காளியப்பன், காளியா, காளிதாஸ், காளியம்மாள், காளீஸ்வரி, காளிஸ்வரன்.

இப் பெயர்கள் மாவட்டம் முழுவதும் 20 வயதுக்கு மேற்பட்ட நபர்களிடம் மிக அதிகமாக உள்ளன. பள்ளர், பறையர், சக்கிலியர், நாடார், மீனவர், வண்ணார், வெள்ளாளர், மறவர், யாதவர், அகமுடையார், ஆசாரி, குயவர் எனப் பல இன மக்களிடமும் வழக்கில் உள்ளன.

தற்காலத்தில் 20 வயதுக்கு உட்பட்ட குழந்தைகளிடம் காளி தொடர்பான பெயர்கள் காணப்படவில்லை. திருமயம் வட்டம் மேலூர் பஞ்சாயத்தைச் சேர்ந்த காளியம்மாள் என்ற தகவலாளி தன்னுடைய மகளுக்கு நந்தினி, முத்துலெட்சுமி எனப் பெயரிட்டுள்ளார். அதே ஊரைச் சேர்ந்த காளியப்பன் தனது பிள்ளைகளுக்குச் சீமாட்டி, சீனிவாசன் எனப் பெயரிட்டதைப் பேட்டியின் போது அறியமுடிந்தது. (க.காளியப்பன், 25.6.13) சிறுதெய்வங்கள் தொடர்பான பெயர்கள் மறைந்து வருகின்றன. ஒரு காலத்தில் உயர்வாக நம்பப்பட்ட தெய்வப் பெயர்கள் அறிவியல் வளர்ச்சியால் மாற்றமடைந்துள்ளன.

## மாரியம்மன்

காளியம்மனைப் போன்று மாரியம்மனும் ஊர்த் தெய்வங்களுள் ஒன்றாகும். மாரி ஏழு சகோதரிகளுள் ஒருத்தியாகவும், சக்தியாலும், கொடூரத்திலும் பலம் வாய்ந்தவளாகவும் மக்கள் நம்புகின்றனர். பெரும்பாலும் இக்கோவில் ஊரின் நடுவே அமைந்திருக்கும். இதனை மாரியம்மன் மேடை என்பர்.

இளஞ்சாவூர் அருள்மிகு முத்துமாரியம்மன் கோவில் புதுக்கோட்டை மாவட்ட மக்களுக்குச் சிறப்பான தெய்வமாக விளங்குகிறது. புதுக்கோட்டைக்கு அருகே உள்ள திருவப்பூர் மாரியம்மன் கோவில், நார்த்தாமலை மாரியம்மன் கோவில் போன்ற சிறப்பான அம்மன் தலமாக விளங்குகின்றன. மக்கள் மாரி தொடர்பான பெயர்களை இடுகிறார்கள். இத்தெய்வத்தை அம்மை நோயைத் தீர்க்கும் கடவுளாக நம்பி மக்கள் வழிபடுகிறார்கள். புதுக்கோட்டையில் இருந்து 25கி.மீ தொலைவில் கரையாம்பட்டி என்ற ஊரில் 2011-ஆம் ஆண்டில் பங்குனி மாதம் ஊரில் உள்ள குடும்பத்தில் ஒவ்வொருத்தருக்கும் அம்மை போட்டுள்ளதால் யாரும் பொங்கல் விழா கொண்டாடவில்லை. “மாரிகுத்தம் உள்ளது. என ஒருவர் மீது அருள் இறங்கி அடுத்த களரிக்கு விழா ஊரோடு பூத்தட்டு எடுத்து என்னைய வழிபடுங்க இப்ப நான் போய்விடுகிறேன். இன்றிலிருந்து மூன்றாம் நாள் அம்மை இட்ட அனைவருக்கும் நீர்விடுங்கள்”[59] என்றது. அதே போல அனைவருக்கும் அம்மை இறங்கிவிட்டது. அன்றிலிருந்து பங்குனிமாதம் இளஞ்சாவூர் முத்துமாரியம்மனுக்குப் பூத்தட்டு எடுத்து ஊரோடு அனைவரும் செல்வதாகத் திருமயம் வட்டம் கரையாம்பட்டி செல்வராஜ் கூறினார்.

குழந்தைகளின் நலம் கருதி இத்தெய்வம் தொடர்பான பெயர்களை மக்கள் மிகுதியாக இடுகின்றனர். மாரியம்மன் பெண் தெய்வமாக இருப்பினும் ஆண்களுக்கும் பெயராய் அமைகின்றது. மாரி எனத் தனிப்பெயராகவும் முன்னொட்டும் சேர்ந்தும் வழங்குகின்றன.

**சான்றாக:** மாரி, மாரிக்கண்ணு, மாரியாயி, மாரிமுத்து, மாரியம்மா.

எனவும் வழங்கப்படுகின்றன. இதே போன்று ஆண்களுக்கும் முன்னொட்டுச் சேர்த்து வழங்கப்படுகிறது.

**சான்றாக:** மாரி, மாரியப்பன், மாரிமுத்து, மாரிஸ்.

முத்துமாரி என்பதில் முத்துவை முன்னொட்டாகவும், பின்னொட்டாகவும் பெயர்களுக்கு அதிக அளவில் இட்டு வருகின்றார்கள்.

**சான்றாக:** முத்துக்கண்ணு, முத்தழகு, முத்துலெட்சுமி, முத்தன். முத்தாயி, முத்துராமன், செல்லமுத்து, முத்தம்மாள் முத்தாத்தாள், முத்தி, முத்துமீனாள், வீரமுத்து, முத்துச்சாமி, முத்துச்செல்வம், முத்துச்செல்வி

போன்ற பெயர்கள் இப்பகுதியில் மிகுதியாகக் காணமுடிகின்றன. மனிதமனம் மனிதனுடைய துன்பங்களை விலக்கி உயிர்களை இன்புறச் செய்யும் தன்மை தெய்வத்திடம் இருக்கிறது என நம்புகிறது. சிறுதெய்வங்கள் தம் வாழ்வில் பல்வேறு வேண்டுதல்களை நிறைவேற்றியதாக முன்னோர்கள் நம்பியதால் அவை தொடர்பான பெயர்கள் தலைமுறை தலைமுறையாக வைக்கப்பட்டு வந்துள்ளன. தெய்வங்களின் வடிவம் கோவில் வழிபாடு, திருவிழாக்கள், பெயரிடுமுறைகள் போன்றவை எல்லா இனத்திலும் சிறுதெய்வ வழிபாட்டில் ஒரு தனித்த மரபைக் கொண்டுள்ளதை அறிய முடிகிறது. இது தமிழர் பண்பாட்டுக் கூறுகளில் ஒன்றாக அமைகிறது. எனினும் பெருந்தெய்வங்களின் ஆதிக்கத்தாலும் மக்களின் நாகரிக வளர்ச்சியாலும் சிறு தெய்வங்கள் தொடர்பான மக்கள் பெயர்கள் அருகி வருகின்றன. இல்லத்தில் அழைப்பதற்குத் தனிப்பெயரும், நவீனப் பெயர்கள் பள்ளிகளில் அழைப்பதற்கும் இட்டு வருகின்றனர். பெயரிடும் முறைகளில் மாற்றம் நிகழ்ந்து வருவது குறிப்பிடத்தக்கதாகும்.

## பெருந்தெய்வங்களில் மக்கட் பெயர்கள்

ஒரு நாட்டின் வரலாறு, சமயம், நாகரிகம், பண்பாடு ஆகியவை அந்நாட்டு மக்கட் பெயர்களில் பதிந்துள்ளன. பண்டையத் தமிழரின் சமூக வரலாற்றினைத் தெள்ளிதின் அறிய அத்தமிழர் மேற்கொண்ட பெயரிடுமுறையினை ஆய்தல் வேண்டும். இதனடிப்படையில் புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள பெருந்தெய்வங்களைச் சமய வழியில் மாந்தர் பெயர்களைக் கண்டு விளக்குவதே இவ்வியலின் நோக்கமாகும்.

## பெருந்தெய்வத் தத்துவம்

பெருந்தெய்வங்கள் பிறப்பு, இறப்பு அற்றவை. உயிர்ப்பலி இடுதல் இல்லை. புலால் உணவை மறுப்பவை. ஆகம விதிகளின்படி கோவில்கள் அமைந்துப் பொதுக் கோவில்களாக இருக்கும்.

## பெருந்தெய்வம்

இயற்கை வழிபாட்டு நிலையிலிருந்த ஐந்திணைத் தெய்வ வணக்கங்களும் இரண்டு பிரிவாக வளர்ச்சியடைந்தன. இது ஆரியக் கலப்பால் ஏற்பட்டவை என்பர். அவை

1. சைவம்,
2. வைணவம்.

சேயோன் வணக்கத்திலிருந்து சைவமும், மாயோன் வணக்கத்திலிருந்து வைணவமும் தோன்றின. பேரூர்களில் அன்று பெருந்தெய்வக் கோயில்கள் இருந்தமைக்கான இலக்கியச் சான்றுகள் உள்ளன. அவை,

**"பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்**
**அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்**
**வால்வளை மேனி வாலியோன் கோயிலும்**
**நீலமேனி நெடியோன் கோயிலும்**
**மாலை வெண்குடை மன்னவன் கோயிலும்"[60]**

**(சிலம்பு. புகார். இந்திர. பக்.162-173)**

எனப் புகார் நகரில் இருந்த பெருங்கோயில்களைப் பற்றி சிலம்பு கூறுகிறது.

## பெருந்தெய்வ வழிபாட்டு முறை

ஆகம அடிப்படையில் அமைந்த நிலையான கோவில்கள் பெருந்தெய்வங்களுக்கு உண்டு. நித்திய நியமப் பூசையாகக் கற்பூரம் காட்டித் தேங்காய் உடைப்பதும், நீரையும், மஞ்சளும் கலந்து ஆரத்தி செய்வதும், பூக்களை இறைவனின் காலடியில் தூவிப் போற்றிப் பாடுவதும் இப்பெருந்தெய்வ வழிபாட்டில் சராசரி வழக்கமாகக் கடைபிடிக்கப்படுகின்றன. இப்பெருந்தெய்வக் கோயில்களில் பலிபீடம் இருப்பதைக் காண முடியும். "பலிபீடம் என்பது பிறர்க்கு அளிக்கும் அமுது வைக்கும் இடம். பரிவார தேவதைகளுக்கு உரிய

உணவு வைக்குமிடம் பலிபீடம்”[61], என இரா.சந்திரசேகரன் தம் நூலில் கூறியுள்ளார்.

### சமய வகைகள்

தொடக்க கால மனிதன் வாழ்வியல் நாடோடி நிலையில் இருந்திருக்கிறது. இயற்கையில் கிடைக்கும் காய்கறிகள், பழங்கள், வித்துக்களைத் தின்று உயிர் வாழ்ந்தான். பின் இயற்கையின் அச்சுறுத்தலுக்கு அஞ்சி அவற்றை வணங்கினான். பிறகு தம்மோடு வாழ்ந்து மறைந்தவர்களைப் பேயாக்கி அவர்களை வணங்கினால் துன்பம் நேராது என்ற நிலையில் கற்களை ஊன்றி வழிபட்டான். இவற்றின் வளர்ச்சி நிலைகளாக எல்லைத் தெய்வங்கள் காவல் தெய்வங்கள் என உருவம் கொடுத்து வணங்கினான். இவ்வாறு உண்டும், உறங்கியும், களிப்பில் மிகுந்தும் உள்ள மனித உயிர்களைப் பக்குவப்படுத்துவதற்கு, நெறிப்படுத்துவதற்கு உருவாக்கப்பட்டதே சமயம் ஆகும். “செய்த செயலின் பயனை அனுபவிக்க வேண்டியிருப்பது. மனிதருக்கு மறு பிறவி உண்டு முதலிய கொள்கைகளைக் கொண்டதும் பெருமளவில் இந்தியாவில் பரவியிருப்பதுமான மதம்”[62], என்று க்ரியா அகராதி குறிப்பிடுகிறது.

உலகத்தில் மக்கள் பின்பற்றி ஒழுகும் சமயங்கள் பல. “சமணம் (ஜைனம்), இந்து, பௌத்தம், கிறித்தவம், இஸ்லாமியம், யூதம், சீக்கியம்,. சொராத்தி, கன்பூசியம், தாவோ, ஷிந்தோ”[63] எனப் பல சமயங்கள் உண்டு என்று அ.லெ.நடராஜன் குறிப்பிடுகிறார். இவற்றில் சில சமயங்கள் தொன்மையானவை. சில சமயங்கள் பிற்காலத்தில் தோன்றியவை. சில சமீப காலத்தில் தோன்றியவை ஆகும். “இவை நான்கும் வெளிநாடுகளிலிருந்து இந்தியா வந்தவை. மேலே குறிப்பிட்டுள்ள சமயங்களில் சமணம் (ஜைனம்), பௌத்தம், இந்து, கிறித்து ஆகிய நான்கும் இந்திய நாட்டில் இன்றும் வாழ்கின்றனர். சமணம் (ஜைனம்), பௌத்தம், சீக்கியம் ஆகிய மூன்றும் இந்திய மண்ணில் தோன்றியவை ஆகும்.”[64] என்று அ.லெ.நடராஜன் கூறுகிறார். வெளிநாடுகளில் தோற்றம் பெற்றாலும் நம் நாட்டிற்கு வந்த பிற மதத்தினையும் இணைத்துக் கொள்ளும் மரபு தமிழ்மரபு. அனைத்து மதத்தினையும் ஏற்றுக் கொண்டு; இந்தியப் பண்பாட்டின்படி மதம், இனம், மொழி ஆகியவை வேறுபாட்டாலும் நாம் அனைவரும் இந்தியர் என்ற ஒருமைப் பாட்டோடு உருவாகியுள்ளது.

மதங்களைக் கொண்டு மக்கள் தங்கள் குழந்தைகளுக்கு எவ்வாறெல்லாம் பெயர்களை இட்டு வருகின்றனர் என்பதன் அடிப்படையில் இம்மாவட்ட மக்கள் பெயர்களை மதம் தொடர்பாக அறிவதே இவற்றின் நோக்கமாகும்.

## சமய வளர்ச்சி

சங்க காலத்தில் பல்வேறு சமயங்கள் இருந்தாலும், மக்கள் வேறுபாடு இல்லாமல் அன்பையே இறைவனாகக் கருதி வாழ்ந்தனர். எந்நிலத்தில் வாழ்ந்தவராயினும் அவர்கள் அன்பின் உண்மைத் தத்துவத்தை உணர்ந்தவர்களாக இருந்தனர். தாம் வாழும் நிலத்தின் தெய்வத்திற்குக் கோயில் கட்டினர், விழா நடத்தினர். மாலைகள் சூட்டி மனதார வணங்கினர். நிலங்களின் தெய்வங்களைப் பற்றித் தொல்காப்பியத்தில்,

**"மாயோன் மேய காடுறை உலகமுஞ்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் லுலகமும்**
**வருணன் மேய் பெருமண லுலகமும்**
**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்**
**சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"[65]** **(தொல்.பொருள். 5)**

இடம் பெற்றுள்ளதை அறிய முடிகிறது. எந்த சமயத்துக்கும் இல்லாத பெரும் சிறப்பு இந்து சமயத்திற்கு மட்டும் உள்ளது. ஆதி முதல் அந்தம் வரை தொடர்புடையது நிலம் மட்டுமே. அத்தகைய நிலத்தைப் பாகுபாடு செய்து அவற்றிற்கு உருவமும் வழிபாடும் இட்டு வருவது தமிழருக்குரிய பெரும் சிறப்பாகும். அத்தகு சிறப்பில் தோன்றிய சமயம் இந்து சமயம். அதனுள் இரு பிரிவுகள் சைவம், வைணவம் என்பது ஆகும்.

## சைவ சமயம்

குறிஞ்சிக்கு முருகன், முல்லைக்குத் திருமால், மருதத்திற்கு இந்திரன், நெய்தலுக்கு வருணன் எனக் கடவுளாகக் கூறப்பட்டுள்ளன. தெய்வங்களில் சிவன் என்று குறிப்பிடாதது குறிப்பிடத்தக்கது. இருப்பினும் சிவனைப்பற்றிய தோற்றம், செயல்முறை, கதைகள் கொண்ட பெயர்களைச் சங்க நூல்கள் தெரிவிக்கின்றன. தொல்காப்பியத்தில் சிவனைப் பற்றிய குறிப்புகளைக்

குறிப்பிடவில்லை. தொகை நூல்கள் சிவன் என்ற பெயரைக் குறிப்பிடாவிட்டாலும் சிவனின் சிறப்புப் பெயர்களைக் கூறுகின்றன. அவை “கறைமிடற்று அண்ணல், நீலமணிமிடற்று அண்ணல், முக்கட் செல்வன், முழு முதல்வன், பாகத்து ஒருவன், பைங்கட் பார்ப்பான், புங்கயம் ஊர்பவன், மறுமிடற்று அண்ணல், முக்கண்ணன், கணிச்சியோன், ஆலமர் செல்வன், சலதாரி”[7] என பல்வேறு சிறப்பு பெயர்கள் தொகை நூல்களில் உள்ளதாக அ.சுவாமிநாதன், சங்க கால சமயம் என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

சிவனைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது அந்நூல்கள் கொன்றை மாலை அணிந்தவன், முடிமேல் பிறைச்சந்திரன் சூடப்பெற்றவன், முடிமேல் மேகம் பெற்றவன். கங்கையைத் தாங்கியவன், மூன்றுகண்களைப் பெற்றவன், கழுத்தில் விடக்கறை அடைந்தவன், கையில் கபாலம் ஏந்தியவன், புலித்தோல் ஆடை அணிந்தவன், உமையொரு பாகம் பெற்றவன், முப்புறங்களை எரித்தவன், எரித்த சாம்பலைப் பூசியவன் என்று கூறுகின்றன. சேரன் செங்குட்டுவன் சிவன் அருளால் பிறந்தவன் என்றும், அவன் சிவபூசை செய்தான் என்றும், கொடு கொட்டிக் கூத்து ஆடினான் என்றும் சிலப்பதிகாரம் தெரிவிக்கிறது.

மதுரைக் காஞ்சி தெய்வங்கள் வரிசையில் சிவ பெருமானை முதன்மையாகக் கூறுகின்றது.

> **“கடவுள் வழங்கும கையறு கங்குலும்**
> **அச்சம் அறியாது ஏம மாகிய”[66]**

என்பதையும் இதன்கண் காணமுடிகிறது.

## நிகண்டுகளில் சிவன் பெயர்கள்

தெய்வங்களுக்குள் சிவபெருமானுக்கே மிகுதியான பெயர்கள் நிகண்டுகளில் காணப்படுகின்றன. முதல் நிகண்டான திவாகர நிகண்டில் உள்ள சிவபெயர்கள் (64) அறுபத்துநான்கு. இவற்றுள் ஒருபகுதிப் பெயர்கள் சிவபெருமானின் திருவுருவக் காட்சி பற்றியன. மற்றொரு பெரும்பகுதிப் பெயர்கள். அப்பெருமானின் திருவிளையாடல்கள் பற்றி அமைவன. அவன் பல்வேறு வகையான மூர்த்தி பேதங்களையுடையவன் என்பதைத் தெரிவிப்பன. வடமொழி வழியால் இயைந்த பெயர்களும் இடையிடையே வருகின்றன. பெருமானின் தெய்வீகப் பண்பு நலன் பற்றிப் பிறந்த பெயர்களும் பலவாகும்.

1. “அந்திவண்ணன்
2. அமலன்
3. அரவாபரணன்
4. அரன்
5. அழலாடி
6. அழலேந்தி
7. அனாதி
8. ஆதி
9. ஆலமர்கடவுள்
10. ஆனந்தன்
11. ஆனையுரிந்தோன்
12. இறையோன்
13. ஈசன்
14. ஈமத்தாடி
15. உமாபதி
16. உருத்திரன்
17. ஏற்றுவாகனன்
18. ஐம்முகன்
19. கங்காதரன்
20. கங்காளன்
21. கண்ணுதல்
22. கபாலமூர்த்தி
23. கயிலையாளி
24. கறைமிடற்றுஅண்ணல்
25. காமதகனன்
26. காலகாலன்
27. குன்றவில்லி
28. கூர்றையுதைத்தோன்
29. கொன்றை சூடி
30. சங்கரன்
31. சடையோன்
32. சிவன்
33. சுடலையாடி
34. சோதி
35. ஞானமூர்த்தி
36. தற்பரன்
37. திரியம்பகன்
38. நக்கண்
39. நந்தி
40. நம்பன்
41. நாதன்
42. நாரிபாகன்
43. நீலகண்டன்
44. நீறணிக் கடவுள்
45. பகவன்
46. பசுபதி
47. பரசுபாணி
48. பரமன்
49. பாண்டரங்கன்
50. பிஞ்ஞகன்
51. பித்தன்
52. பிறைசூடி
53. பினாகபாணி
54. புரமுன்றெரிந்தோன்
55. புலித்தோலுடையோன்
56. பூதநாதன்
57. பெருமான்
58. பேயோடாடி
59. மழுவாளி
60. மறைமுதல்
61. மானிடமேந்தி
62. முக்கட்கவன்
63. மூர்த்தி
64. யோகி”[67]

திவாகர நிகண்டினை அடுத்துத் தோன்றிய பிங்கல நிகண்டில் மட்டும் பதினாறு சிவப் பெயர்கள் உள்ளதாக மு.சண்முகம் கூறுகிறார். அவை,

"1. அநாதி
2. அரூபி
3. கொன்றைமாலையன்
4. சசிதரன்
5. திரிபுராந்தகன்
6. நாசமில்லோன்
7. நாயகன்
8. நிருத்தன்
9. பாசுபதன்
10. பார்ப்பதிகொழுநன்
11. பிதா
12. புண்ணியன்
13. பூதேசன்
14. மாலயற்கரியோன்
15. வாமன்
16. வேதமுதல்வன்"[68]

இவ்வாறே கயாதரம், பாரதிதீபம், ஆசிரிய நிகண்டு, பொதிகை நிகண்டு ஆகியவற்றில் 161 பெயர்கள் காணப்படுவதாக மு.சண்முகம் பிள்ளை கூறுகிறார்.

**"கண்ணுதற் பெருங் கடவுளும் கழகமோடமர்ந்து**
**பண்ணுறத் தெளிந்தும் ஆய்ந்த இப்பசுந்தமிழ் அணைய"[69]**

என்னும் பாடல் அடிகளின் மூலம் சைவ, சமய ஆதிமூம் சிவபெருமானே தமிழ்க் கழகத்தில் புலவராகத் தமிழ் வளர்த்தார் என்பது புலனாகிறது. "சிவ வழிபாடே உலகில் மிக்க பழமையானது"[70] என்றும் "சைவத்தின் மேற்சமயம் வேறில்லை"[14] என்பதும் சர் ஜான் மார்ஷல் கருத்தாக நாட்டார் தெய்வங்கள் என்னும் நூலில் இரா.சந்திரசேகரன் கூறுகிறார். இதனை,

**"... மூத்த புரிசைப்**
**பராவரு மரபிற் கடவுட் காணின்**
**தொழா அநிர் கழியின் அல்லது வறிது**
**நும்மியர் தொடுதல் ஓம்பமின் மயங்குதுளி**
**மாரி தலையமவன் மல்லல் வெறிபே"[71]** **(மலைபடு. 229-33)**

என்ற பாடல் உணர்த்தும். தொகை நூல்கள், புராணங்கள், அறிஞர்களின் கூற்று ஆகியவற்றின் அடிப்படையில் நோக்கும் பொழுது சமயங்களில் சிவசமயம்

தமிழகத்தில் முதன்மையாகப் போற்றப்பட்டிருப்பதை இதன்வழி கண்டு உணர முடிகிறது.

## சைவத்தில் மக்கட் பெயர்கள்

தமிழ்ச் சமயத்தின் முதன்மையானதாகப் போற்றப்படுவது சைவ சமயம். அத்தகைய சைவ சமயம் புதுக்கோட்டை மாவட்டத்தில் எத்தகைய சிறப்பு பெற்றிருக்கிறது என்பதை அறிய இம்மாவட்ட மக்கட் பெயர்களை ஆராயும் பொழுது சைவத்தின் தொன்மை புலனாகிறது. அங்குள்ள பல்வேறு சிவாலயங்கள் இதற்கு அரணாக அமைந்துள்ளன. சான்றாக,

புதுக்கோட்டையில் இருந்து 5கி.மீ தொலையில் உள்ளது. திருக்கோகர்ணம். அங்குள்ள (லிங்கம்) மூலவர் கோகர்ணேசர் என்று அழைக்கப்படுகிறார்.

**புராண வரலாறு:** "இந்திரனால் சாபம் பெற்ற காமதேனு பசு கபில முனிவரின் உபதேசத்தால் தனது இரண்டு காதுகளிலும் கங்கை நீரை நிரப்பிக் கொண்டு வந்து சிவபெருமானுக்கு அபிடேகம் வழிபாடு செய்துவந்ததால் இத்தலத்திற்கு கோகர்ணம் (கோ-பசு, கர்ணம்-காது) என்று பெயர் ஏற்பட்டது."[72] புதுக்கோட்டை சமஸ்தானமாக இருந்தபோது அதன் கலை, கலாச்சார மையமாகத் திகழ்ந்த இடம். இங்கு கி.பி.8-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த குகைக் கோயில் உள்ளது. ஆதி காலத்தில் இத்தல கபில வனம் என்ற மகிழமரத்தை விருட்சமாகக் கொண்டுள்ளதால் மகிழவனம் என்றும் வழங்கப்பட்டது. "கல்வெட்டுகளில் தென்கவிர்நாட்டு திருவேள்பூர் திருக்கோகர்ணம் என்று குறிப்பிட்டுள்ளது."[73] இக்கோயில் இம்மாவட்ட மக்களின் சமுதாய வாழ்வில் மெத்தவும் தொடர்படையதாகும். ஏராளமான மக்களின் பெயர்கள் முன்னொட்டாகவும் பின்னொட்டாகவும் இடையொட்டாகவும் விளங்குகிறது.

**சான்றாக:** ஆண்பெயர்களாக கோகர்ணேசர், கர்ணர் கணேசர் என்று பல்வேறு நபர்களுக்கு ஒரே பெயர் வைத்து வழங்கியிருப்பது இந்த மகிழவனேசரைப் போற்றும் விதம் நன்கு புலப்படுகிறது. அது மட்டுமல்ல பெண்களுக்கும் அவ்வாறான பெயர்கள் காணப்படுகின்றன.

**சான்றாக:** கோமதி, கோகிலா, கோவிந்தை, கோவிந்தம்மாள், திருகோகர்ணேஷ்வரி என்று அமையப் பெற்றதை அறிய முடியும்.

கபிலர் இங்குத் தங்கியதால் கபிலவனம் என்றும் மகிழ மரம் அதிகமாக இருந்ததால் மகிழ வனம் என்றும் பெயர் அமையப் பெற்றுள்ளது. இவற்றையும் மக்கள் பெயர் வழி அறிய முடிந்தது.

**சான்றாக:** கபிலர் வனம் என்பதை, முன்னொட்டு பின்னொட்டு இட்டு பெயர்கள் அமைந்துள்ளன. கபிலன், அகிலன், கபில்தேவ் என்றும், மகிழன், மகிழ்வேந்தன், மகி, மகிஷ், மகமிலேஸ்வரி என்று ஒரே பெயர்களில் பல்வேறு ஒன்றியங்களில் இட்டுள்ளதைக் கள ஆய்வின் வழி அறியமுடிகிறது.

## அரங்குளநாதர்

புதுக்கோட்டை-ஆலங்குடி சாலையில் புதுக்கோட்டையிலிருந்து 7கி.மீ தொலைவில் உள்ளது. மாவட்டத்தின் பழமை பொருந்திய கோயில்களில் ஒன்றான அரங்குளநாதர் (ஹரதீர்த்தேஸ்வரர்) கோவில் இங்குள்ளது. அரங்குளநாதர் சுயம்பானவர்.

### புராணவரலாறு

இப்பகுதிக் காட்டில் வழிதெரியாமல் தவித்த வேட்டுவச்சியைத் தவ முனிவர் ஒருவர் அவர் கணவனிடம் கொண்டு சேர்த்தார். அது முதல் அந்த வேடுவன் காட்டில் கிடைத்த பழங்கள் கிழங்குகளைத் தந்து வந்தான் வந்த ஒவ்வொரு நாளும் முனிவன், வேடுவன் செல்லும் வழியில் பனை மரத்தைத் தோற்றுவித்துப் பொன்னால் ஆன பனம்பழத்தைக் கிடைக்கச் செய்தான். வேடன் அங்குள்ள செட்டியாரிடம் கொடுத்து அதற்குப் பதில் அரிசி முதலான தானியப் பெரும் பொருட்களைப் பெற்றுவந்தான். நாளடைவில் செட்டியர் மிகுந்த செல்வந்தர் ஆனார். இதை அறிந்த வேடன் பொன்பழத்திற்கு அதிக ரூபாய் கேட்டான். கொடுக்க மறுத்தார் செட்டியார். உடனே மன்னனிடம் முறையிடச் சென்றான் வேடன். மன்னன் முனிவரையும் பொன்னாலான பனைமரத்தையும் கண்டுபிடிக்க உத்தரவிட்டான். ஆனால் முனிவர், பனைமரம் இருந்த இடத்தில் லிங்கங்கள் மட்டுமே இருந்தது கண்டுபிடிக்கப்பட்டது.

அவ்வழியாக பால் கொண்டு சென்ற ஒருவன் லிங்கம் இருந்த இடத்தில் அவனையறியாமல் தடுக்கிவிழுந்து அதனால் லிங்கம் பாலாபிடேகம் பெற்றுவந்தது. ஒரு நாள் பால்வியாபாரி தான் தடுக்கி விழுவதன் காரணம்

என்ன என்பதை அறிய அந்த இடத்தில் தோண்டிப்பார்த்த போது புதைந்திருந்த லிங்கத்தின் மீது காயம்பட்டு அதிலிருந்து இரத்தம் வருவதைக் கண்டு அதிர்ந்து போனார். வியாபாரி மன்னனுக்கு இச்செய்தியைத் தெரிவித்தான். மன்னன் அந்த இடத்தில் சிவபிரானுக்குக் கோவில் கட்டத் தீர்மானித்தான். ஆனால் வேடுவனிடம் இருந்து பொற்பனைப் பழங்களைப் பெற்ற செட்டியார் தனது செலவிலேயே மேற்படிக் கோயிலைக் கட்டிமுடித்தார். மேலும் கோவில் கட்ட செலவானது போக மேலும் 3000 பொற்பனைப் பழங்களைக் கோயில் வளாகத்தில் அறை ஒன்றில் பூட்டிவைத்தார். இன்னும் இவை இக்கோயில் வளாகத்திலோ அல்லது அருகிலுள்ளக் காடுகளிலோ புதைந்திருப்பதாக நாட்டு வழக்கில் சொல்லப்படுகிறது.

அரங்குளநாதர் திருவிளையாடளை நினைவுக்கூறும் வகையில் இங்குள்ள மக்கள் தங்கள் குழந்தைகளுக்குப் பெயர்களாக இட்டு மகிழ்கின்றனர்.

**சான்றாக:** சுயம்பு, அரங்குளவேந்தன், அரங்கன், அரங்கப்பன், சுயம்பன், சுயம்பிஸ்வரன், சுயம்பாயி, சுயம்பிஸ்வரி, அரங்குளவேணி, அரங்கி

என ஆண்களுக்கும் பெண்களுக்கும் முன்னொட்டு பின்னொட்டாகச் சேர்த்து பெயர்கள் சூட்டப்பட்டிருப்பதைக் கள ஆய்வின் வழி அறிய முடிகிறது. அரங்குளநாதர் பெயரையே ஊராகக் கொண்டு அமைந்துள்ளது.

**சான்றாக:** திருவரங்குளம் என்பது ஆகும்.

## குலோத்துங்க சோழீச்சுரம்

பெருங்களூர் புதுக்கோட்டை தஞ்சாவூர் சாலையில் 18கி.மீ தொலைவில் உள்ளது. "கல்வெட்டுகளில் இவ்வூர் பெருங்கோழியூர் என்று அழைக்கப்படுகிறது. (கோழியூர் என்பது உறையூரின் மற்றொரு பெயராகும்.) இங்குள்ள குலோத்துங்க சோழிச்சுரம் - சிவன் கோயில் மூன்றாம் குலோத்துங்க சோழன் காலத்தில் கட்டபட்டதாகும். ஒரு காலத்தில் மல்லிகைப் பூ அதிகம் விளைந்து வந்ததால் மல்லிகை வனம் என்றும் அழைக்கப்பட்டது. பிரபலத் தமிழ் எழுத்தாளர் அகிலன் பெருங்களூரில் பிறந்தவர். இவர் தனது பாவை விளக்குப் புதினத்தில் புதுக்கோட்டையைக் கண்ணபுரம் என்றும் பெருங்களூரைப் புதுப்பட்டி என்றும் குறிப்பிடுகிறார்."[18]

குலோத்துங்கச் சோழன் இக்கோயிலைக் கட்டியதால் இக்கோயிலில் உள்ள சிவனுக்குக் குலோத்துங்க சோழீச்சுரம் என்றும் இங்குள்ள மக்களுக்குச் சுரத்தைப் போக்கியவர் என்பதனால், ‘சோழீச்சுரம்’ என்றும் அழைக்கப்படுகிறது.

இங்குள்ள சிவனுக்கு மல்லிகை வனத்தை அழித்து கட்டப்பட்டதால் அந்த இடத்தை மையமாகக் கொண்டு பெயர்கள் சூட்டப்பட்டுள்ளனர்.

**சான்றாக:** மல்லிகா, மல்லி, ஜாஸ்மின், மல்லியப்பன், மல்லிவேந்தன் என்றும், அந்த கோயிலைக் கட்டியவன் சோழன் என்பதால், அவன் பெயரையும் மக்கள் தங்கள் குழந்தைகளுக்கு இட்டு வருகிறார்கள்.

**சான்றாக:** சோழன், சோழச்சி

போன்ற பெயர்களைக் காணமுடிகிறது.

## காளியாப்பட்டிசிவன்

கீரனூர்-கிள்ளுக்கோட்டை செல்லும் வழியில் உள்ளது. இங்குள்ள சிவனின் அருள் நிரம்பப் பெற்ற மக்கள் நம்பிக்கையில் அவர்கள் தங்கள் குழந்தைகளுக்குப் பெயர்களாக இட்டுள்ளதன் வழி அறியமுடியும்.

**சான்றாக:** காளி, காளியப்பன், காளியன், காளிமுத்து, காளிதேவி, காளியம்மாள் என காளியாபட்டி சிவனின் பெயர்கள் முன்னொட்டாக இணைத்துப் பல்வேறு பெயர்களைக் கள ஆய்வின் வழி அறியமுடிகிறது.

## குடுமியான்மலை-சிகாநாதசாமி

குடுமியான்மலை புதுக்கோட்டையிலிருந்து 16கி.மீ தொலைவில் உள்ளது. “இங்குள்ள கோயில் மூலவரின் பெயரான சிகாநாதசாமி என்பதைக் கொண்டு இவ்வூர் குடுமியான்மலை என்று அழைக்கப்படுகிறது. (சிகா-குடுமி-அதாவது குடுமியுள்ள இறைவன்) என்றும் அழைக்கப்படுகிறது.”[74]

## தல புராணக் கதை

முன்னொரு காலத்தில் இக்கோயில் “அர்ச்சகர் ஒருவர் (பூஜைக்கு) வழிபாட்டிற்கு வைத்திருந்தப் பூவை எடுத்து அங்குவந்த தனது ஆசை நாயகிக்குக் கொடுத்துவிட்டார். அந்த சந்தர்பத்தில் மன்னன் கோவிலுக்கு

வந்துவிட, மன்னரைக் கண்டதும் செய்வதறியாது தவித்த அர்ச்சகர் தனது ஆசைநாயகியின் தலையிலிருந்தப் பூவை எடுத்து வழிபாட்டிற்குப் பயன்படுத்தி, அதைப் பிரசாதமாக மன்னருக்கு; அளிக்க அதில் தலைமுடி ஒட்டியிருந்ததைக் கண்ட மன்னர், அதன் காரணத்தை அர்ச்சகரிடம் வினவினார். அர்ச்சகர் சமயோசிதமாக கோயில் குடிகொண்டிருக்கும் மூலவருக்குக் (லிங்கம்) குடுமியுள்ளது என்று சொல்லிவிட்டார். வியப்பு மேலிட்ட மன்னர் இறைவனின் குடுமியைக் காட்டும்படி கேட்க தனது பக்தனான அர்ச்சகரைக் காப்பாற்ற இறைவனும் லிங்கத்தில் குடுமியுடம் காட்சியளித்தார். ஆகவேதான் மூலவருக்குச் சிவாநாதசாமி என்று பெயர் வந்ததாக இக்கதையின் மூலம் அறிய முடியும்."[75] என ஜெ.ராஜாமுகமது தனது நூலில் கூறியுள்ளார்.

குடுமியார் என்னும் தமிழ்ச்சொல் காலப் போக்கில் சிகாநாதசாமி என சமஸ்கிருதச் சொல்லாக மருவிவிட்டது. தற்போது இவ்வூர் பெயர் குடுமியான்மலை என்றே நின்று நிலவ இறைவன் பெயர் மட்டும் 'சிகாநாதர்' என வழங்கப்படுகிறது.

**சான்றாக:** மயிலாடுதுறை, மாயூரம் எனவும், குரங்காடுதுறை, கபிஸ்தலம் எனவும், திருமறைக்காடு வேதாரண்யம் எனவும், சிற்றம்பலம், சிதம்பரம்

எனவும் சமஸ்கிருத வடிவம் பெற்று மருவி வழங்குதலைக் காண முடியும். இத்தகு சமஸ்கிருதப் பெயர்களே அவ்வூர்ரைச் சுற்றியுள்ளச் சிற்றூர் மக்கள் தங்கள் குழந்தைகளுக்குப் பெயரில் முன்னொடடு, பினனொட்டு இட்டு வருகிறார்கள்.

**சான்றாக:** சிகாமணி, சிகாந்தன், சிகாசாமி, சிகாவேணி, சிகாஸ், சிகாதேவி

என்று தற்காலப் பெயர்களும் முற்காலத்திற்கேற்ற குடுமியன், பம்பையன், சடையன், சடையப்பன் என தமிழ்ச் சொற்களைக் கொண்டும் பெயர்கள் இட்டுள்ளதை அறியமுடிகிறது.

## திருவேங்கைவாசல்-வியாகபுரீஸ்வரர்

திருவேங்கைவாசல் புதுக்கோட்டை-திருச்சி சாலையில், புதுக்கோட்டையிலிருந்து 5கி.மீ தூரத்தில் உள்ளது.

### புராணக் கதை

காமதேனுப் பசுவின் வழிப்பாட்டைச் சோதிக்க விரும்பிய சிவபெருமான் “புலியின் உருவத்தில் பசு வரும் வழியில் காத்திருந்தார். காமதேனு வழக்கம் போல் காதில் நீரை நிரப்பிக் கொண்டு அவ்வழியே வரும் போது புலி பசுவைக் கொல்ல முயன்றது. அப்போது பசு, புலியினிடத்தில் தான் சிவபெருமானுக்குச் செய்யும் வழிபாட்டை முடித்துவிட்டுத் தனக்காகக் காத்திருக்கும் கன்றுக்குப் பால் கொடுத்துவிட்டுத் திரும்பிவருவதாகவும், அதன்பின் தன்மைக் கொல்லும்படியும் சத்தியம் செய்துவிட்டுச் சென்று, தன் கடமைகளை நிறைவேற்றிவிட்டு முன்னே கூறியபடி புலியின் இருப்பிடத்திற்குத் திரும்பி வந்தது. பசுவின் கடமை உணர்வையும் தாயன்பையும் கண்டு வியந்த புலி வடிவத்தில் இருந்த சிவபெருமான் காளை வாகனத்தில் இருந்து காமதேனுப் பசுவுக்குக் காட்சிக் கொடுத்து முக்தியையும் தந்து மறைந்தருளினார். சிவபெருமான் புலி உருவத்துடன் தோன்றி பசுவுக்குக் காட்சி கொடுத்த இடமே திருவேங்கைவாசல் என வழங்கப்படுகிறது.”[76] என்பார் ஜெ.ராஜாமுகமது.

வேங்கை வடிவில் வந்து காட்சியளித்ததன் பெயரில் அவ்வூரைச் சுற்றியுள்ளச் சிற்றூர்களில் உள்ள மக்கள் தங்கள் குழந்தைகளுக்கு அப்பெயரை வைத்தால் சிவன் காப்பாற்றுவார் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் பெயர்களை இட்டுள்ளனர்.

**சான்றாக:** வேங்கைகுமார், வேங்கை வேந்தன், வேங்கை வேல், வேங்கையன், வேங்கைச் செல்வன் என ஆண் பால் பெயர்களாகவும், வேங்கையம்மாள், வேங்கைச்செல்வி, என பெண் பால் பெயர்களாகவும் இட்டு வருவதைக் காண முடிகிறது.

சிவன் காளை வடிவில் காட்சியளித்ததால் காளை என்ற பெயர்களையும் இட்டு வருகின்றனர்.

**சான்றாக:** காளையன், காளைவீரன், காளைராஜன், காளைராஜா, காளைசுப்பு, காளையப்பன், காளைராஜா என

இட்டுவருவதை இதன் வழிக் கண்டுகொள்ள முடிகிறது. வேங்கையாகக் காட்சியளித்ததால் இந்த ஊர்த் ‘திரு’ என்ற அடையுடன் திருவேங்கைவாசல் என்று பெயர்பெற்று விளங்குகிறது.

### வைத்தீஸ்வரர்-கதலிவனேஸ்வரர்

திருக்களம்பூர் “புதுக்கோட்டை-பொன்னமராவதி வழித்தடத்தில் புதுக்கோட்டையிலிருந்து 35கி.மீ தொலைவில் உள்ளது. கல்வெட்டுகளில் இவ்வூர் திருக்குறும்பூர் எனக் குறிப்பிடப்படுகிறது.”[77]

### புராணக் கதை

ஒரு காலத்தில் “பாண்டிய மன்னனொருவன் இவ்வூர் வழியாகக் குதிரையில் வரும்போது குதிரையின் குளம்பு பூமியில் பதிந்திருந்த ஒரு பொருளின் மீது பட்டுக் குதிரை தடுக்கி விழுந்துவிட்டது. குதிரையின் குளம்புபட்ட இடத்திலிருந்து இரத்தம் வரவே அவ்விடத்தில் பார்த்தபோது, அங்கு ஒரு லிங்கம் இருப்பது தெரியவந்தது. மக்கள் அந்த லிங்கம் தோன்றிய இடத்தில் கோவில் கட்டி வழிபடத் தொடங்கினர். ஆகவே இவ்வூர் திருக்குளம்பூர் எனப் பெயர் பெற்றது.”[78] எனக் கர்ணபரம்பரைக் கதை ஒன்று கூறுகிறது.

“திருக்களம்பூர் கோயிலில் குடிகொண்டிருக்கும் சிவபெருமான் வைத்தீஸ்வரர் என்றும் கதலிவனேஸ்வரர் என்றும் அழைக்கப்படுகிறார். இக்கோயிலில் சுற்றுப் பிரகாரத்தில் ஒரு வகை கதலிவாழை நிறைந்து உள்ளது. இதில் காய்க்கும் பழங்களை யாரும் உண்பதில்லை. இந்த வாழைக் கன்றுகளை வேறு இடங்களுக்குக் கொண்டு சென்று வைத்தாலும் வளருவதில்லை என்று சொல்லப்படுகிறது.”[79] இவை மூலம் கதிலிவனேஷ்வரர் சிறப்பும், பெருமையும் அறிய முடிகிறது.

### திருமயம்-சத்தியகிரீஸ்வரம்

திருமயம், புதுக்கோட்டையிலிருந்து 17கி.மீ தொலைவில் உள்ளது. திருமெய்யம் என்னும் சொல்லே திருமயம் என மருவி வழங்கப்படுகிறது. திருமெய்யம் என்றால் உண்மையின் இருப்பிடம் எனப் பொருள்படும். இங்குள்ள சிவபெருமானுக்குச் சத்தியகிரீஸ்வரர் என்று பெயர்.

## கோயில் அமைப்பு

சத்தியகிரீஸ்வரம் என்னும் சிவன் கோயில் குன்றின் தெற்குச் சரிவில் உள்ள குகைக்கோயில்களுள் ஒன்றாகும். குகைக்கோயிலின் அளவு ‘25×12’. கிழக்கு நோக்கியுள்ளது. மூலவர் லிங்கமாகக் காட்சியளிக்கிறார். குகைக்கோயிலின் வாயிலிலுள்ளத் துவாரபாலகர் சிற்பங்கள் அழகு மிக்கவை. மண்டபத்தின் சுவர்களிலும் மேல் விதானத்திலும் ஓவியங்கள் தீட்டபட்டிருந்ததற்கான அடையாளங்கள் காணப்படுகின்றன.

## சத்தியகிரீஸ்வரர் தொடர்பான மக்கள் பெயர்கள்

திருமயம் வட்டத்தில் பல்வேறு ஊராட்சிகள் உள்ளன. ஒவ்வொன்றும் பதினாறு முதல் இருபது சிற்றூர்களை உள்ளடக்கியது. திருமயம் அதனைச் சுற்றியுள்ளச் சிற்றூர் மக்களின் பெயர்கள். இங்குள்ள சிவனை அடியொற்றிய பெயர்களாக அமைந்துள்ளன. ‘சத்தியகிரீஸ்வர் பெருமான்’ பெயரை முன்னொட்டாகவும் பின்னொட்டாகவும் இட்டுள்ளனர். உண்மையின் இருப்பிடமாக விளங்கும் திருமெய்யம் மற்றும் அங்குள்ள இறைவன் தன் பிள்ளைகளை உண்மையாகக் காத்தருள்வார் என்ற நம்பிக்கையில் பெருபாலானோர் அப்பெயர்களை இட்டுவருவதை ஆய்வின் வழி அறிய முடிகிறது.

**சான்றாக:** சத்தி, சத்தியமூர்த்தி, சத்திவேல், சத்தியசீலன், சத்தியராஜ், சத்தியா, சத்தியஜோதி, சத்தியகலா என்றும், கிரிராஜா, கிரிஜா, கிரி, ஈஸ்வரன், பரமேஷ்வரன், பரமேஸ்வரி, ஈஸ்வரி என்றும், மூலவர் லிங்கம் தொடர்பான பெயர்களையும் இட்டுவருவதை அறிய முடிகிறது. இராமலிங்கம், முத்துராம லிங்கம், லிஙகராஜ், லிங்கசாமி, லிங்கன், லிங்கம்மாள், லிங்கேஸ்வரி, லிங்கசெல்வி, லிங்கஜோதி போன்ற பெயர்களை திருமயம் வட்டத்தில் உள்ள சிற்றூர் மக்கள் இட்டுவருவதைக் காணமுடிகிறது.

## பொன்னமராவதி-இராஜேந்திர சோழச்சுரம்

பொன்னமராவதி, புதுக்கோட்டையிலிருந்து சுமார் 35கி.மீ தொலைவில் உள்ளது. கார்தாத்த வெள்ளாளர்கள் ஆரம்ப காலத்தில் குடியேறிய இடங்களுள் இதுவும் ஒன்றாகும். “மதுரை நாயக்கர்களின் ஆட்சிக் காலத்தில் பொன்னன், அமரன் என இருவர் பொன்னமராவதியைத் தோற்றுவித்தார்கள் எனப்

பழைய ஓலைச்சுவடி ஒன்று தெரிவிக்கிறது. ஆனால் இதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே பொன்னமராவதி என்ற பெயர் கல்வெட்டுகளில் காணப்படுகிறது. வேள்பாரி ஆண்ட பரம்பு நாட்டின் ஒரு பகுதியாகப் பொன்னமராவதியும் பிரான்மலையும் திகழ்ந்தன."[80] என்பதைப் 'புதுக்கோட்டை மாவட்ட வரலாறு' வழி அறிய முடிகிறது.

## தலவரலாறு

இரண்டாம் குலோத்துங்கன் மற்றும் மூன்றாம் ராஜராஜன் காலத்திலிருந்து இப்பகுதியைச் சோழர்களின் மேண்மைக்குட்பட்டு நிஷத ராஜாக்கள் என்னும் சிற்றரசர்கள் ஆட்சி செய்து வந்துள்ளனர் எனக் கல்வெட்டுச் செய்திகள் தெரிவிக்கின்றன. இங்குள்ள பழைய சிவன்கோயில், ராஜேந்திர சோழகேரளன் நிஷத ராஜா என்பான் (கி.பி.1145க்கும் 1165க்கும் இடையில்) முதலாம் குலோத்துங்க சோழன் நினைவாகக் கட்டியதாக இக்கோயில் கல்வெட்டுகளிலிருந்து தெரியவருகிறது.

## கோயில் அமைப்பு

ராஜேந்திர சோழச்சுரம் வேலைப்பாடுகளுடன் அமைந்த ஒரு கோயிலாகும். கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம் அனைத்தும் ஒரே கல்லில் உள்ளன. கருவறையில் தெற்கு மாடத்தில் ஞான தட்சிணாமூர்த்தியும், வடக்கே பிரம்மாவும் காட்சியளிக்கின்றனர். கோயிலில் 17 கல்வெட்டுக்கள் உள்ளன. இரண்டாம் ராஜராஜசோழன் காலத்திலிருந்து நாளிட்ட ஐந்து கல்வெட்டுகளும், பாண்டியர்களது கல்வெட்டுகள் பத்தும், வாணாதரையரின் கல்வெட்டுகள் இரண்டும் காணப்படுவதாக ஜெ.இராஜாமுகமது தம் நூலில் குறிப்பிடுகிறார்.

## இராஜேந்திரச் சோழச்சுரம் தொடர்பான மக்கள் பெயர்கள்

இராஜேந்திர சோழச்சுரம் என்னும் சிவனின் நாமத்தைத் 'பொன்னமராவதி' வட்டார மக்கள் தங்கள் குழந்தைகளுக்குப் பெயராக இட்டு வருகின்றனர்.

**சான்றாக:** ராஜேந்திரன், ராஜேஸ், சோழை, ராஜேஸ்கண்ணன், ராஜேஸ்வரி என்ற பெயர்களை மக்கள் இட்டுவருவதைக் கள ஆய்வின் வழி அறியமுடிகிறது.

## ஆவுடையார் கோவில்

ஆவுடையார் கோவில் அறந்தாங்கியிலிருந்து 13கி.மீ தொலைவில் உள்ளது. இங்குக் கோயில் கொண்டிருக்கும் சிறுபெருமான் 'ஆவுடையார்' என்று அழைக்கப்படுகிறார். இதைக் கொண்டே இவ்வூரும் 'ஆவுடையார்கோவில்' என்று வழங்கப்படுகிறது.

### புராண கதை

தமிழ் இலக்கியங்கள் இவ்வூரைத் திருப்பெருந்துறை என்று குறிப்பிடுகின்றன. மதுரையைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்த இரண்டாம் வரகுண பாண்டிய மன்னனின் (862-880) அமைச்சராக இருந்த மாணிக்கவாசகர், மன்னனுக்குக் குதிரை வாங்குவதற்குக் கொண்டுவந்த பணத்தைக் கொண்டு இங்குச் சிவபிரானுக்குக் கோவில்கட்டி ஆவுடையார் என்று பெயரிட்டார் என கோயில் புராண நூல்கள் கூறுகின்றன. மன்னனின் கோபத்திற்கு ஆளான மாணிக்கவாசகரைக் காப்பாற்ற இறைவன் நரிகளைப் பரிகளாக மாற்றியதையும் இது தொடர்பானப் புராணக் கதைகளையும் திருவிளையாடற் புராணம் கூறுகிறது.

### தலச் சிறப்பு

இந்தக் கோவிலில் மற்ற கோயில்களில் இருப்பது போல் கொடிமரம் இல்லை! நந்தி இல்லை! மூலவருக்கு உருவமும் இல்லை! இங்கு வருகின்ற பக்தர்களுக்கு மற்ற கோவில்களில் உள்ளது போல் தீப ஆராதனையினைத் தொட்டு வணங்க அனுமதிப்பதும் இல்லை. மாணிக்கவாசகர் சோதியிலே கலந்துள்ளார் என்பதாலே தீபம் தருவதில்லை. கருவறைக்கு முன்னால் படையல் என்கிற பெயரிய திட்டுக்கல் இருக்கிறது. இந்தக் கல்லில்தான் ஆறுகாலப் பூசைக்கும் உரிய அமுதினை வடித்துக் கொட்டி வைக்கிறார்கள். அதாவது அமுதின் ஆவி மட்டுமே ஆண்டவனுக்குக் காணிக்கையாக்கப் படுகிறது. இக்கோயிலில் படையல் அமுது புழுங்கல் அரிசியில் தான் செய்யப்படுகிறது. அத்தோடு பாகற்காயும் கீரையும் சேர்த்துப் படைக்கப்படுவதும் இங்கு மட்டும் தான்.

## ஆவுடையார் தொடர்பான மக்கட் பெயர்கள்

'ஆ' என்றால் பசு, இரக்கம், துன்பம் ஆகிய பொருளைத் தரும். பசுக் கூட்டம் நிறைந்த ஊரினை உடையவர், மாணிக்கவாசகர் மன்னனுக்குப் பதில் கூற இயலாது தவித்த போது அவர்மீது இரக்கம் காட்டி நரிகளைப் பரியாக்கியதனால் 'இரக்கமுடையவர்', சுற்றுவட்டார மக்களின் துன்பத்தைக் காப்பதனால். மக்கள் தங்கள் குழந்தைகளுக்கு ஆவுடையாரின் பெயரை முன்னொட்டாகவும் பின்னொட்டாகவும் இணைத்துப் பெயரிடுவதை ஆய்வில் அறியமுடிகிறது.

**சான்றாக:** ஆவுடை, ஆவுடையப்பன், பசுபதி, கருணாகரன, ஆவுடையாள், ஆவுடையம்மாள், லெட்சுமி, தனலெட்சுமி என்ற பெயர்களை அதிக அளவில் இட்டுவருவதைக் காண முடியும்.

## தெய்வ உறவுகளில் மக்கட் பெயர்கள்

தமிழர் வழிபடும் தெய்வங்களில் சிவன் முதன்மைத் தெய்வமாக இருந்த போதிலும், அத்தெய்வத்தின் உறவு முறைத் தெய்வங்களையும் போற்றி வருகின்றனர். அவற்றை 'புதுக்கோட்டை மாவட்டச் சிற்றூர்களில்' வசிக்கும் மக்களின் பெயர்களில் அறிய முடிகிறது. சிவனை உயிர் மூச்சாகக் கொண்டு வாழ்ந்த 63 நாயன்மார்களின் பெயர்களும், இம்மாவட்ட மக்கட் பெயர்களில் சிறந்து விளங்குகின்றதைக் காணமுடிகிறது.




## சிவன் மனைவியரின் மக்கட் பெயர்கள்

சிவனின் அருளாற்றளையறிந்த இம்மாவட்ட மக்கள் பல சிற்றூர்களிலும் சிவ ஆலயங்களைக் கட்டியுள்ளனர். அக்கடவுளுக்கு முதன்மைக்

கொடுக்கப்படுதலைப் போன்று அக்கடவுளின் உறவுத் தெய்வங்களையும் அமைத்து வழிபட்டு வருகின்றனர்.

### உமையம்மை

'உமையவள் இறைவர் பாகத்தொடுக்கம்' என்னும் ஔவை வாக்கிற் கிணங்க "அவள் சிவபெருமானின் இடப்பாகத்தே பொருந்தியிருப்பவள்."[86] இதனால் இவளைப் 'பாகம்பிரியாள்' என்பர். இவளுடையச் சேர்க்கையினால் சிவபெருமான் உமையொரு பாகமுடையனாயினான்.

## நிகண்டுகள் விளக்கும் உமையம்மைப் பெயர்கள்

உமையவள் பெயர்களாகத் திவாகரம்,

**"அம்பிகை**
**அயிராணி**
**ஆரியை**
**இமையவல்லி**
**கவுரி**
**காமக்கோட்டி**
**சத்தி**
**பார்வதி"**[87]

என எட்டுப் பெயர்களைக் கூறுகிறது. "பிங்கலத்தில் 33 ஆக வளர்ந்துள்ளன. தமிழுரிச் சொற்பனுவல் 44 பெயர்களையும், நாமதீப நிகண்டு 99 பெயர்களையும், கயாதர நிகண்டில் 5 பெயர்களையும், பாரதீபத்து நிகண்டில் 9 பெயர்களையும், சூடாமணியில் 3 பெயர்களையும், ஆசிரிய நிகண்டில் 2 பெயர்களையும், பொதிகை நிகண்டில் 6 பெயர்களையும் காண முடிகிறது."[88] இவ்வாறு அமைந்துள்ள பெயர்களை இம் மாவட்ட மக்கள் தம் குழந்தைகளைக் காத்து வருவாள் என்ற அடிப்படையில் சூட்டியுள்ளதைக் காணமுடிகிறது. உமையவள் பெயர்களைத் தனியாகவும் முன்னொட்டு, பின்னொட்டுச் சேர்த்தும் இட்டு வருவதைப் பெரும்பான்மை காணமுடிகிறது.

**சான்றாக:** அம்பிகை என்பதை அம்பிகாதேவி, அயிராணி என்பதை இந்திராணி, இராணிலெட்சுமி, இராணிமங்கம்மாள், செல்வராணி, கவுரி என்பதைக் கௌரி, பார்ப்பதி என்பதைப் பார்வதி,

பார்த்தசாரதி, அஞ்சனி என்பதை அஞ்சலை, ஆனந்தி, கல்யாணி, காத்தாயி, காத்தப்பன், காத்தி, காளி, காளியம்மாள், காளியப்பன், காளிதாசன், காளியாத்தாள், துர்க்கை என்பதைத் துர்கா, நாராயிணி, நாராயணன், பயிரவி, மதுபதி என்பதனைப் பூபதி, பூமதி, மதுமதி, மதுபாலன், மதுசூதனன், மாலினி என்பதனை மாலிக், சந்திரமாலிக்கா, லளிதை என்பதனை லலிதா, செல்வி என்பதனை முத்துச் செல்வி, சித்ரா செல்வி, கலைச்செல்வி, அன்புச் செல்வி, வெற்றிச் செல்வி எனவும், அபிராமி, சுந்தரி, பவானி, நாயகி என்பதனை பெரியநாயகி, புவனை என்பதைப் புவனேஷ்வரி, புவனசுந்தரி, புவனா என்றும், சங்கரி, சங்கரன், சங்கர், சக்தி, சத்தியகீதா, சத்தியமூர்த்தி 'சக்தி' குறித்துச் சங்க நூல் ஒன்று விளக்குகிறது.

**"கூறாமற் குறித்ததன்மேற் செல்லுங் கடுங்கூளி"[89] (கலி.கடவுள்3)**

என்பதன் வழி காண முடிகிறது. அது போல 'உமை' குறித்த செய்திகளும் சங்க நூல்களில் காணமுடிகிறது. அவை,

**"கொடிபுரை நுசுப்பினாள் கொண்டசீர் தருவாளோ"[90] (கலி.கடவுள்7)**

எனவும்,

**"வண்டரற்றுங் கூந்தலாள் வளர்தூக்குத் தருவாளோ"[91]**

என்றும்,

**"முலையணிந்த முறுவலாள்<br>முதற்பாணி தருவாளோ"[92] (கலி.கடவுள்13)**

எனவும்,

**"மாணிழை அரிவை காப்ப"[93] (கலி.கடவுள்16)**

எனவும்,

**"இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்<br>உமையமர்ந்து உயர்மலை இருந்தனன் ஆக"[94] (கலி.38:1-2)**

எனவும்,

**"மணிமிடற்று அண்ணற்கு மாசிலோள் தந்த"[95] (பரிபா.8:127)**

என, உமை தொடர்பானச் செய்திகளைச் சங்க நூல்கள் வழி அறிய முடிகிறது. உமையம்மைக்குரியப் பெயர்களில் ஒன்று 'செல்வி' என்றும் குறிப்பிடுவர், என்பதைச் சங்க நூல் வழி அறியமுடிகிறது. இதனை,

**"துணர்வையகம் செல்விக்கு அணங்கு தொடித் தாங்கு"[96]**

என்றதன் மூலம் காணலாம். உமாதேவி என்ற பெயர் குறித்து மிகையாகக் காணமுடிகிறது. உமாதேவி என்று தனிப்பெயராகவும் முன், பின் ஒட்டுக்கள் சேர்த்தும் இம்மாவட்ட மக்கள் பெயர்களில் அறியமுடிகிறது.

**சான்றாக:** உமாதேவி, உமாராணி, உமா, உமாமகேஷ்வரி, உமாபதி, உமாதேவி போன்றப் பெயர்கள் இம்மாவட்டத்தில் அனைத்துச் சிற்றூர்களிலும் காணமுடிகிறது.

## கங்கா பற்றிய விளக்கம்

சிவபெருமானின் சடாமகுடத்தில் கங்கை அடங்கி இருப்பதாக உரைப்பது மரபு. கங்கையைக் கங்காதேவி என்பர். "உமையகரநதி என்பதனால் கங்கை பார்வதிதேவியின் கையிலிருந்து பெருகி வருவதாகவும் உரைப்பதுண்டு என்பது தெரிய வரும். பகீரதனுடையப் பெருமுயற்சியில் மண்ணுலகிற்குக் கங்கை வந்த காரணத்தால் 'பகீரதி', 'பாகீரதி' என்னும் பெயர்களைப் பெறுவதாயிற்று. சான்று முனிவருடைய செவிவழியாகப் பிறந்து வந்தமையால் 'சானவி' என்று இதற்கு ஒரு பெயர் சனுவி என்றும் பொதிகை நிகண்டு கூறும்."[97] இதனை விளக்கும் முகமாக கம்பராமாயணத்தில்,

**"சன்னுவின் சைவிவழி வரலானிகரில்**
**சானவி யெனப்பெயர் படைத்தது"[98] (கம்ப.பால.அகலி62)**

என்ற அடிகள் இடம்பெற்றுள்ளன.

## நிகண்டுகள் தரும் பெயர்கள்

தமிழுரிச்சொற் பனுவல் தவிர பல நிகண்டுகளும் 'கங்கா' குறித்த பெயர்களைத் தருகின்றன. திவாகரத்தில் ஆறு பெயர்களும், சூடாமணியில்

ஆறு பெயர்களும் பிங்கல நிகண்டில் ஆறு பெயர்களும் இடம்பெற்றுள்ளன. ‘சகத்திரமுகி’ என்னும் ஒரு பெயரைப் பொதிகை நிகண்டு தருகிறது. கயாதர நிகண்டு ‘சிந்துநதி’ என்று ஒரு பெயரையும், பாரதி தீபம் நிகண்டு ‘கங்கை’ என்ற ஒரு பெயரை மட்டும் குறிப்பிட்டுள்ளது. இவ்வாறு பல்வேறு நிகண்டுகளில் ‘கங்கா’ தொடர்பானப் பெயர்கள் விளக்கங்கள் உள்ளன.

## கங்கா தொடர்பான மக்கட் பெயர்கள்

சிவபெருமானை மையப்படுத்தி அவர் மனைவிகள் இருவரையும் இம்மாவட்ட ஒன்றியங்கள் அனைத்துத் திருதலங்களிலும் காண முடிகிறது. ‘கங்கா’ தொடர்பானக் கமண்டலத்தையும் இங்குக் காண முடிகிறது. அவ்வாறு தோற்றமளிக்கும் தெய்வங்களின் பெயர்களைக் குழந்தைகளுக்குச் சூட்டும் பொழுது அத்தெய்வம் காத்து வரும் என்ற நம்புகின்றனர். அவை, கங்கா, கங்காதேவி, கங்காதரன், சிந்து, சிந்துஜா, சிந்துகவி, தீபவதி, திலகவதி, திலகா, நளினி போன்றப் பெயர்களின் வழி ‘கங்கா’ தெய்வம் எவ்வாறு மக்கள் மனதில் இடம்பெற்றுத் திகழ்கிறது என்பதனைக் கண்டு கொள்ள முடிகிறது.

## சிவபெருமானின் புதல்வர்கள்

சிவபெருமானின் புதல்வர்கள் ஐவர் என்பதை நிகண்டுச் சொற்பொருட் கோவை வழி அறிய முடிகிறது. அவர்களுள் முதன்மையாக ‘கணபதி’ விளங்குகின்றார். தொல்காப்பியம், திருக்குறள், எட்டுத்தொகை ஆகிய நூல்களுள் ‘ஆனைமுகன்’ பற்றியச் செய்தி அகச்சான்றாகக் கிடைக்கவில்லை. திருமுருகாற்றுப்படையின் இறுதியில் உள்ள பத்து வெண்பாக்களில் ஏழாவது வெண்பாவில் மட்டும் ‘ஒருகை முகன் தம்பியே’ என்று (ஒருகை-ஒப்பற்ற துதிக்கை, தம்பி-தம்பியாகிய முருகன்) முருகன் குறிப்பிடப்படுகிறான். அவற்றை,

**“... ஒருகை முகன்**
**தம்பியே ...”[99]** **(திருமுரு.வெண்பா 7)**

என்பதால் அறியமுடியும்.

## ஆனை முகன் வரலாறு

சிவமூர்த்தியும் பிராட்டியும் நந்தவனத்துச் சித்திர மண்டபத்தில் எழுதியிருந்த ஆண் யானை, பெண் யானையைப் பார்க்க அவற்றினின்றும்

கசமுகர் தோன்றினார் என்பது புராணம் (அபிதான சிந்தாமணியில், ப.315). இதனையே தேவாரமும்

**"பிடியத னுருவுமை கொளமிகு கரியது**
**வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்**
**கடிகண பதிவர வருளினன் மிகுகொடை**
**வடிவினர் பயில்வளி வலமுறை இறையே"[100] (தேவாரம் 1:123:5)**

என்று சிவனும் உமையும் களிறு பிடி என்னும் வடிவத்தைக் கொண்டபோது பிறந்தவர் ஆனைமுகப் பெருமான் என்று விளக்குகிறது.

## ஆனைமுகன் பெயர்கள்

நிகண்டுகளில் முதன்மையான திவாகரம் 'ஆறு' பெயர்களைத் தருகின்றது. அவை, ஆகுவாகனன், ஐங்கரன், ஒற்றைக்கொம்பன், பாசாங்குசதரன், யானை முகவன், விநாயகன் என்பதாகும். பிங்கலம் 'நான்கு' பெயர்களைத் தருகிறது. அவை அத்திமுகத்தோன், அரிதிருமருகன், கங்கைசுதன், நந்திக்கடவுள் என்பதாகும். சூடாமணியில் ஒரு பெயரை மட்டும் காண முடிகிறது. அவை, 'தனயன்' ஆகும். நாமதீபம் கவுரிசேய் என்று கூறியுள்ளதை நிகண்டுகளின் வழி அறிந்துகொள்ள முடிகிறது.

## ஆனைமுகனின் பெயர் ஆளுமை

ஆனைமுகன் வழிபாடு கி.பி.எட்டாம் நூற்றாண்டில் தோன்றியதாகத் தொன்மக் களச்சியத்தின் வழி அறிய முடிகிறது. மரபுப்பெயர்களாக ஆட்டுக்குட்டி, பசுங்கன்று, கீரிப்பிள்ளை என்று இளமைப் பெயர்களைத் தொல்காப்பியம் வழி அறிய முடியும். இருந்த போதிலும் மனிதக் குழந்தைக்குக் குழவி என்றுதான் தெரிவிக்கிறது. ஆனைமுகனுக்குப் பிள்ளையார் என்று 'ஆர்' விகுதி சேர்த்து வழங்கியிருப்பதில் இருந்து மனிதக் குழந்தைகளுக்கும் பிள்ளைகள் என்று வழங்கி இருக்க முடியும்.

இதனையே தெய்வப் பெயர் விளக்கம் என்னும் நூலில் மு.சண்முகம் கூறியிருக்கிறார். அவை "பிள்ளையார் என்பது விநாயகருக்கு இந்நாளில் பெருவழக்காயுள்ள பெயர். இப்பெயர் பழைய நிகண்டுகள் எதிலும் காணப்படவில்லை. அண்மைக் காலத்தாகிய தமிழுரிச் சொற்பனுவல் தான் 'பிள்ளை' என்று இவருக்கு ஒரு பெயருண்டு என்பதனைத் தெரிவிக்கிறது.

உமாபதி அருளிய திருக்குமாரர்களுள் இவர் மூத்தவர் ஆதலின் இவரை மூத்த பிள்ளையார் என்பர்."[101] என்று நிகண்டுச் சொற்பொருட் கோவை என்ற நூலில் கூறியுள்ளது.

பதினோரந் திருமுறையில் அதிராவடிகள் 'மூத்த பிள்ளையார் திருமும்மணிக்கோவை' என்றொரு பிரபந்தம் பாடியுள்ளார். இங்கே மூத்த பிள்ளையார் என்று கணபதியைக் குறிப்பிட்டுச் சுட்டப்பட்டுள்ளதைக் காண முடிகிறது. இதன் வளர்ச்சிகளாக இன்றும் சிற்றூர்கள் மற்றும் நகரங்களில் உனக்கு எத்தனைப் பிள்ளைகள் என்ற பேச்சு வழக்குச் சொற்களைக் காண முடிகிறது.

சிவனைப் போன்று விநாயகப் பெருமானுக்கும் முக்கண் உண்டு. அதனால் மும்மூர்த்தி என்ற பெயரும் வழங்கப்பட்டுள்ளது. 'புதுக்கோட்டை மாவட்டச்' சிற்றூர்களில் உள்ள சிவத் தலங்களில் 'கணேசர்' என்ற உருவச் சிலை பரவலாகக் காண முடிகிறது. சிவனுக்கு நிகராக உள்ள 'ஆனைமுகனின்' நாமத்தை மக்கள் தம் குழந்தைகளுக்குச் சூட்டினால் நீண்ட ஆயுள் கிட்டும் என்ற நம்பிக்கையின் வாயிலாக இட்டு வருகின்றனர். ஆனை முகனுக்கே உரிய பெயர்களை அல்லது முன்னொட்டுப் பின்னொட்டுச் சேர்த்து இட்டு வருகின்றனர். அவை, கணேசன், மூர்த்தி, கணபதி, கஜேந்திரன், சஷ்டி விநாயகமூர்த்தி, கஜலெட்சுமி, கஜவல்லி போன்ற ஆனை முகன் தொடர்பானப் பெயர்களை அதிக அளவில் இட்டுவருவதை இம்மாவட்ட மக்கள் பெயர் ஆய்வின் வழி அறிய முடிகிறது.

## வயிரவ பெருமான் குறித்த மக்கட் பெயர்கள்

சிவபெருமான் மைந்தர்கள் ஐவரில் இரண்டாவதாகக் குறிப்பிடுவது 'வயிரவன்' ஆகும்.

**"வயிரவன் காரி வடுகக் கடவுள்"[102] (திவாகரம்)**

இதனைத் திவாகரம் "காரி என்பது கரு நிறமுடையவன் என்பது பற்றி வந்த பெயர். வடுகன் என்பதற்குப் பிரமசாரி என்றும் ஒரு பொருளுண்டு. காளிதேவிக்கு 'வடுகன்றாய்' என்றொரு பெயரைத் திவாகரம் கூறுகிறது. பராசக்தியின் உக்கிர வடிவமானக் காளியிடமிருந்து பிறந்த இந்த மூர்த்தியும் அச்சந்தரும் வடிவமும் செயலும் கொண்டிருத்தல் இயல்பே. 'உறுதிப்

பேற்றினன்' 'கடியோன்' என இருபெயர்களைத் தமிழுரிச் சொற்பனுவல் தருகிறது."[103] என்பதன் வழி அறியமுடிகிறது.

கரிய நிறமுடைய வயிரவன் என்பதனால் கருப்பன். காப்பான் என்ற அடிப்படையில் பெயர்கள் அமைந்துள்ளன. அவை, கருப்பன், கருப்பையா, கருத்தை, கருப்புச்சாமி, கருப்பாயி, கருப்பு, கருத்தம்மா போன்றவை. வைரவன் என்ற பெயரையும் மக்கள் இட்டுள்ளதை அறிய முடிகிறது. வையிரன், வையிரவமூர்த்தி, வையிராத்தாள், வையிரம், வயிரநாதன், வயிரவள்ளி ஆகிய பெயர்களைக் காண முடிகிறது.

இளையராஜா, இளையமதி, இளையராணி, இளையநிலா, இளவேணி, என முன்னொட்டுப் பின்னொட்டு சேர்த்து அமைத்துள்ளதை இம்மாவட்ட மக்கட் பெயர்களின் வழிக் காணமுடிகிறது. இதனை, "இளமைத் தோற்றமுடையனாதலில் இளையான், குமரன் என்னும் பெயர்களைப் பிந்திய நிகண்டுகள் தருகின்றன."[104] என மு.சண்முகம் கூறுகிறார்.

## ஐயனார் குறித்து மக்கட் பெயர்கள்

சிவன், திருமால் இருவருடையக் கூறுகளினின்றும் உதித்தவர் ஐயனார் என்றும் கூறுவர். ஊர் எல்லைகளிலும் கோரத் தோற்றத்திலும் காணப்படும். இதனை ஊர்க்காவல் தெய்வம் என்றும் அழைப்பர். அரிகர குமரன், அரிகரபுத்திரன், அரியரன் சேய் என்று நிகண்டுகள் சுட்டுகின்றன.

ஐயனாருக்குச் சாத்தன், சாதவாகன் போன்ற பெயர்கள் உள்ளன. சாத்தன் என்பது பழமையான ஒரு பெயர். சிலப்பதிகாரத்தில் பாசண்ட சாத்தன் கோயில் பற்றியும் சிற்சில செய்திகள் வந்துள்ளமையைக் காண முடியும். அவை,

**"பார்த்தனுக் கருளும் வைத்தார்**
**பாம்பரை யாட வைத்தார்**
**சாத்தனை மகனா வைத்தார்**
**சாமுண்டி சாம வேதம்**
**கூத்தொடும் பாட வைத்தார்**
**கோளரா மதியம் நல்ல**
**தீர்த்தமும் சடைமேல் வைத்தார்**
**திருப்பயற் றூரனாரே"[105]** **(தேவாரம், 4:32:4)**

எனத் திருநாவுக்கரசர் சிவபெருமான் 'சாத்தனை மகனா வைத்தார்' என்று பாராட்டியுள்ளமையைக் காண முடிகிறது. இது பற்றியே 'சிவன் மகன்' என ஒரு பெயரைப் பாரதிதீபம் சுட்டுகிறது என உணர முடிகிறது. 'சாத்தனை யோகி' என்று பிங்கலம் முதலிய நிகண்டுகள் குறிப்பிடுகின்றன. 'யோக சாத்தயன்' என்றே அடிமதிக்குடி ஐயனார் பிள்ளைத்தமிழ் பல இடங்களில் போற்றி உரைக்கின்றது.

**"சீதள சினபதி பாத சரோருக**
**சேவித மாவீரா"[106]** **(அடிமதி, பிள்ளை:7)**

சாத்தன் தொடர்பான மக்கட் பெயர்கள் சிற்றூர்களிலும் காணப்படுகின்றன. அவை, சாத்தப்பன், சாத்தையா, சாத்தாயி, சாத்தமுத்து, யோகேஸ்வரி, யோகேஸ்வரன், யோகநாதன், யோயேஸ், யோகராஜ், யோகராஜா, யோகஸ்ரீ, யோகநிதி போன்றப் பெயர்வழி அறிய முடிகிறது.

**"எணணு மடியார் வினையகற்றும்**
**இறைவன் வருக, வருகவே**
**இமையோர் துதிக்க வீற்றிருக்கும்**
**ஏகன் வருக, வருகவே**
**அண்ணல் வருக தென்னடிசை**
**அய்யன் வருக, வருகவே**
**அழகு வளரும் யோகசாத்**
**தையன் வருக, வருகவே"[107]** **(அடிமதிக், பிள்ளை:30)**

இதனை அடிமதிக்குடிப்பிள்ளைத் தமிழ் வழி அறிய முடியும். ஐயனார் இன்று ஐயப்பனாகவும் விளங்குகிறது. 'சாத்தன்' என்ற பெயர் 'ஐயப்ப'னுக்கும் வழங்கி வருகின்றது.

## வீரபத்திரன் குறித்த மக்கட் பெயர்கள்

முருகனைப் போல சிவபெருமானின் அழற்கண்ணிலிருந்து பிறந்த தெய்வம். விநாயகனையும் முருகனையும் போன்றே வீரபத்திரனும் உமாபதியின் புதல்வனே என்பதனையும் நிகண்டுகள் குறிப்பிட்டுக் காட்டியுள்ளன. "இதற்கு 'கணபதிக் கிளையோன்' என பிங்கலமும், 'யானைமுகனுக் கிளையோன்' என நாமதீபமும், 'செவ்வேள் துணைவன்' என தமிழுரிச்சொல் பனுவல் என்னும்

பெயர்கள் சான்றாம்."[108] என்று நிகண்டுச் சொற்பொருட் கோவை என்ற நூலின் வழி அறியமுடிகிறது.

வீரபத்திரன் தொடர்பான மக்கள் பெயர்கள் அதிக அளவில் காணப்படுகின்றன. பெயரிலேயே வீரம் இருப்பதாலும் வீரமான சாமி தம் குழந்தையைக் காக்கும் என்ற நம்பிக்கையாலும் இப்பெயர்கள் சூட்டுகின்றனர்.

**சான்றாக:** வீரய்யா, வீரபத்திரன், வீரப்பன், வீராயி, வீரன், வீரி, வீரசுப்பையா, வீரம்மான், வீரமுத்து, வீரலெட்சுமி, வீரண்ணன் போன்ற பெயர்களைக் காணமுடிகிறது.

## முருகன் தொடர்பான மக்கட் பெயர்கள்

முருகன் என்றாலே அழகன் என்பது பொருள். இறைமகனாரில் இவன் இளையவன், 'இளையாய் அழகியாய் ஏறூர்ந்தான் என்றே' என்பது நக்கீரர் வாக்கு. இளையோன், அழகன் என்னும் இரு பொருளிலும் முருகனுக்குக் 'குழகன்' என்னும் பெயரும் உள்ளது. குன்றுதோறும் வீற்றிருந்தருளும் முருகக் கடவுளைத் தொல்காப்பியர்.

**"சேயோன் மேய மைவரை உலகமும்"[109] (தொல்.951)**

குறிஞ்சி நிலக்கடவுளாக முருகனைச் சுட்டியுள்ளார். சங்க நூல்கள் பலவற்றிலும் கூறியுள்ளதைக் காண முடிகிறது.

**"மன்ற வேங்கை மலர்சில கொண்டு**
**மலையுறை கடவுள் குலமுதல் வழுத்தித்**
**தேம்பலிச் செய்த ஈர்நறுங் கையாள்"[110] (ஐங்குறு, 259:1.3)**

**"கொடிச்சியர் கூப்பி வரைதொழு கைபோல"[111] (கலி.40:11)**

**"குன்றமர்ந்து உறைதலும் உரியன்"[112] (திருமுரு.77)**

**"ஆவினன்குடி அசைதலும் உரியன்"[113] (திருமுரு.176)**

**"குன்றுதொ றாடலும் நின்றதன் பண்பே"[114] (திருமுரு.217)**

**"பழமுதிர் சோலை மலைகிழ வோனே"[115] (திருமுரு.317)**

ஆகிய நூல்களின் வழி குறிஞ்சி நிலக்கடவுள் முருகன் பற்றிச் சிறப்பிக்கப் பெற்றுள்ளதை அறிய முடிகிறது.

மலை தொடர்பான மக்கட் பெயர்களை இம்மாவட்ட மக்கள் இடுவதன் காரணம் மலைக்கடவுளாகிய முருகன் காத்து நிற்பான் என்ற நம்பிக்கையாகும். மலையப்பன், மலைச்சாமி, மலையாண்டி, மலைக்கண்ணன், மலையரசன், மலையம்மாள், மலையரசி போன்ற பெயர்களை இம்மாவட்ட மக்கள் பெயர்களில் கண்டு கொள்ள முடிகிறது. அவன் கிரவுஞ்ச மலையை வேலால் எறிந்து பிளந்த வரலாறும் சங்க நூல்கள் வழி காண முடியம்.

**"குன்றி யேய்க்கும் உடுக்கை குன்றின்**
**நெஞ்சு பக எறிந்த அஞ்சுடர் நெடுவேற்"[116] (குறுந்.கடவுள் வாழ்.)**

என்றும்,

**"சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேல்"[117] (அகம்.59:10)**

என்றும்,

**"வென் வேலான் குன்றின் மேல்"[118] (கலி.27:16)**

என்றும்,

**"சூர்மருங் கறுத்த சுடர்ப்படை யோயே"[119] (பரிபா.14:18)**

என்பனச் சான்றுகளாகும். வேல் தொடர்பானப் பெயர்கள் இம்மாவட்டத்தில் சிறந்து விளங்குகின்றன. முருகவேல், வேல்முருகன், வேலாயுதம், வேலப்பன், வேலச்சாமி, குமரவேல், பழனிவேல், செந்தில்வேல், வேல்மயில், வேலம்மாள், வேலாயி, வேலரசி போன்ற பெயர்கள் பின்னொட்டாகவும், முன்னொட்டாகவும் அமைந்துள்ளதைக் காண முடிகிறது.

சிவபெருமானின் அழற்கண்ணிலிருந்து பிறந்தவன் முருகன். இது பற்றித் தமிழுரிச் சொற்பனுவல் 'இறைநுதல் விழியிடைத் தோன்றிய விறலோன்' என்று குறிப்பிடுகிறது. அழற்கண்ணில் பிறந்து, கங்கையில் சரவணத்தில் தவந்ததால் மக்கள் தம் குழந்தைகளுக்குச் சரவணகுமார், சரவணன், சரவணபாண்டி, சரவணச்செல்வி, சரவணமுத்து போன்ற பெயர்களை இம்மாவட்ட மக்கள் தங்கள் குழந்தைகளுக்கு இட்டுவருகின்றனர்.

அறுமீன் எனப்படும் கார்த்திகைப் பெண்களால் பேணப்பெற்றவன், என்பதனால் அது தொடர்பான பெயர்களை மக்கள் இட்டுள்ளனர். அவை, கார்த்திக், கார்த்திகேயன், கார்த்திக்ராஜா, கார்த்திகா, சிவகார்த்தி, கார்த்திகாயினி போன்ற கார்த்திகைப் பெண்கள் தொடர்பானப் பெயர்களை இட்டுவருவதன் நோக்கம், முருகனைக் காத்து வளர்த்தது போன்று தம் குழந்தையையும் காக்கும் என்ற நம்பிக்கையின் பெயரால் இப்பெயர்களை இட்டுவருகின்றனர்.

மயில், ஆடு, இவனுக்குரிய வாகனமாதலின் ஆடுர்ந்தோன் என்றும் சொல்லப்படுகின்றான். பிணிமுக: என்னும் யானையை வாகனமாகக் கொண்டிருக்கும் செய்தி திருமுருகாற்றுப்படையில் சொல்லப்படுகிறது.

**"வைந்நுதி பொருத வடுஆழ் வரிநுதல்**
**வாடா மாலை ஓடையொடு துயல்வரம்**
**படுமணி இரட்டும் மருங்கின் கடுநடைக்**
**கூற்றத் தன்ன மாற்றரும் மொய்ம்பின்**
**கால் கிளாந் தன்ன வேழம் மேல்கொண்டு**
**ஐவேறு உருவில் செய்வினை முற்றிய**
**. . . .**
**மனன்நேர் பெழுதரு வாள்நிற முகனே"[120] (திருமுரு.78-90)**

என்பதனைக் காணமுடிகிறது. மயில் தொடர்பானப் பெயர்களையும் இட்டு மகிழ்கின்றனர். மயில்வாகனன், மயில்ராணி போன்றப் பெயர்களின் வழி அறியமுடிகிறது. முருகனின் தெய்வீக நலன்களை வெளிப்படுத்துவனவாக உள்ள பெயர்களையும் மக்கள் தங்கள் குழந்தைக்கு இட்டுவருவதையும் காண முடிகிறது. இளையன், ஐயன், கந்தன், காங்கேயன், குகன், குமரன், குரவன், ஆசான், சாமி, சுப்பிரமணியன், செட்டி, சேய், சேந்தன், முருகன், வேலன், வேள் என்னும் பெயர்கள் குறிப்பிடத்தக்கவையாகும்.

## முருகனின் இல்லாள்கள் தொடர்பான மக்கட் பெயர்கள்

சிவன் உறவுகளில் வள்ளி, தேவசேனை என்பன மருமகள் உறவு ஆகும். முருகன் தேவர்களின் துயர்தீர்த்தக் காரணத்தால் இந்திரன் தன் மகள் தேவசேனையை மணம்முடித்து வைக்கிறார்.

**"சாறுகொள் துறக்கத் தவள்"[121]** **(பரிபா.19:6)**

என்றும்,

**"மறுவில் கற்பின் வாணுதல் கணவன்"[122]** **(முருகு.6)**

என்றும்,

**"தாவில் கொள்கை மடந்தையொடு சின்னாள்**
**ஆவி னன்குடி அசைதலும் உரியன்"[123]** **(முருகு.175-176)**

என்பதைச் சங்க நூல்கள் வழி அறிய முடிகிறது. முருகனின் துணைவியராக விளங்கக் கூடிய தேவசேனைப் பெயர்களைத் தம் குழந்தைகளுக்கு இட்டுவருகின்றனர். தெய்வானை, தெய்வநாயகி, பெரியநாயகி, பெரியாத்தாள் போன்ற பெயர்களை இம்மாவட்ட மக்கள் பெயர்களில் அறிய முடிகிறது.

திருமாலின் மகளான வள்ளி, குறக்குடியில் பிறந்து பூவுலகில் பரங்குன்றத்தில் முருகனைக் களவு மணம் புரிந்து கொள்கிறார். 'முருகு புணர்ந்து இயற்ற வள்ளி போல' என ஒப்புமைக் கூறப்படுகிறது.

**"என்னுள் வருதியோ நல்நடைக் கொடிச்சி**
**முருகுபுணர்ந்து இயன்ற வள்ளி போலநின்"[124]** **(நற்.82:3-4)**

என்றும்,

**"குறவன் மகளானை கூறலோ கூறேல்"[125]** **(பரிபா.8:69)**

எனவும்,

**"மையிரு நூற்றிமையுண் கண்மானமறி**
**தோள் மணந்த ஞான்று"[126]** **(பரிபா.9:8)**

என்றும்,

**"குறிஞ்சிக் குன்றவர் மறங்கெழு வள்ளிதமர்"[127]** **(பரிபா.9:67)**

எனவும்,

**"நறுமலர் வள்ளிப் பூநயந் தோயே"[128]** **(பரிபா.14:22)**

என்றும்,

**"குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின**
**மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே"[129]** **(முருகு.101-102)**

எனச் சங்க நூல்களின் வழி வள்ளிப் பற்றிய செய்திகள் அதிக அளவில் இடம் பெற்றுள்ளதை அறிய முடிகிறது. 'வள்ளி' தொடர்பான பெயர்கள் இம்மாவட்ட மக்கள் பெயர்களில் முன்னொட்டுப் பின்னொட்டுச் சேர்த்தும், தனியாகவும் குழந்தைகளுக்கு வழங்கிவருவதை அறிய முடிகின்றது.

**சான்றாக:** வள்ளியம்மை, மாணிக்கவள்ளி, சொர்ணவள்ளி, வள்ளிமுத்து, வள்ளியப்பன், வள்ளிக்கண்ணன், வள்ளிமீனாள்

போன்ற பெயர்களை 40 வயது முதல் 100 வயதிற்கு மேற்பட்டவர்களின் பெயர்கள் வழி அறிய முடிகிறது. இம்மாவட்ட சிவபெருமான் திருத்தலங்களில் சிவன் உறவுத் தெய்வங்கள் அமைந்துள்ளதன் வாயிலாக மக்கள் பெயர்கள் அந்தந்தச் சிற்றூர்களில் அவ்வாறே அமைந்து காணப்படுகிறது.

**சான்றாக:** 'திருக்கோகர்ணம்' சிவதலங்களில் சுப்பிரமணியன் விநாயகர், வள்ளி, தெய்வானை போன்ற தெய்வங்களும், 'திருக்கட்டளை' என்ற ஊரில் உள்ள சிவதலத்தில் சுப்பிரமணியர், கணேசர், சூரியன், ஜேஷ்டாதேவி போன்ற தெய்வங்களும். அதே போன்று திருவரங்குளம், பெருங்களூர், காளியாப்பட்டி, கொடும்பாளூர், குடுமியான்மலை, குண்ணாண்டார் கோவில், மலையடிப்பட்டி, நார்த்தாமலை, பனங்குடி, திருவேங்கைவாசல், கண்ணனூர், திருக்களம்பூர், திருமயம், ஆவுடையார் கோவில்

ஆகிய சிவன் திருத்தலங்களில் உள்ள உறவுத் தெய்வங்கள் தொடர்பாக மக்கள் தங்கள் குழந்தைகளுக்கும் இன்றும் பெயர்கள் இட்டுவருவதைக் கள ஆய்வின் வழி அறிய முடிகிறது.

## மக்கட் பெயர்களில் வைணவப் பெயர்கள்

சமயங்கள் பக்தி வெள்ளம் பாய்ந்தோடுவதற்கு வழி வகுத்துத் தந்தவை ஆகும். இவைகளுள் சைவம், வைணவம் ஆகிய இரண்டும் குறிப்பிடத் தகுந்தவை. கடவுளிடம் மீதூறும் அன்பினால் அவரை அணுகும் பெற்றியும், அவருடைய அருளையும் நினைந்து உள்ளமுருகிப் பாடும் மாண்பையும் நம் நாட்டுப் பக்தர்கள் வரலாற்றிலும், அவர்தம் பாக்களிலும் காண முடியும். பாடல்கள் மட்டுமின்றி ஆங்காங்கே கோயில்களும் எழுப்பி உருவ வழிபாட்டை

வளர்த்தனர். இடச்சூழலுக்குத் தகுந்தார் போல இறைவனுக்குப் பெயர்களும் இட்டுள்ளனர். அத்தகைய பெயர்களைப் புதுக்கோட்டை மாவட்ட மக்கள் எவ்வாறு கையாண்டுள்ளனர் என்பதை மக்கள் பெயர்கள் வழி அறிவதே இவற்றின் நோக்கம் ஆகும்.

## பக்தி பொருள் விளக்கம்

'பக்தி' என்னுஞ் சொல் 'பஜ்' என்னும் அடியினின்று பிறந்தது. அதன் பொருள் 'சேவை செய்தல்' என்பதாகும். பக்தி நெறி என்பது வெறும் உணர்ச்சி வயப்பட்டு வாழும் நெறியன்று. "அது இறைவனுக்கும் உடன் அடியார்களுக்குத் தொண்டாற்றிக் கொண்டு, அன்பில் ஊறித் திளைக்கும் மாண்புடையதொரு நெறியாகும். வைணவர்கள் பகவத் கைங்கரியம், பாகவதக் கைங்கரியம் ஆகிய இரண்டனையும் வலியுறுத்துவர்."[130] என்பர்.

## வைணவக் கொள்கைகள்

வைணவர்கள் பாஞ்சராத்திரிக நூல்கள், புராணங்கள், கீதை ஆகியவற்றோடு ஆழ்வார்களின் பாசுரத் தொகுப்பாகிய நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தையும், வேத வரிசையில் ஏற்பர். ஆழ்வார்கள் பிரபந்தம் தமிழ் வேதம் எனச் சிறப்பித்துச் சொல்லப்படும். ஆழ்வார்கள் பக்தியனுபவத்தில் ஆழ்ந்து சென்ற பெரியவர்கள் ஆவார்கள். அவர்கள் வாழ்க்கையில் பணிவும், துணிவும் நிரம்பிய அன்புச் செயல்களைக் காண முடிகின்றது. விஷ்ணு அல்லது முகில் வண்ணக் கண்ணன், அனைத்துக்கும் மேம்பட்டு எங்கும் நிறைந்து நிற்கும் நாராயணனாகக் காட்டப் பெறுகின்றான். இறைவன் அனைத்தையும் கடந்து நிற்பவன் என்ற தெளிவும், அவன் எங்கும், எவர் உள்ளத்திலும் ஒளிர்கின்றான் என்ற உறுதியும், அவன் அன்பெனும் பிடிக்குள் அகப்படுகிறவன் என்ற நம்பிக்கையும் வைணவக் கொள்கைகள் ஆகும்.

**"உளன் கண்டாய் நன்னெஞ்சே உத்தம் என்றும்**
**உளன் கண்டாய் உள்ளுவார் உள்ளத்து-உளன் கண்டாய்**
**வெள்ளத்தி னுள்ளானும் வேங்கடத்து மேயானும்**
**உள்ளத்தி னுள்ளான் என்று ஓர்"[131]**

நினைப்பவர் நெஞ்சில் இறைவன் வீற்றிருக்கும் மாண்பைப் பொய்கையாழ்வார் பாடியுள்ளார். திருமழிசையாழ்வார் தம் பக்தி அனுபவத்தில்

ஆழ்ந்த நிலையில் இறைவனுக்கும் தமக்கும் உள்ள நெருங்கிய தொடர்பைச் சுட்டுக் காட்டுகிறார். அவை,

**"நான் உன்னை இன்றி இலேன் கண்டாய் நாரணனே
நீஎன்னை அன்றி இல்லை"[132]**

என்பதைக் காட்டுகிறது. தொண்டரடி பொடியாழ்வார் பாடல் ஒன்று குறிப்பிடத்தக்கது.

**"போதெல்லாம் போதுகொண்டு உன்பென்னடி புனையமாட்டேன்
தீதிலா மொழிகள் கொண்டுஉன் திருக்குணம் செப்பமாட்டேன்
காதலால் நெஞ்சம் அன்பு கலந்திலேன் அது தன்னாலே
ஏதிலேன் அரங்கர்க்கு எல்லே
என் செய்வான் தோன்றினேனே"[133] (ப.151)**

என்பது பாடல்.

## வைணவர் வகைகள்

வைணவர்கள் தென்கலை, வடகலை என இரு கூறுபடுவர். தென்கலையார் "ஆண்டவன் அடியார் தொடர்பை மார்ஜால நியாயத்தால் விளங்குவர். பூனை தன் குட்டியைக் கௌவிச் செல்வதைப் போன்ற தொடர்பாக அதைக் கொள்வர். வடகலையார், குரங்குக் குட்டி தன் தாயைக் பற்றிக் கொள்ளும் தொடர்பாக அதனைக் கூறுவர். அது மர்கட நியாயம் எனப்படும். வைணத்தில், வாசுதேவ வழிபாட்டு நெறியைக் காட்டும் கிளைச் சமயமும், கிருஷ்ண வழிபாட்டைச் சிறப்பிக்கும் கிளையும் துளிர்க்கலாயின. தொடர்ந்து இராமர் வழிபாடு, இராமகிருஷ்ண வழிபாடு அவதாரக் கொள்கையின் மேல் எழுப்பப் பெற்றதாகும்."[134]

## அவதாரங்கள்

அவதாரம் என்னும் சொல் இறங்குதல் எனப் பொருள் தரும். முப்பத்து மூன்று அவதாரங்கள் உள என்பர். அவற்றுள் பத்தினை மிகுத்துச் சிறப்பிப்பர்.

**"மீனே ஆமை வராகம் நரசிங்கம்
வாமன னன்பரிசி ராமன் இராமன்**

**பலதேவன்வசு தேவன் வகுகற்கியென்**
**றாகும் ஈரைந்தும் அரியவ தாரம்”**[135]

எனத் திவாகர நிகண்டு திருமாலின் பத்து அவதாரங்களையும் குறிப்பிடுகிறது. அவன் தீயோரைப் போக்கி நல்லார்க்கு அருள்புரிய நிகழ்த்திய அருட்செயல்கள் பற்பல.

## நிகண்டுகளில் திருமால் பெயர்கள்

சிவனுக்கு ஆயிரத்தெட்டுத் திருநாமங்களை வழங்கிய போதிலும் ஆயிரம் பேருடையான் என நிகண்டுகள் திருமாலைப் போற்றுகின்றன. “ஆயிரநாமன், ஆயிரம் பெயரண்ணல், ஆயிரம் பெயரோன், ஆயிரம் பேரான் என்றெல்லாம் நிகண்டுகள் திருமாலைச் சுட்டுகின்றன.”[136] அவற்றுள் பன்னிரு நாமங்கள் சிறப்பாகப் பேசப்படுவதுண்டு. நம்மாழ்வார் திருவாய்மொழியில் 2 ஆம் பத்து ஏழாம் திருமொழி பன்னிருநாமப்பாட்டில்

**“பண்ணிய தமிழ்மாலை யாயிரத்துள் இவை பன்னிரண்டும்**
**பண்ணில் பன்னிரு நாமப்பாட் டண்ணல்தான் அணைவிக்குமே”**[137]

என்று ஒவ்வொரு பாடலில் ஒரு நாமத்தை அமைத்துப் பன்னிரு பாடல்களைப் பாடியுள்ளார். அவை கேசவன், நாரணன் (நாராயணன்), மாதவன், கோவிந்தன், விட்டு (விண்டு), மதுசூதனன், திரிவிக்கிரமன், வாமனன், சிரீதரன் (சீதரன்), இருடிகேசன், பற்பநாமன், தாமோதரன் என்பவையாம்.

நிகண்டுகளில் முந்தியது திவாகரம். அதில் திருமாலுக்குரிய பெயர்கள் முப்பத்து எட்டு(38) உள்ளன. நாமதீப நிகண்டு மிகுதியானப் பெயர்களைத் தருகிறது. அவை (86) எண்பத்து ஆறு ஆகும். பிங்கலம், சூடாமணி ஆகியவற்றில் பதினைந்து அவதாரப் பெயர்கள் உள்ளன.

## மக்கட் பெயர்

வைணவக் கடவுள் பல்வேறு பெயர்களில் விளங்குகின்றது. அவற்றில் முதன்மையானதாக விளங்குவது திருமால் ஆகும். வைணவம் தொடர்பானத் தெய்வங்கள் குறித்துப் பெயர்கள் இடப்படுகின்றன. வைணவம் என்றதும் தலைமை திருமால் என்பதே ஆகும். திருமால் தொடர்புடையப் பெயர்கள் மற்றும் அவர் உறவுகள் குறித்த பெயர்கள் அதிக அளவில் மக்கள் தங்கள்

குழந்தைகளுக்கு இட்டுவருவதை இம்மாவட்டக் கள ஆய்வின் வழி அறிய முடிகிறது.




என்ற அமைப்பில் வைணவ சமயம் கட்டமைக்கப்பட்டுள்ளது. இது தொடர்பானப் பெயர்கள் இம்மாவட்டத்தில் அமைந்துள்ள வைணவத் தலங்களில் காணப்படுகின்றன. பெருமாலுக்குப் பெரும் பங்கு வகிப்பது போன்று அவர் உறவு தொடர்பானத் தெய்வங்களுக்கும் முன்னுரிமை வழங்கப்பட்டு வருவதை மக்கட் பெயர்களின் வழி அறிமுடியும்.

## புதுக்கோட்டை மாவட்ட வைணவத் தலங்கள்

'திருக்கோகர்ணத்தை' ஒட்டியுள்ள திவப்பூரில் பிரசன்ன வெங்கடேசப் பெருமாள் கோயில் உள்ளது. 'குடுமியான்மலை' 16கி.மீ தொலைவில் உள்ளது. அது சிவன் தலம் ஆகும். சிவன் முதன்மைப்படுத்தப்பட்டிருந்தாலும் தலம் தோறும் நரசிம்மன், ரதி, மன்மதன் போன்ற தெய்வங்களையும் காணமுடிகிறது. மலையடிப்பட்டி, புதுக்கோட்டையில் இருந்து 33கி.மீ தொலைவில் உள்ளது. "இங்கு சிவ பெருமானுக்கும், விஷ்ணு பெருமானுக்கும் தனித்தனியே இரண்டு குகைக் கோயில்கள் உள்ளன. அனந்தசயன மூர்த்தியாகக் காட்சியளிக்கும் விஷ்ணு பெருமாள் கோயில் திருப்பதிக்குச் சமமாக மதிக்கப்படுவதாகச் சொல்லப்படுகிறது."[138] இதில் நரசிம்மர், வராகமூர்த்தி, திருமால், பிரம்மா ஆகிய தெய்வங்கள் உள்ளன. புதுக்கோட்டையிலிருந்து 19கி.மீ தொலைவில் உள்ளது நார்த்தாமலை. இங்குள்ள மேலமலையிலுள்ள விஷ்ணு குகைக்கோயில் 'பதினெண்பூமி வின்னகரம்' என்று அழைக்கப்பட்டது. தற்போது விஷ்ணு கோயில் என்று அழைக்கப்படுகிறது. 'திருவேங்கைவாசல்' என்ற ஊரில் திருமாலுக்குத் தனிக்கோயில் இல்லை என்றாலும் கருவறைச் சுவற்றின் மேற்குப் பகுதியில் 'விஷ்ணு' சிற்பம் காணப்படுகிறது. 'திருமயம்' 17கி.மீ தொலைவில் உள்ளது. இங்குள்ள பெருமால் சத்தியமூர்த்திப் பெருமால் என்று

அழைக்கப்படுகிறது. திருமகள், பிரமன் மற்றும் அவதாரங்களுடன் தெய்வத் தன்மையும் காணமுடிகிறது.

## திருமால் குறித்து மக்கள் பெயர்கள்

| கடவுள் பெயர்கள் | மக்கள் பெயர்கள் |
|---|---|
| அச்சுதன் | அக்சதன் |
| அரி | ஹரிகரன், ஹரிஸ், ஹரினி |
| ஆதி | ஆதித்தியா, ஆதி, ஆதிகாஸ் |
| கண்ணன் | கண்ணன் |
| கமலக்கண்ணன் | கமல், கமலா, கமலாலயன், கமலி, கமலேஷ், கமலக்கண்ணன், கமலவேணி, கமலம், கமலவல்லி. |
| கேசவன் | கேசவன், கோவிந்தன் |
| சீதரன் | ஸ்ரீதரன், ஸ்ரீதர் |
| தாமோதரன் | தாமோதரன் |
| நாரணன் | நாராயணன். நாராயணமூர்த்தி |
| பதுமநாபன் | பத்மநாபன், பத்மா, பத்மாவதி |
| பெருமாள் | பெருமாள், பெருமாள்சாமி |
| மதுசூதனன் | மது, மதுமிதா, மதுசூதனன், மதுபாலா, மதுமித்ரா |
| மாதவன் | மாதவன், மாதவி |
| இராகவன் | இராகவன், இராகவி |
| இராமன் | இராமன், இராமநாராயணன், இராமு, முத்துராமு, ராமாயி, இரமசாமி, இராமத்தாய், ராம்குமார், |

| | |
|---|---|
| | இராமச்சந்திரன், சீதாஇராமன் |
| கிட்டிணன் | கிருஷ்ணன், கிருஷ்ணசாமி, கிருஷ்ணம்மாள், கிருஷ்ணா, கிருஷ்ணவேணி, கிருஷ்ணமூர்த்தி. |
| பரசன் | சிலம்பரசன், பரசுராமன், அன்பரசன், அன்பரசி |
| பலதேவன் | சகாதேவன், மகாதேவன், தேவகி. |
| மீன்வடிவன் | மீனாள், மீனாட்சி, தேவமீனாள், மீனலோசனி, மீனாட்சிசுந்தரம் |
| முகில்வண்ணன் | முகிலன் |
| அழகன் | அழகேசன், அழகு, அழகேஸ்வரி, அழகுமீனாள், அழகுசுந்தரம், அழகுலெட்சுமி, அழகப்பன், அழகம்மை, அழகு |
| செல்வன் | செல்வம், செல்வமீனாள், செல்வராசு, செல்வகணபதி, செல்வராகவன், தாமரைச்செல்வம் |

இவ்வாறாக காலப்போக்கில் பெயர்கள் பெருகியுள்ளன. ஒரே பொருள் நோக்கில் வெவ்வேறு வகையான பெயர் வடிவங்கள் வருகின்றன. இவ்வாறானத் திருமால் பெயர்களை மக்கள் தம் குழந்தைகளுக்கு அன்று முதல் இன்று வரை திருமாலின் நாமமாக இட்டுவருவதை அறிய முடிகிறது.

## திருமகள், பூமகள் குறித்து மக்கட் பெயர்கள்

திருமாலின் மனைவிகள் திருமகளும், நிலமகளும் ஆவர். திருமாலின் மார்பிலே! குடிகொண்டு வாழும் திருமகள். இல்லத்தில் வாழும் நபர்கள் இன்முகத்தோடு பிரதிப்பலனின்றி வருவோருக்கு உணவளித்தால் திருமகள் செல்வச் செழிப்போடு இருக்கச் செய்வாள் என்பது வரலாறு. அத்தகு திருமகள் நிலைத்து குடிகொள்ள வேண்டும் என்பதற்காகத் தம் இல்லத்தில் பிறக்கும் குழந்தைகளுக்குத் திருமகள் தொடர்பானப் பல்வேறு பெயர்களை மக்கள் இட்டு வருகின்றனர் என்பதனை ஆய்வின் வழி அறியமுடிகிறது. வள்ளுவர்,

**"அகனமர்ந்து செய்யாள் உறையும் முகனமர்ந்து**
**நல்விருந் தோம்புவான் இல்"[139]**

என விருந்தோம்பும் கடமைத் தவறாதவன் இல்லத்தில் திருமகள் மகிழ்வுடன் வீற்றிருப்பாள் எனக் குறிப்பிட்டிருப்பது சிந்தனைக்குரியதாகும்.

**"திருமகள் கலைய தூர்தி செயமாது பூமி**
**திசை தெய்வ மான பலவும்**
**அருநெதி நல்லதல்ல அவை நல்ல நல்ல**
**அடியாரவர்க்கு மிகவே"[140]**

எனத் திருஞானசம்பந்தர் தம் பதிகத்தில் திருமகளை முதலில் வைத்துப் போற்றியுள்ளது குறிப்பிடத்தக்கது. திருமகளுக்குரியப் பெயர்களாக, "செல்வி, திரு, திருமகள், சீதேவி, பொருட்செல்வி, பொருள்மகள், பொன்னி என்றெல்லாம் நிகண்டுகள் விவரிப்பது பொருத்தமானது. இவள் அருளும் செல்வத்தாய் ஆக்கம் பலவும் வரும்."[141] இவ்வாறான பெயர்களை மக்கள் 'திரு' என்ற தமிழ்ச் சொல்லை 'ஸ்ரீ' என்ற வடமொழிச் சொல்லாக்கி அதிக அளவில் பெயர்களை இட்டுள்ளனர். அவை, ஸ்ரீநிதி, ஸ்ரீதேவி, ஸ்ரீஹரி, சுபஸ்ரீ, வேணிஸ்ரீ, நித்தியஸ்ரீ, அழகுஸ்ரீ, ஸ்ரீதர், ஸ்ரீதரன், ஸ்ரீலேக்கா, ஸ்ரீநிகாஷ் போன்ற பெயர்களை அதிக அளவில் முன்னொட்டாகவும், பின்னொட்டாகவும் இட்டு வருகின்றனர். செல்வி என்ற பெயரைப் பின்னொட்டாக இட்டு வருகின்றார்கள்.

கலைச்செல்வி, திருச்செல்வி, பொற்ச்செல்வி, தாமரைச்செல்வி, அருச்செல்வி ஆகிய பெயர்களின் வழி அறிய முடியும். "பொன்" என்றப் பெயரை இம்மாவட்ட மக்கள் இட்டுவருகின்றனர்.

பொன்னி, பொன்னம்மாள், பொன்னையா, பொன்னாட்சி, பொன்னம்பலம், பொன்னுமணி, பொன்னீலன், பொன்னா எனத் தனிப்பெயராகவும் முன்னொட்டுப் பின்னொட்டுச் சேர்த்தும் இட்டுவருவதை மக்கட் பெயர் வழி அறியமுடிகிறது.

பூமகள் தொடர்பாகவும் மக்கள் பெயர்களைக் காண முடிகிறது. "திரு" தொடர்பான செய்திகளைச் சங்க நூல்களின் வழி அறியமுடிகிறது. இதனை

**"தேங்கமழ் திருநுதல் ஊர்தரும் பசப்பே"[142] (குறுந்.205:7)**

**"திருமணி ஒளிர்வரும் பூணன் வந்து"[143] (அகம்.32:2)**

**"திறஞ்சேர்ந்தான் ஆக்கம்போல் திருத்தகும்: அத்திருப்**
**புறங்கூற்றுத் தீர்ப்பார்போல் பொருளுண்மேல்"[144]** **(கலி.38:20-21)**

**"நின்னது திகழ்ஒளி சிறப்பிருந் திருமேனி"[145]** **(பரிபா.2:53)**

**"புல்லென் றனையால் வளங்கெழு திருநகர்"[146]** **(புறம்.250:6)**

**"திருமணி பொருத திகழ்விடு பசுமபொன்"[147]** **(பதிற்றுப்.16:15)**

**"ஆழ்ந்த குழும்பில் திருமணி கிளர"[148]** **(மதுரைக்.273)**

**"அறல்போல் கூந்தல் பிறைபோல் திருநுதல்"[249]** **(பொருநர்.25)**

ஆகிய நூல்கள் வழி அறிய முடிகிறது. பூமிநாதன், பூமாதேவி, பூமிக்கா, பூமி போன்ற பெயர்களையும் காண முடிகிறது.

## மகன்கள் குறித்து மக்கள் பெயர்கள்

திருமாலை வணங்குதல் பொருட்டு அவர் பெயர்களைத் தம் குழந்தைகளுக்கு இட்டுவருவதோடு தம் குழந்தையைக் காத்தருளும் என்ற நம்பிக்கையிலும் பெயர்களை இட்டு வருகின்றனர். அதுமட்டுமல்லாது அவர் தொடர்பான உறவுப் பெயர்களையும் இட்டுவருகின்றனர். மகன்கள் தொடர்பாகவும் மக்கள் பெயர்களில் காணப்படுகின்றன.

திருமால் மைந்தர்கள் மூவராகச் சுட்டப்பட்டுள்ளனர். முதன்மையாகப் பிரமனையும், இரண்டாவதாகக் காமனையும், மூன்றாவதாக ஐயனாராகவும் அமைத்துள்ளனர். அவற்றில் "பிரமன்" படைத்தலாகியத் தொழிலைச் செய்வதால் நிகண்டுகள் அவருக்குப் பல்வேறுப் பெயர்களை வழங்கி வருகிறது. அவ்வாறு அமைக்கப் பெற்ற பெயர்களில் இம்மாவட்ட மக்கள் தங்கள் குழந்தைகளுக்கு எவ்வாறு பெயர்களை வழங்கி வருகின்றனர் என்பதை ஆய்வின் வழி அறிய முடியும். பிரமனின் படைப்புகளைப் பற்றி புறநானூற்றில்

**"ஓரில் நெய்தல் கறங்க ஓரில்**
**ஈர்த்தன் முழவின் பாணி ததும்ப**
**புணர்ந்தோர் பூவணி அணியப் பிரிந்தோர்**
**பைத லுண்கண் பனிவார் புறைப்பப்**
**படைத்தோன் மன்றஅப் பண்பி லாளன்**

**இன்னா தம்மவிவ் வுலகம்**
**இனிய காண்கித னியல்புணர்ந் தோரே"[150]**

என விநோதங்களைக் குறிப்பிடுகிறது. ஆதி அந்தமாக நான்முகன் இருப்பதனாலே அது தொடர்பாக மக்கள் தங்கள் குழந்தைகளுக்குப் பெயர்களை இட்டுள்ளனர். இதனைப் பரிபாடலின் வழி அறியமுடியும்.

**"ஆதி அந்தணன் அறிந்துபரி கொளுவ"[151]**

என்பதனால் அறியமுடியும். அது தொடர்பான ஆதி, ஆதித்யா, ஆதிலெட்சுமி போன்ற பெயர்களைக் காண முடிகின்றன. தாமரைப் பூவில் கொப்பூழ் வழிப் பிறந்தமையால் 'தாமரைப் பூ' குறித்தும் பெயர்கள் இடப்படுகின்றனர். இவற்றை சங்கப் பாடல்கள் வழி அறியமுடியும்.

**"நீல்நிற உருவின் நெடியோன் கொப்பூழ்**
**நான்முக ஒருவற் பயந்த பல்லிதழ்த்**
**தாமரைப் பொகுட்டிற் காண்வரத் தோன்றி"[152]**

**"தாமரை பயந்த தாவில் ஊழி**
**நான்முக ஒருவற் சுட்டி"[153]** **(முருகு.164-165)**

**"தாமரைப் பூவினுட் பிறந்தோன் தாகையும்**
**நீ என மொழியுமா"[154]** **(பரிபா. 3:13-14)**

ஆகியவற்றின் மூலம் உணர முடிகிறது. இது குறித்து பெயர்கள் வழங்கி வருவதைக் காணமுடிகிறது.

தாமரை, தாமரைச்செல்வன், தாமரைக்கண்ணன், தாமரைச்செல்வி போன்ற பெயர்களையும் காண முடிகிறது. "பூ" தொடர்பாகவும் பெயர்கள் இட்டுள்ளனர்.

**"புலமும் பூவனும் நாற்றமும் நீ"[155]** **(பரிபா.1:46)**

**"பூவினுட் பிறந்தோன் . . . ."[156]** **(பரிபாடல் திரட்டு, 7:7)**

**"மலர் மிசை முதல்வனும் . . . ."[157]** **(பரிபா.8:3)**

என்றதனால் அறிய முடிகிறது. ‘பூ’ தொடர்பாக பூவரசன், பூமலர், பூபதி, பூவாயி, பூமதி, மலர், மலர்க்கொடி, மலர்ச்செல்வி, மலரவன், மலர்விழி, மலர்வேந்தன் போன்ற பெயர்கள் அமைகின்றன.

பிரமனின் துணைவியாரான கலைமகள் குறித்தும் மக்கள், பெயர்களை இட்டுள்ளனர். கலைமகள் சிந்தையில் குடி கொண்டிருப்பதனால் ‘சிந்தாதேவி’ என்றும் அழைக்கப்படுகின்றது. ‘மணிமேகலையில்’ ஆபுத்திரனுக்கு அட்சயப்பாத்திரம் வழங்கியது ‘சிந்தாதேவித்’ தெய்வம் ஆகும்.

**“கேளிது மாதோ கெடுகநின் தீதென**
**யாவரும் ஏத்தும் இருங்கலை நியமத்துத்**
**தேவி சிந்தா விளக்குத் தோன்றி**
**எடா அழியல் எழுந்திது கொள்ளாய்**
**நாடுவறங் கூரினும் ஓடுவறங் கூராது**
**வாங்குநர் கையகம் வருந்துத லல்லது**
**தான்தொலை வில்லாத் தகைமையது என்றே**
**தன்கைப் பாத்திரம் அவன்கைக் கொடுத்தலும்”[158] (மணி.14:9-16)**

இந்து சமயத்தவர் மட்டுமல்லாது அனைத்துச் சமயத்தவரும் போற்றும் வகையில் இத்தெய்வம் உள்ளது. இதனைப் பழம்பாடல் ஒன்று தெரிவிக்கிறது.

**“இமையவர்கள் மோலி இணைமலர்த்தாள்-சூடர்**
**சமயத் தொறுநின்ற தையல்-சிமைய**
**மலைமடந்தை வாச மலர்மடந்தை-எண்ணெண்**
**கலைமடந்தை நாவலோர் கண்”**

கலைமகள் எல்லா சமயத் தவரும் போற்றும் பெருந்தெய்வமாவார். “அறிவுத்துணையாய் உயிர்களுக்கு நலம்புரியும் இக்கலைமகளின் பல்வேறு சிறம்புகளைத் தெரிவிக்கும் வகையில் நிகண்டுகள் தரும் பெயர்களும் பலவாம். இவற்றுள் உயிர்த்துணைவி, உலகமாதா, காயத்திரி, கீர்வாணி, வேதமுதல்வி, சாவித்திரி, தாய், பரமாது, பாரதி, புராதனி, வாணி, விமலை.”[159] என்பன சிறப்பாகக் கருதத்தக்கன. இது போன்றப் பெயர்களை இம்மாவட்ட மக்கள் தம் குழந்தைகளுக்குப் பெயராக இட்டுள்ளனர். இப்பெயர்கள் 30 வயதிற்கு மேற்பட்டவர்களுக்கு வைத்துள்ளதை ஆய்வின் வழி அறியமுடிகிறது.

**சான்றாக:** காயத்திரி, சாவித்திரி, விமலா, வாணி, வாணிஸ்ரீ, பாரதி போன்ற பெயர்கள் ஆகும். ஆயக்கலைகள் 64க்கு அதிபதியாக விளங்குபவள் கலைமகள். அத்தகைய கலைகள் தொடர்பாகவும் பெயர்கள் இட்டுள்ளனர். கலையரசி, கலைவாணி, கலைச்செல்வி, கலையரசன், கலைதாஜ், சரஸ்வதி, சரோஜா

போன்ற பெயர்களைக் காணமுடிகிறது. அறிவுத் தொடர்பாகவும் பெயர்கள் இட்டுள்ளனர். ஞானவேல், ஞானவல்லி, ஞானசேகரன், ஞானமூர்த்தி, ஞானாம்பிகை, அறிவழகன், அறிவுமதி போன்ற பெயர்களைக் காணமுடிகிறது. “கலை, அறிவு சார்பாக இவளை கலைச்செல்வி, கலைமான், புலமாமகள், அறிவாட்டி, அறிவினுக்கிறைவி, அறிவுவடிவினன், கண்ணாள் என நிகண்டுகள் போற்றியுள்ளன. ஞானமூர்த்தி, ஞானி எனவும் குறிப்பிடுகின்றன. புலவர்களுக்குத் துணைநின்று நல்ல வாக்குதளும் தெய்வமாவாள்.”[160] என்றெல்லாம் நிகண்டுகள் புகழ்ப்பெயர் சூட்டுகின்றன.

கலைமகளின் முழு உருவமும் வெள்ளைத் தன்மையாகக் காணப்படுகிறது. காளமேகப் புலவர் கலைமகளின் திருவுருவத்தை

**க்ஷவெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பணிபூண்டு**
**வெள்ளைக் கமலத்தே வீற்றிருப்பாள்-வெள்ளை**
**அரியா சனத்தி லரசரோட டென்னைச்**
**சரியா சனம்வைத்த தாய❁**

எனப் போற்றியுள்ளார். “கலைமகள் வெள்ளைத் தாமரைப் பூவில் வீற்றிருப்பவள். இவளுறையும் இருப்பிடத்தைச் சுட்டி நிகண்டுகள் தரும் பெயர்களும் உண்டு. தாமரையாசனி, வெண்கமலை, வெண்சலசமுற்றாள், வெண்டாமரையாள், வெண்டாமரை மேல்மாது, வெண்பூமான், வெண்மலர் மேலாள், வெள்ளை நளினவல்லி, பூரமும்.”[161] என்றெல்லாம் நிகண்டுகள் குறிப்பிடுகின்றன. வெள்ளைத் தொடர்பாகவும் பெயர்கள் இட்டுள்ளனர். அவை, வெள்ளத்தாய், வெள்ளச்சி, வெள்ளையம்மாள், வெள்ளையப்பன், வெள்ளைச்சாமி, வெள்ளையன் போன்றப் பெயர்கள் 40 வயதிற்கு மேற்பட்டவர்களுக்கு இம்மாவட்டத்தில் வழங்கி வருகின்றன. இது போன்று காமன் தொடர்பாகவும் பெயர்கள் இட்டுள்ளனர். விருப்பத்தைத் தோற்றுவித்தல் பற்றி வேள் எனவும் இவன் கூறப்படுகிறான். “மன்மதன் என்பது பெருவழக்கான பெயர். மதன்,

மதனன், மன்மதன் என்றெல்லாம் நிகண்டுகளில் இப்பெயர் உருமாற்றம் கொள்கிறது."[162] என்பதை நிகண்டுச் சொற்பொருட் கோவை வழி அறிய முடிகிறது. இன்பத்தைத் தோற்றுவிக்கும் கடவுள் என்பதால் அவன் பெயர் இட்டால் இன்பமாக இருப்பான் என்ற நம்பிக்கையில் இட்டுவருகின்றனர். இன்பம் மனத்தை அடிப்படையாகக் கொண்டு தோன்றுவதால் மனம் தொடர்பானப் பெயர்களை இட்டுவருகின்றனர். இதனை

**"காமர் நடக்கும் நடைகாண்"[163]** **(கலி.94:33)**

என்று கலித்தொகை மூலம் அறியமுடிகிறது. அது தொடர்பான மக்கட் பெயர்கள் இம்மாவட்டத்தில் இட்டுவருகின்றனர்.

மதன், மதன்பாபு, மனோ, மனோகரன், மனோஜ்குமார், மனோபாலா, மனோரஞ்சிதம், மதன்கிஷோர், மோகன், மோகனா போன்ற பெயர்களை இம்மாவட்டத்தில் காண முடிகிறது. இளவேனிற் காலம் இவனுக்குரிய காலமாதலின் அது தொடர்பாகவும் பெயர்கள் இட்டுவருகின்றனர்.

**சான்றாக:** இளவேனி, இளமாறன், இளவரசி

போன்ற பெயர்களும் இட்டுவருகின்றனர். காமனின் மனைவி இரதிதேவி தொடர்பாகவும் பெயர்கள் இட்டுள்ளனர்.

**சான்றாக:** இரதி, இரதிதேவி, இரதிஸ்ரீ

ஆகிய பெயர்கள் இட்டுள்ளனர். இதனை,

**"இரதிகாமன் இவள்இவன் எனாஅ**
**விரகியர் வினவ வினாஇறுப் போரும்"[164] (பரிபா.19:48-49)**

என்பதனால் அறியமுடிகிறது.

ஐயனார் குறித்த செய்திகள் சைவ சமயத்திலும் உள்ளன. சிவனின் மகனாகவும் அழைக்கப்படுகிறார். வைணவத்திலும் இடம்பெற்றுள்ளார். திருமாலின் மகனாகவும் பேசப்படுவதனால் வைணவ கடவுளாகவும் காட்சியளிக்கிறார்.

## பௌத்த சமயம் தொடர்பான மக்கட் பெயர்கள்

உலகத்தில் மக்கள் பின்பற்றி வரும் சமயங்கள் பல. அதில் தமிழகத்தில் தோன்றிய மதங்கள் பலவாகும். அவற்றில் முதலில் தோன்றியது

சமணம். திக்கையே ஆடையாகக் கொண்டு வழிபட்டதன் காரணமாக அதனைப் பெண்களும் மற்றவர்களும் கடைபிடிக்க இயலவில்லை. இந்நிலையில் உருவானது பௌத்த சமயம் ஆகும். உலகத்தில் அறம் குன்றி மறம் வளர்ந்து மக்கள் அல்லலுறுங் காலங்களிலெல்லாம் புத்தர்கள் தோன்றி அறவழியைப் புகட்டி மக்களை நல்வழிப்படுத்துகிறார்கள் என்பதும் பற்பல. கற்ப காலங்களில் கணக்கற்ற புத்தர்கள் தோன்றி அறநெறியை நாட்டிச் சென்றார்கள் என்பதும் இப்போது நடைபெறுகிற இந்தக் கற்ப காலத்திலே இருப்பத்தைந்து புத்தர்கள் தோன்றினார்கள் என்பதும் அவர்களில் கடைசியாக வந்தவர் கௌதமபுத்தர் என்பதும் பௌத்த சமயக் கொள்கைகளாகும்.

இத்தகு சமயத்தில் கௌதம புத்தரின் பெயர்கள் மற்றும் அவரின் உறவுகள் சார்ந்த பெயர்கள் ‘புதுக்கோட்டை மாவட்ட’ மக்கட் பெயர்களில் எவ்வாறு போற்றப்படுகின்றன என்பதனை இங்குள்ள சிற்றூர் மக்கள் பெயர்களை ஆராயும் விதமாக இவ்வியல் அமைகிறது.

## பௌத்த தோற்றம்

தமிழ்நாட்டில் பௌத்த மதத்தைப் பற்றிய குறிப்புகள் கடைச்சங்கத் தொகை நூல்களுள் காணப்படவில்லை. ஆயினும் கடைச்சங்க காலத்து நூல்களாகிய மணிமேகலை, சிலப்பதிகாரம், மதுரைக் காஞ்சி முதலான நுல்களில் இந்த மதத்தைப் பற்றி கூறப்பட்டுள்ளன. அன்றியும் பௌத்த மதப் புலவர்கள் இயற்றிய செய்யுள்கள் கடைச்சங்கத் தொகை நூல்களும் காணப்படுகின்றன. “மணிமேகலை என்னும் பௌத்த காவியத்தை இயற்றிய பௌத்தராகிய கூலவாணிகர் சாத்தனார் அருளிச் செய்த செய்யுள்கள் அகநானூறு, புறநானூறு, நற்றிணை, குறுந்தொகை என்னும் நூல்களுள் தொகுக்கப்பட்டுள்ளன. இளம்போதியார் என்பவரும் கடைச்சங்க காலத்திலிருந்த பௌத்தப் புலவர். இவரது பெயரே இவர் பௌத்தர் என்பதைத் தெரிவிக்கின்றது (போதிஸ்ரீஅரசமரம் அரசமரத்தின் கீழே புத்தர் ஞானம் பெற்றபடியால் பௌத்தர்கள் அரசமரத்தைத் தொழுவது வழக்கம்). இந்த இளம்போதியார் இயற்றிய செய்யுள் ஒன்று நற்றிணையில் 72ஆம் பாட்டாகத் தொகுக்கப்பட்டிருக்கின்றது. ஆகவே கடைச்சங்க நூல்களில் பௌத்தப் புலவர்களின் செய்யுள்கள் தொகுக்கப்பட்டிருக்கின்ற படியினால் அச்சங்க காலத்துக்குப் பிறகுதான் பௌத்த மதம் தமிழ்நாடு வந்திருக்கக்கூடும் என்பது தவறாகின்றது.”[165] கடைச்சங்க காலத்திலேயே, அ∴தாவது கி.பி.முதலாம்

அல்லது இரண்டாம் நூற்றாண்டிலேயே பௌத்தம் தமிழ்நாட்டில் இருந்தது என்பது நன்கு விளங்குகின்றது.

## பெயர் விளக்கம்

விரும்பியதெல்லாம் பெறும் வாய்ப்பு உள்ள ஒருவனை " 'சர்வார்த்த சித்தன்' என்று அழைப்பார்கள். சித்தார்த்தனுக்கும் சூட்டிய பெயர் 'சர்வார்த்த சித்தன்' தான். ஆனால் செல்லமாக அழைத்தபோது இந்தப் பெயர் சித்தார்த்தனாகி."[166] அதுவே வழக்கிலும் வந்து நிலைத்துவிட்டது. "ததாகதர் என்றால் நிறைநிலை, அடைந்தவர் என்று அர்த்தம் புத்தருக்கு ததாகதர் பகவர் என்னும் நாமகரணமும் உண்டு."[167] என்பதை இதன்வழி அறியமுடிகிறது.

## குலம்

சாக்கிய குலத்திலே கௌதம குடும்பத்தைச் சேர்ந்த சுத்தோதனர் என்னும் அரசர் கபிலவத்து என்னும் ஊரை அரசாண்டு வந்தார். கபிலவத்து இமயமலை அடிவாரத்திலே இப்போதைய நேபாள நாட்டில் இருந்தது. சுத்தோதன அரசருக்கும் அவர்மனைவியராக கௌதமிக்கும் ஓர் ஆண் குழந்தை பிறந்தவுடனே கௌதமி இறந்துவிட்டதால் கௌதமியின் தங்கை மாயாதேவியைத் திருமணம் செய்து கொண்டார். "கி.மு.563ல் இந்தக் குழந்தை பிறந்ததாகச் சரித்திர நூலோர் கூறுவர். இக்குழவிக்குச் சித்தார்த்தர் என்று பெயர் சூட்டினார்கள்."[168] இக்குழந்தைதான் பிற்காலத்திலே புத்தர் பெருமானாக விளங்கியது.

## புத்தரின் உறவுகள்

அன்று முதல் இன்று வரை உறவு முறைகள் சமூகத்தில் ஓர் அமைப்பாகக் கொண்டுள்ளது. இது போல புத்தரின் உறவு முறைகளைப் பின்வருமாறு காணமுடிகிறது.

| | |
|---|---|
| **தந்தை** | : சுத்தோதனார் |
| **தாய்கள்** | : கௌதமி, மாயாதேவி |
| **மனைவி** | : யசோதரா |
| **தாத்தா** | : கோலிய மன்னன் ஆஞ்சனர் |

**பெரியப்பாக்கள்** : அமிர்தோதன், துரோனோதனர்

**அமிர்தோதன் மகன்** : ஆனந்தன்

**துரோனோதனர் மகன்** : அனுருத்தன்

இத்தகைய உறவுகளின் பெயர்களை இம்மாவட்ட மக்கட் பெயர்களிலும் காணமுடிகிறது.

புத்தரின் பெயரான சித்தார்த்தன் என்பது பல்வேறு மக்களின் பெயர்களில் சித்தார்த், சித்தார்த்தன் என்று காணமுடிகிறது. தந்தைப் பெயரான சுத்தோதன், தாய்கள் பெயரை கௌதமி, கௌதம், மாயா, மாயாதேவி, மாயாவதி என்றும், மனைவி பெயரை யசோ, யசோதரா, யசோதரன் என்றும், பெரியப்பா பெயர்களை அமிர்தலிங்கம், இராமாமிர்தம், அமிர்தவள்ளி என்றும் முன், பின் ஒட்டுப் பெயர்களையும் காணமுடிகிறது.

பெரியப்பா மகன்களின் பெயர்களை ஆனந்தன், ஆனந்தி, ஆனந். ஆனந்தவள்ளி என்றும் அனுசியா, அனு, அனுப்பிரியா என்ற பெயர்களில் முன் ஒட்டுக்கள் இட்டு பெயர்கள் இட்டுள்ளதை இம்மாவட்ட மக்கட் பெயர்களின் வழிக் கண்டுகொள்ள முடிகிறது.

## புத்தரின் வேறு பெயர்கள்

சாத்தன் அல்லது சாத்தனார் என்னும் பெயர் ‘சாஸ்தா’ என்னும் வடமொழிப் பெயரின் திரிபு. “ ‘சாஸ்தா’ என்பது புத்தருக்குரிய பெயர்களுள் ஒன்று. அமரகோசம், நாமலிங்கானு சாசனம் முதலிய வடமொழி நிகண்டுகளால் அறியப்படும்[169] சாத்தன் அல்லது சாஸ்தா என்று புத்தருக்குப் பெயர் கொடுக்கப்பட்டதன் காரணம் அவர் எல்லாச் சாஸ்திரங்களையும் கற்றவர் என்னும் கருத்துப் பற்றியதாகும். “சிலப்பதிகாரம் கனாத்திறமுரைத்த காதையில் பாசண்டச் சாத்தற்குப் பாடுகிடந்தாளுக்கு எனவரும் அடியில் ‘பாசண்டச் சாத்தன்’ என்னும் சொல்லுக்கு அடியார்க்கு நல்லார் எழுதும் உரைவறுமாறு, பாசண்டம் தொண்ணூற்றாறு வகைச் சமய சாத்திரத் தருக்கக் கோவை இவற்றிற்கு முதலாகவுள்ள சாத்திரங்களைப் பயின்றவனாதலின் மகாசாத்திரனென்பது அவனுக்குப் பெயராயிற்று இவர் கூறும் உரைக் கேற்பவே பௌத்தர்களும் புத்தர் பல நூல்களைக் கற்றவர் என்று கூறுவர்.”[170] எனவே சாஸ்தா என்னும் சொல்லின் திரிபாகிய சாத்தன் என்னும் பெயர் புத்தரைக்

குறிக்கும் பெயராகப் பண்டைக் காலத்தில் வழங்கப்பட்டு வந்ததை இதன் மூலம் அறியப்படுகிறது. இதனைச் சூடாமணி நிகண்டு,

**"அண்ணலே மாயாதேவி சுதன் அக ளங்கமூர்த்தி**
**தண்ணிய கலைகட் கெல்லாம் நாதன் டுக்குற்ற மில்லோன்"[171]**

**(சூடாமணி நிகண்டு)**

என்பதன் வழி உணர முடிகிறது.

## சாத்தன் - ஐயப்பன்

சாத்தனாருக்கு ஐயப்பன் என்னும் பெயர் மலையாள தேசத்தில் வழங்கி வருகின்றது. காவிரிப்பூம்பட்டினத்திலும் சாத்தன் கோயில் இருந்ததாகச் சிலப்பதிகாரத்தினால் தெரிகின்றது. "சாஸ்தா அல்லது சாத்தன் 'ஐயன்' அல்லது 'ஐயனார்' என்பர். 'ஐயன்' என்பதற்கு உயர்ந்தோன், குரு, ஆசான் என்பன பொருள்கள். பௌத்த மதம் அழிந்த பின்னர் அம்மதக் கொள்கைகளையும் தெய்வங்களையும் இந்து மதம் ஏற்றுக்கொண்ட போது வெவ்வேறு கதைகள் கற்பிக்கப்பட்டன. வைணவர் புத்தரைத் திருமாலின் ஓர் அவதாரமாகவே வெளிப்படையாக ஒப்புக்கொண்டனர். சைவ சமயத்தோர் புத்தராகிய சாத்தனாரைத் திருமாலுக்கும் சிவபெருமானுக்கும் பிறந்த பிள்ளையாகக் கற்பித்து சாத்தனாரைத் தமது தெய்வக் குழாங்களில் ஒருவராகச் சேர்த்துக் கொண்டனர்."[172] அப்பர் சுவாமிகளும் தமது தேவாரத்தில் சாத்தனாரைச் சிவபெருமானின் பிள்ளை என்றே கூறியிருக்கின்றார்.

**"பார்த்தனுக் கருளும்வைத்தார் பாம்பரை யாடவைத்தார்**
**சாத்தனை மகனா வைத்தார் சாமுண்டி சாமவேதங்**
**கூத்தொடும் பாடவைத்தார் கோளராமதய நல்ல**
**தீர்த்தமுஞ் சடைமேல் வைத்தார் திருப்பயற்றரனாரே"[173] (தேவா.)**

என வரும் தேவாரத்தினால் இதனை அறியலாம். சாத்தன் தொடர்பான ஊர்களையும் மக்கட் பெயர்களையும் புதுக்கோட்டை மாவட்டத்தில் மிகுதியாகக் காணமுடிகிறது. "ஏம்பல் வட்டத்திலுள்ள சாத்தியக்குடி, ஆவுடையர் கோயில் வட்டத்திலுள்ள சாத்தியடி, கோட்டைப்பட்டினம் வட்டத்திலுள்ள சாத்தியடி, பூவத்தக்குடி வட்டத்திலுள்ள சாத்தனேந்தல், திருமயம் வட்டத்திலுள்ள சாத்தக்குடிப்பட்டி, குன்னண்டார்கோயில் வட்டம் சாத்தினிப்பட்டி, அரசமலை

வட்டத்திலுள்ள சாத்தனூர்."[174] ஆகிய ஊர்கள் சாத்தன் என்ற முன் ஒட்டுச் சொல்லைக் கொண்டுள்ளதை இதன் மூலம் அறிய முடியும்.

இதுபோல் 'சாத்தன்' என்ற சொல் மக்கள் பெயர்களிலும் மிகுதியாகக் காணப்படுகிறது. அவை,

சாத்தி, சாத்தாயி, சாத்தம்மை, சாத்தன், சாத்தப்பன், சாத்தையா

போன்ற பெயர்களை மிகுதியான மக்களுக்கு இட்டு அழைப்பதை இதன் மூலம் அறியலாம். 'ஐயப்பன்' என்ற சொல்லும் மக்கட் பெயர்களில் மிகுதியாகக் காணப்படுகிறது. அவை,

ஐயனார், ஐயர், ஐயப்பன் என்பனவாகும்.

## தருமன் - தருமராஜர்

'தருமராஜா கோயில்கள்' என்பனவும் பண்டொரு காலத்தில் பௌத்தக் கோயில்களாயிருந்திருக்க வேண்டும். " 'தருமன்' அல்லது 'தருமராசன்' என்பது புத்தருக்குரிய பெயர்களில் ஒன்று பிங்கலநிகண்டில் 'தருமன்' என்றும் திவாகரத்திலும் நாமலிங்கானு சாசனத்திலும் 'தர்மராஜன்' என்றும் புத்தருக்கு வேறு பெயர் கூறப்பட்டுள்ளது."[175] புதுக்கோட்டை மாவட்டத்தில் பெரும்பாண்மையோர் பெயர்களில் முன் ஒட்டுச் சேர்த்து வைத்துள்ளனர். அவை, தருமன், தர்மலிங்கம், தர்மதுரை, தர்மராஜன் என்பனவாகும்.

## புத்தரின் அறமும் மறமும்

புத்தர் அரச வம்சத்திற்குரியக் கலைகள் பலவற்றையும் கற்றுத் தேர்ந்தார் யானை, குதிரை ஆகிய விலங்குகள் மீது பரிவும் பாசமும் கொண்டிருந்தார். அவற்றை ஒரு போதும் அவர் துன்புறுத்தியதில்லை. மாறாக, நிறைய அவற்றிற்கு நல்ல உணவு கொடுக்க உத்தரவிட்டார். காட்டிற்கு வேட்டைக்குச் செல்லுதல் அரசமரபுகளில் ஒன்று. சித்தார்த்தன் வேட்டையாடச் சென்றால் மருண்டு ஓடும் விலங்கினத்தைக் கண்டு நாண் ஏற்றாமல் வில்லைக் கீழே போட்டுவிடுவார் இதற்கு அடிப்படைக் காரணம் உயிர்க் கொலைக் கூடாது என்ற உயர்ந்த அறம் தான். இதனைத் தொல்காப்பியர்,

**"அறம்புரி நெஞ்சமொடு தன்வரவு அறியாமை"[176] (தொல்.1093)**

என்றார், திருவள்ளுவர்

**"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது."[177]** **(குறள்:45)**

**"அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றின் புறத்தாற்றிற்**
**போஓய்ப் பெறுவது எவன்."[178]** **(குறள்:46)**

என்கிறார். வலியால் துடித்த பறவையைப் பார்த்து உயிர்துடித்து அந்தப் பறவையைத் தூக்கினார். உயிர்க்கொலை, உயிர்ப்பலி இதையெல்லாம் அவர் மனம் கண்டித்தது. கருணையே உருவான புத்தர் எனப் பிற்காலத்தில் உலக மக்களால் புகழப்பட்டதற்கு இந்த நிகழ்ச்சி தான் முக்கிய காரணம் என்று கூறலாம். இவ்வாறு அரசருக்குரிய அந்தனை மறங்களும் உயிர்க்கொலைக் கூடாது முதலான அறங்களும் ஒருங்கே நிறைந்தவர் புத்தர் என்பதைக் காணமுடிகிறது.

## புத்தரின் உபதேசம்

புத்தரின் உபதேசத்தில் முதல் நான்கு உண்மைகள் சொல்லப்பட்டுள்ளன. அவை,

1. துக்கத்தின் இருப்பு
2. துக்கத்திற்கான காரணம்
3. துக்க நீக்கம்
4. துக்கத்தை நீக்குவதற்கான வழி

ஆகியவையாகும்.

## புத்தரின் போதனைகள்

பஞ்சசீலம் என்னும் 5 போதனைகளைச் சொன்னவர் புத்தர். அவை,

1. உயிர்க்கொலைக் கூடாது
2. களவு கூடாது
3. ஒழுக்கமின்மை கூடாது

4. பொய் கூடாது

5. மது கூடாது

ஆகிய ஐந்து போதனைகளைச் சொன்னவர் புத்தர் என்பதை உணர முடிகிறது.

## அஷ்டாங்க மார்க்கம்

'நல்' என்ற முன் சொல்லின் மூலம் எட்டு மார்க்கங்களைக் கூறியவர் புத்தர். அவை,

1. நல் அறிவு
2. நல் நினைவு
3. நற்பேச்சு
4. நற்செயல்
5. நல்வாழ்வு
6. நன்முயற்சி
7. நல்விழிப்பு
8. நல்ஒருமை

ஆகியவை. பற்றற்றவர், புத்தர் பெருமான் மனிதன் மேம்பட, துன்பத்திலிருந்து விடுபட வழிகாட்டியவர் புத்தர் பிரான். அவர் உபதேசித்தவை அனைத்தும் மனித இனம் ஏற்றம் பெற துணை செய்தவையாகும்.

## பாலிமொழி

தமிழில் போர்ச்சுகீசு, ஆங்கிலம், உருது, அரபி முதலிய அயல் மொழிச் சொற்கள் கலந்துவிட்டது போலவே, பாகத (பிராகிருத) மொழிகளில் ஒன்றான பாலி மொழியிலிருந்தும் சிலச் சொற்கள் முற்காலத்தில் கலந்து காணப்படுகின்றன. "பாலிச்சொற்கள் சமஸ்கிருத மொழிச் சொற்கள் என்ற எண்ணத்துடன் வழங்குவதாகவும் காணப்படும். உச்சரிக்கையில் ஏறக்குறையச்

சமமாயிருக்கும் ஒரு பொருட் சொற்கள் பாலிமொழியிலும் சமஸ்கிருத மொழியிலும் காணப்படுகின்றன. சமஸ்கிருதச் சொற்கள் எனப்படும் இச்சொற்கள் தமிழ்மொழியில் இரு விதமாக எழுதப்படுகின்றன. ஒருவிதம் பாலிமொழிக் கிணக்கமாகவுள்ளது: மற்றது சமஸ்கிருத மொழிக்கிணக்கமாகவுள்ளது. பாலிக்கிணக்க முள்ள சொல் பாலி மொழியிலிருந்து வந்ததாகவும் சமஸ்கிருதத்துக் கிணக்கமான சொல் சமஸகிருத மொழியினின்று வந்ததாகவும் துணியலாம்."[179] உதாரணங்கள் பின்வருமாறு,

| பாலி | தமிழ் | சமஸ்கிருதம் | தமிழ் |
|---|---|---|---|
| அத்த (பொருள்) | அத்தம் | அர்த்த | அருத்தம் |
| கய (நிறைதல்) | கயம் | கய | கயம் |
| காம (ஊர்) | காமம் | க்ராம | கிராமம் |
| ஸத்த (ஒலி) | சத்தம் | சப்த | சப்தம் |
| தம்ம (அறம்) | தன்மம் | தர்ம | தருமம் |
| தல (இடம்) | தலம் | ஸ்தல | தலம் |
| தான (இடம்) | தானம் | ஸ்தான | தானம் |
| தோஸ (குற்றம்) | தேசம் | தோஷ | தோடம் |
| விஸய (பொருள்) | விசயம் | விஷய | விடயம் |
| ஸந்தோஸ (மகிழ்ச்சி) | சந்தோஷ | சந்தோஷம் | சந்தோடம் |

## தமிழில் பாலிமொழிச் சொற்கள்

தமிழில் கலந்து வழங்கும் பாலிமொழிச் சொற்கள் அனைத்தினையும் எடுத்துக்காட்ட இயலவில்லை. பாலிமொழிச் சொற்கள் தமிழில் அதிகம் இருப்பதாகத் தெரியவில்லை. யாம் அறிந்தமெட்டில் தமிழில் வழங்கும் பாலிசொற்கள் சில என்று மயிலை சீனி. வேங்கடசாமி தம் நூலில் கூறியுள்ளார். அவை பின்வருமாறு,

**போதி** : அரசமரம்

**பாடசாலை** : பள்ளிக்கூடம்

**விகாரை** : பௌத்த பிக்குகள் வசிக்கும் கட்டடம்

**வேணு, வெளு** : மூங்கில்

**சீலம்** : ஒழுக்கம்

**அர்ஹந்தர்** : பௌத்த முனிவர்

| | | |
|---|---|---|
| **சீவரம** | : | பௌத்த பிக்குகள் உடுத்தும் ஆடை |
| **சேதியம** | : | கோவில் |
| **துதாகதா** | : | புத்தர் |
| **தம்மம** | : | தர்மம் |
| **நிர்வாணம்** | : | பௌத்தருடைய வீடுபேறு |
| **சாவகா** | : | பௌத்தரில் இல்லறத்தார் |
| **ஹேது (ஏது)** | : | காரணம் |
| **நூவா** | : | கப்பல் |
| **பக்கி** | : | பறவை |
| **நாவிகள்** | : | கப்பலோட்டி |
| **பதாகை** | : | கொடி |
| **நாயகன்** | : | தலைவன் |
| **தம்பூலம்** | : | தாம்பூலம் |

போன்ற சொற்கள் பாலிமொழியிலிருந்து பௌத்தர்கள் மூலமாகத் தமிழ்நாட்டில் வழங்கியிருப்பதை இதன் மூலம் உணர முடிகிறது.

## பாலிமொழியில் அமைந்த மக்கட் பெயர்கள்

வேணு, வெளு - திருமயம் என்ற சிற்றூரில் உள்ள சிவன் கோவிலில் ஒரு அம்மன் பெயர் வேணுவனேஸ்வரி என்பதாகும். மூங்கில் மரங்கள் அடர்ந்திருந்தக் காட்டை அழித்து கோவில் கட்டியதால் மூங்கில் பெயரையே அங்குள்ள அம்மனுக்குச் சூட்டியுள்ளனர். அப்பெயரைக் குழந்தைகளுக்கு இட்டால் அம்மன் குழந்தையைக் காத்தருளும் என்ற நம்பிக்கையில் பெயர்கள் இட்டுள்ளனர்.

**சான்றாக:** வேணுஜயர், வேணு, நீலவேணி, திருவேணி, கிருஷ்ணவேணி

என்று முன், பின் ஒட்டுக்கள் இணைத்து வைத்துள்ளனர். வெளு என்ற சொல்லை அடிப்படையாகக் கொண்ட ஊர் திருமயம் தாலுகாவில் உள்ள வெள்ளுகுடிப்பட்டி என்பதாகும். வெளு என்பது வெள்ளு என்று ஒற்றுச் சேர்த்து ஆடு மாடுகள் நிறைந்த ஊர் என்பதால் ‘பட்டி’ என்ற அடைமொழியுடன் வெள்ளுகுடிப்பட்டி என்றாகிவுள்ளது என்பதை இதன் மூலம் அறியமுடிகிறது. சீலம் - என்ற பாலி மொழிச் சொல்லில் அமைந்தப் பெயர்கள். சீலம் என்றால்

ஒழுக்கம் என்பதாகும். அத்தகையச் சொல்லை தம் குழந்தைகளுக்கு இட்டால் ஒழுக்கத்தோடு வாழ்வார்கள் என்ற நம்பிக்கையில் பெயர்களாகச் சூட்டியுள்ளனர்.

**சான்றாக:** தவசீலன், சத்தியசீலன், குணசீலன். ஞானசீலன்

என்று முன், பின் ஒட்டுக்கள் இணைத்து இட்டுள்ளதை இதன் மூலம் அறிய முடிகிறது.

## பௌத்த மதத் தெய்வப் பெயர்கள்

பகவான் புத்தர் காலமானப் பிறகு சில நூற்றாண்டு வரையில் அவருக்கு உருவம் அமைக்கப்படவில்லை. ஆனால் தருமப் பீடிகை, பாதப் பீடிகை ஆகிய உருவங்கள் மட்டும் பௌத்தர்களால் வணங்கப்பட்டன. இதனை,

**"பூவினர் புகையின் தொழுவர் பழிச்சி"[180]** **(மதுரைக்.466)**

என்ற அடி குறிப்பிடுகிறது. தருமப்பீடிகை என்பது சக்கரம் போன்ற உருவமாக அமைக்கப்படுவது. பாதப்பீடிகை என்பது புத்தரின் பாதங்கள் போன்று உருவம் அமைத்து வணங்கப்படுவது. சில நூற்றாண்டுகளுக்குப் பிறகு புத்தரின் உருவங்கள் கல், சுதை, செம்பு முதலிய பொருள்களால் அமைக்கப்பட்டு வணங்கப்பட்டன. இவ்வுருவங்களுக்கு உத்தேசிகச் சைத்தியம் என்று பெயர்.

பௌத்தர்கள் புத்தரின் உருவங்களை வணங்கி வந்ததோடு வேறுசில சிறுதெய்வங்களையும் வணங்கி வந்தார்கள். அவை, மணிமேகலை, சம்பாபதி, கந்திற்பாவை, சாதுர் மகாராஜிகர், சக்கன், அவலோகிதர்ப் போன்ற தெய்வங்கள் ஆகும். இத்தெய்வங்கள் தொடர்பான மக்கள் பெயர்கள் இம்மாவட்ட மக்களிடம் மிகுதியாகக் காணப்படுகிறது.

**சான்றாக:** மணிமேகலை என்றும், பூபதி, பசுபதி என்று சம்பாபதியின் பெயராகவும், கந்திர் பாவை என்பதனை, பாவைமதி, பாவைநாச்சி என முன், பின் ஒட்டுக்கள் இணைத்து வைத்துள்ளனர். மகாராஜிகர் என்பதனை, மகா, மகாராஜன், மகாலிங்கம், மகாலெட்சுமி, மகாதேவி என 'மகா' என்பதனை முன் ஒட்டாக இணைத்து மக்கட் பெயர்களில் மிகுதியாகக் காணப்படுகிறது.

அவலோகிதர் என்பவற்றில் லோகி என்ற இடைச்சொல் மட்டும் மக்கட் பெயர்களில் காணமுடிகிறது.

**சான்றாக:** லோகேஸ், லோகேஸ்வரன், லோகா, லோகஸ்ரீ, லோகமதி, லோகேஸ்வரி, லோகிதாஸ் ஆகிய பௌத்த மதச் சிறுதெய்வப் பெயர்களை மக்கட் பெயர்களில் காணமுடிகிறது.

## புதுக்கோட்டை மாவட்ட பௌத்தப் பெரியார்

புதுக்கோட்டை மாவட்டத்தில் பௌத்த மதம் வளர்ச்சியுற்றிருந்ததை இப்பெரியார் வழி அறியமுடிகிறது.

இவர் புத்தமித்திரனார் என்றும் கூறப்படுவார். இவரது பெயரைக் கொண்டே இவர் பௌத்தர் என்பதனை அறியமுடிகிறது. இதனை வீரசோழியத்தின் வழிக் கண்டுணர முடிகிறது.

**"மிக்கவன் போதியின் மேதக் கிருந்தவன் மெய்த்தவத்தால்**
**தொக்கவன் யார்க்குந் தொடரவொண் ணாதவன் தூயனெனத்**
**தக்கவன் பாதந் தலைமேற் புனைந்து தமிழ் உரைக்கப்**
**புக்கவன் பைம்பொழிற் பொன்பற்றி மன்புத்த மித்திரனே"[181] (வீரசோழி )**

என்னும் இவர் இயற்றிய வீரசோழியப் பாயிரச் செய்யுள் இதனை வலியுறுத்துகின்றது. இவர் சோழநாட்டில் மலைக் கூற்றத்தில், பொன்பற்றி என்ற ஊரில் சிற்றரசராய் விளங்கியவர். " 'பொன் பற்றி' என்னும் ஊர் புதுக்கோட்டை வட்டத்தில் உள்ளது. சிலாசாசன ஆராய்ச்சியாளர் வெங்கையா அவர்கள். தஞ்சாவூர் ஜில்லா அறந்தாங்கி தாலுகாவில் பொன்பேத்தி என்று இப்போது வழங்குகின்ற ஊர்தான் புத்தமித்திரனாரின் 'பொன்பற்றி' என்பர்."[182] வித்வான், ராவ்சாகிப், மு.இராகவஅய்யங்கார், "அறந்தாங்கி வட்டம் பொன்பேத்தி கிராமமும் அதனைச் சுற்றியுள்ள இடங்களும் சோழர்களின் ஆட்சியில் புத்தமத மையமாகத் திகழ்ந்த இடங்களாகும்."[183] என்கிறார்.

## வீரசோழியம்

வீரசோழியம் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி எனும் ஐந்திலக்கண நூல். முழுவதும் கட்டளைக் கலித்துறையில் அமைந்தது. தமிழ் இலக்கண விதிகளுக்கு இந்நூல் மிகவும் முக்கியமானதாகத் திகழ்கிறது. "வீரசோழன் அல்லது வீர ராசேந்திரன் என்னும் பெயருள்ள சோழ மன்னன்

வேண்டுகோளின்படி இந்நூலை இவர் இயற்றி அவன் பெயரையே இதற்குச் சூட்டினார்."[184] இதனை,

> **"ஈண்டு நூல் கண்டான் எழில்மாலைக் கூற்றத்துப்**
> **பூண்டபுகழ்ப் பொன்பற்றிக் காவலனே - மூண்டவரை**
> **வெல்லும் படைத்தடக்கை வெற்றிபுணை வீரன்றன்**
> **சொல்லின் படியே தொகுத்து."[185] (கலித். )**

என்பதன் மூலம் அறிய முடிகிறது. பொன்பேத்திக்கு அருகில் "கரூர் என்ற சிற்றூர் உள்ளது. இங்குப் புத்தர் சிலை ஒன்று காணப்படுகிறது. சிற்ப வேலைப்பாட்டு அமைதியைக் கொண்டு இது சோழர் காலத்தைச் சேர்ந்ததாகும் என அறிஞர்கள் கருதுகின்றனர்."[186] கரூரைச் சுற்றியுள்ள வேறு சில சிற்றூர்களிலும் இதுபோன்ற சிற்பங்கள் காணப்படுவதைக் கொண்டு இப்பகுதி முழுவதும் சோழர் ஆட்சியில் புத்தமதம் பரவி இருந்திருக்க வேண்டும் என்பது தெரியவருகிறது.

புதுக்கோட்டை மாவட்டத்தில் பௌத்த மதத்தைப் பரப்பக் காரணமாக இருந்த அரசர்கள், அசோகச் சக்கரவர்தி, வீரராஜேந்திரச் சோழன் மற்றும், புத்தமித்திரர் ஆகியோர். இத்தகையப் பௌத்த அரசர்களின் பெயர்களை இன்றும் மக்கள் பெயர்களில் மிளிர்வதைக் காணமுடிகிறது. அசோகச் சக்கரவர்த்தியின் பெயரை,

**சான்றாக:** அசோக், அசோக்குமார், அசோகன் என்றும், வீரராஜேந்திரச் சோழன் பெயரை, வீரன், வீரச்சோழன், ராஜேந்திரன், ராஜா, வீரா என்றும், புத்தமித்திரனின் பெயரை மித்திரன், மித்ரா என்று மக்கட் பெயர்கள் மிகுதியாக உள்ளதை களஆய்வின் வழி காணமுடிகிறது. புதுக்கோட்டை மாவட்டத்தில் புத்தர் உருவச் சிலை உள்ள இடங்கள்

**வெள்ளனூர்**: புதுக்கோட்டையில் குளத்தூர் வட்டத்தில் இவ்வூர் கச்சேரியின் தென்புறத்தில் புத்தர் உருவச்சிலையொன்று இருக்கிறது.

**செட்டிபட்டி**: புதுக்கோட்டை குளத்தூர் வட்டத்திலுள்ள இவ்வூரில் 3 அடி, 9 அங்குலம் உயரம் உள்ள புத்தர் உருவச்சிலை ஒன்று இருக்கிறது.

**ஆலங்குடிப்பட்டி**: இதுவும் குளத்தூர் வட்டத்திலுள்ள ஊர். இங்கும் 3 அடி, 6 அங்குலம் உயரம் உள்ள புத்தர் உருவச்சிலை ஒன்று இருக்கிறது என்பதைக் களஆய்வின் வழிக் காண முடிந்தது.

## சமண சமயத்தில் மக்கள் பெயர்கள்

ஒரு நாடு தனிமனிதன், குடும்பம், சமுகம், சமுதாயம், பண்பாடு, சமயம், அரசியல் ஆகியக் கட்டமைப்புகளுக்கு உட்பட்டது. பல்வேறு நிறுவனங்களாக இயங்கக்கூடிய அமைப்பில் ஒன்றாக நிர்வகிக்க முடியாது. அத்தகையச் சூழலில் சமயம் ஒரு முக்கியப் பங்காக உள்ளது. எத்தனை சமயங்கள் தோன்றினாலும் அவை அனைத்தும் மக்களைப் பக்குவப்பட்டவர்களாக பகுத்து ஆராய்ந்து தெளிவதற்காகவே தோற்றம் பெற்றவை ஆகும். அத்தகு நிலையில் சமண மதமும் ஒன்றாகும். அத்தகைய மதம் எவ்வாறு சிறப்புற்று விளங்குகிறது என்பதனைப் 'புதுக்கோட்டை மாவட்ட' மக்கள் பெயர்களின் வழி அறிவதே இவ்வியல் நோக்கம் ஆகும்.

## சமயத் தோற்றம்

சமண சமயம் எப்பொழுது தோன்றியது. அதைத் தோற்றுவித்தவர் யார்? இவை பற்றி சரித்திரப்பூர்வமான ஆதாரம் எதுவும் கிடைக்கவில்லை. ஆனால் சமணர்கள், தங்கள் சமயம் தோன்றிய விதத்தையும் அதைத் தோற்றவித்த ரிஷபதேவரைப் பற்றியும் குறிப்பிடுகிறார்கள்.

## தீர்த்தங்கரர் என்பதன் விளக்கம்

தீர்த்தங்கரர் என்னும் வடசொல், பிறவிப் பெருங்கடலில் உழன்று தத்தளிக்கும் ஆன்மாக்களைக் கரையேற்றுபவர் என்று பொருள்படும். "தீர்த்தம் என்றால் நீர்நிலை. கரர் என்றால் கரையேற்றுபவர்"[187] என்று சமண சமய வரலாறு என்னும் நூலின் ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

## தீர்த்தங்கரர்கள்

ரிஷப தேவரை முதல்வராகக் கொண்டு இதுவரை இருபத்து நான்கு தீர்த்தங்கரர்கள் தோன்றி இருக்கிறார்கள். அவர்கள் ரிஷப தேவர், அஜிதநாதர், சம்பவநாதர், அபிநந்தனர், சுமதிநாதர், பதுமநாதர், அபார்சவநாதர், சந்திரப்பிரபர், புஷ்பநந்தர், சீதளநாதர், சீரேயாம்சநாதர், வாசுபூஜ்யர், விமலநாதர், அனந்தநாதர்,

தர்மநாதர், சாந்திநாதர், குந்துநாதர், அரநாதர், மல்லிநாதர், முனிசுவிரதர், நமிநாதர், நேமிநாதர், பார்சுவநாதர், வர்த்தமான மகாவீரர் ஆகிய இருபத்து நான்கு தீர்த்தங்கரர்கள் ஆவார்கள். இவர்களில் சமண சமயத்தை நிலைபெறச் செய்தவர்கள் கடைசியில் உள்ள இருவரைப் பற்றி மட்டுமே சரித்திர சம்பந்தமான அகச் சான்றுகளும் புறச்சான்றுகளும் கிடைத்திருப்பதாக சமண சமய வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடுகிறார்கள். இத்தகைய தீர்த்தங்கரர்களின் பெயர்களுக்குப் பின்னால் 'நாதர்' என்பது 'நாதன்' என்று மாறிப் பின்னொட்டுக்களாக இம்மாவட்ட மக்கட் பெயர்களில் காணமுடிகிறது.

**சான்றாக:** சாமிநாதன், சண்முகநாதன், உலகநாதன், மேகநாதன், வாஞ்சிநாதன், வடுகநாதன், சொக்கநாதன், அரங்கநாதன், பூமிநாதன், செந்தில்நாதன் என்னும் பின்னொட்டுப் பெயர்களில் 'அன்' என்னும் ஆண்பால் வினைமுற்று விகுதி கொண்டு அமைந்துள்ளது.

## சமண சமய அறங்கள்

சமண சமயம் துறவறத்தாருக்குரிய அறங்களை யதிதர்மம் என்றும், இல்லறத்தாருக்குரிய அறங்களைச் சாவகதர்மம் என்றும் குறிப்பிடுகிறது.

| | | |
|---|---|---|
| துறவறத்திற்க்குரிய அறங்கள் | - | 28 |
| மகாவிரதங்கள் | - | 5 |
| சமிதிகள் | - | 5 |
| புலனடக்கம் | - | 5 |
| முக்கியக் கருமங்கள் | - | 6 |
| முடிநீக்கல் | - | 1 |
| ஆடையில்லாமை | - | 1 |
| நீராடாமை | - | 1 |
| நிலத்தில் படுத்தல் | - | 1 |
| பல்துலக்காமை | - | 1 |
| நின்றுண்ணல் | - | 1 |
| ஒரு வேளை உணவு ஏற்றல் | - | 1 |
| | | 28 |

ஆகிய இருபத்து எட்டு அறங்கள் துறவறத்திற்குரியவை. இல்லறத்திற்குரிய அறங்கள் பத்து ஆகும். அவை,

| | | |
|---|---|---|
| அணுவிரதம் | - | 5 |
| கள் உண்ணாமை | - | 1 |
| ஊன் உண்ணாமை | - | 1 |
| தேன் உண்ணாமை | - | 1 |
| இரவு உண்ணாமை | - | 1 |
| பெரியோரை வணங்கள் | - | 1 |
| | | 10 |

ஆகிய முப்பத்து எட்டு அறங்களும் சமணர்களுக்குரிய அறங்களாகும்.

## மாவிரதங்கள் -5

அகிம்சை

வாய்மை

கள்ளாமை

துறவு

அவாவறுத்தல்

**அகிம்சை:** இன்னா செய்யாமை, அருளுடையாமை, கொல்லாமை, புலால் மறுத்தல் ஆகிய நான்கும் ஒன்று சேர்ந்து அகிம்சையாகும். "உயிர்களைக் கொல்லவோ, கொல்ல நினைக்கவோ, கொல்லச் சொல்லவோ, சொல்ல உதவி புரியவே கூடாதது அகிம்சை எனும் அறமாகும்."[188] என்கிறார் பா. தென்றல

**வாய்மை:** பொய்மை இன்மையே வாய்மையாகும். நன்மை தரும் இடம் தவிர மற்ற இடங்களில் பொய் கூறுதல் கூடாது என்று வள்ளுவர் கூறியுள்ளார்.

**"பொய்மையும் வாய்மை இடத்தப் புரைதீர்ந்த**
**நன்மை பயக்கு மெனின்."[189] (குறள்:292)**

மெய்யே பேசுதல். பொய் பேசாதிருத்தல் என்பதனை வள்ளுவர், ஒருவனுக்கு எல்லா அறத்தையும் கொடுக்கும் என்கிறார்.

**"பொய்யாமை அன்ன புகழில்லை எய்யாமை**
**எல்லா அறமும் தரும்."[190]** **(குறள்:296)**

பொய்மைக்கு உடன்படாதிருத்தல், பொய் பேசத் தூண்டாமை ஆகியவை வாய்மை எனும் அறத்தின்பாற்படும்.

### கள்ளாமை

பிறர் பொருளைக் கவராமை கள்ளாமையாகும். களவு செய்யாமையும், களவிற்கு மனம், மெய் மொழிகளால் உடன்படாமையும் கள்ளாமை எனும் அறமாகும்.

### பிரமசரியம்

சிற்றின்பத்தை நீக்கிப் பிரமசரியம் காத்தல் புணர்ச்சி விழையாமை எனும் அறமாகும்.

### அவாவறுத்தல்

உலகப் பொருள்கள் மீது உள்ள பற்றையும் உள்ளத்து உணர்ச்சிகளையும் விலக்குதல். ஆசைகள் அனைத்தையும் அறுத்தல் அவாவறுத்தலாகும்.

### சமிதிகள் - 5

இரியை, பாஷை, ஏஷணை, ஆதான நிஷேபனை, உத்சர்க்கம் ஆகியவை.

### இதியாசமிதி

சமணத் துறவி நடக்கும் போது மூன்று முழதூரம் பிஞ்சம் (மயிற் பீலிக்குஞ்சம்) கொண்டு தூய்மை செய்து நடத்தல் இரியசமித் எனும் ஒழுக்கமாகும். இ∴து எறும்பு, புழு, பூச்சி ஆகியவை காலடியில் மிதிபட்டு இறக்காமல் இருப்பதற்காக மேற்கொள்ளப்படுகிறது.

## பாஷாசமிதி

நாவடக்கம் கொள்ளுதல், பழித்துப் பேசுதல், புகழ்ந்து பேசுதல், கோபமாகப் பேசுதல், கடுஞ்சொல் கூறல் ஆகியவற்றை நீக்கி இனிமையாகப் பேசுவதும், அறத்தைப் பேசுவதும், கற்பிப்பதும் பாஷாசமிதியாகும்.

## ஏஷணாசமிதி

நாற்பத்தாறு வகையானக் குற்றங்கள் இல்லாத உணவைச் சமணத்துறவி யாசித்துப் பெற்று அளவோடு உண்ணல் ஏஷணாசமிதியாகும்.

## ஆதான நிஷேபனாசமிதி

சாதுக்கள் வைத்துக் கொள்ள அனுமதிக்கப்பட்ட பொருள்களான புத்தகம், பிஞ்சம், கமண்டம் ஆகியவற்றைப் பயன்படுத்துவதில் கவனத்தோடு இருத்தல் இவற்றை வைக்கும்போதும் எடுக்கும் போதும் சிறு உயிர்கள் இறந்துபடாமல் இருத்தல்.

## உத்சர்க்க சமிதி

உடலிலிருந்து வெளியேறும் கழிவுகளினால் பிற உயிருக்குத் துன்பமும் இடையூறும் ஏற்படாதவாறு நடந்து கொள்ளல்.

## புலனடக்கம் - 5

1. நாட்டியம், நடனம் போன்ற காட்சிகளைக் காணாமை
2. பாட்டு, யாழ், வீணை முதலிய இசைகளைக் கேளாமை
3. சந்தனம், பூ போன்ற நறுமணங்களை நுகராமை
4. அறுசுவை உணவுகளை உண்ணாமை
5. புலனுக்கு இன்பமளிப்பவற்றைத் தொடாதிருத்தல்

ஆகிய ஐம்புல உணர்வுகளைக் கட்டுப்படுத்துதல் புலனடக்கம் ஆகும்.

## முக்கியக் கருமங்கள் - 6 (ஷடாவஸ்யக்கிரியை)

### சாமயிகம்

இன்ப-துன்பம், நன்மை-தீமை, உயர்வு-தாழ்வு முதலியவற்றை ஒரு தன்மையாகப் பார்த்தல்.

### துதி

இருஷபவர் முதலிய இருபத்து நான்கு தீர்த்தங்கரர்களையும் அருகப் பரமேட்டியையும் போற்றித் துதித்தல்.

### வணக்கம்

அருகர், சித்தர், தீர்த்தங்கரர் முதலியவர்களின் திருவுருவங்களையும் சாத்திரங்களையும் சாத்திரங்களைக் கற்ற தபசிகளையும் தீக்ஷை கொடுத்த குருக்களையும் பெரியோர்களையும் மனம், வாக்கு, காயங்களினால் வணங்குதல்.

### பிரதிகிர்மணம்

பாவத்திற்குக் காரணமானவை தன்னிடத்தில் மனம், வாக்குக் காயங்களினால் நேராதபடி காத்துக் கொள்ளுதல்.

### கழுவாய்

அ∴தாவது பிராயச்சித்தம், சமண முனிவர் தமது விரதத்தில் ஏதேனும் குற்றம் நேர்ந்துவிட்டால் அதனை உணர்ந்து வருத்தி மனம் மொழி மெய்களால் நொந்து கொண்டு அக்குற்றத்தைக் கழுவுதல்.

### விசர்க்கம்

காயோத்ஸர்க்கம் எனவும் கூறுவர். தவம் செய்யும் போது வரும் துன்பங்களை அஞ்சாமல் பொறுத்தல் யாக்கையில் பற்றறுத்தல்.

### முடிநீக்கல்

மயிர் களைதல். சமண முனிவர் துறவு கொள்வதற்கு முன்னர்த் தீக்ஷை பெறுவர். தலை மயிரைக் களைவது தீக்ஷையில் இன்றியமையாதது. மயிரைக் கத்தியால் மழிக்காமல் கையினால் பிடுங்கிக் களைய வேண்டும். மயிர் வளரும்

போதெல்லாம் அவ்வப்போது பிடுங்கிக்களைய வேண்டும். இதனைச் செய்யும் நாட்களில் பட்டினி நோன்பிருக்க வேண்டும். இச்செயலில் உண்டாகும் வலி, சமணத் துறவியின் மன வலிமையையும் பொறுத்துக் கொள்ளும் தன்மையும், உடல் பற்றின்மையையும் காட்டுகிறது.

## ஆடையில்லாமை (திகம்பரம்)

திக்+அம்பரம்=திகம்பரம், திக் என்பது திசையையும் அம்பரம் என்பது துணியையும் குறிக்கிறது. திசைகளை ஆடையாக அணிந்தவர்கள் திகம்பரர்கள். அஃதாவது நிர்வாணமாக இருத்தல். உடல் தமதன்று என்று உடல் பற்றின்மையை வலியுறுத்துதல். சவேதாம்பரர், ஸ்தானகவாசி, யாப்பனீயர் போன்ற மற்ற சமணப் பிரிவினர் ஆடை உடுக்கவல்லவர்.

## நீராடாமை

சமண முனிவர்கள் நீராடிப் போற்றும் புறந்தூய்மையை விட அகத்தூய்மையைப் பெரிதாகப் போற்றுவர். மேலும் நீரில் உள்ள உயிர்களுக்குத் தீமை ஏற்படாதிருக்கும் பொருட்டும் நீராடார். நீரில் உயிர் அணுக்கள் உள்ளமைப் பற்றியே சமண முனிவர் நீருண்ணும் போது ஏழுமுறை வடிகட்டிய பின்னர்க் குடிக்க வேண்டும் என்னும் ஒழுக்கத்தைச் சட்டமாக வைத்துள்ளனர்.

## நிலத்தில் படுத்தல்

பாய்படுக்கைகளைத் தவிர்த்து கல், மண் உள்ள தரையில் படுத்துறங்குவதால் உடலில் ஏற்படும் துன்பங்களைப் பொறுத்தல் வேண்டும். குப்புறப்படுப்பதும் மல்லாந்து படுப்பதும் கூடாது. எறும்பு, புழு, பூச்சிகள் இல்லாத இடத்தில் படுக்க வேண்டும்.

## பல்துலக்காமை

உடம்பும் மிகை என்று தமது உடம்பையும் துறந்த சமண முனிவர் பல்தேய்த்துச் சுத்தம் செய்தால் தாம் துறந்துவிட்ட உடம்பின் மீது மீண்டும் பற்றினை உண்டாக்கும் எனக் கருதுவர்.

## நின்றுண்ணல்

சமண முனிவர் நின்றபடியே கையில் உணவினை வாங்கி உண்ணல் வேண்டும். துறந்துவிட்ட உடலிற்கு ஆசனம் தேடுதல் கூடாது.

## ஒருவேளை உணவு ஏற்றல்

ஒரு நாளைக்கு ஒருவேளை உண்ணுதல் சூரியன் புறப்பட்ட மூன்று நாழிகைக்குப் பின்னரும் சூரியன் மறைவதற்கு மூன்று நாழிகைக்கு முன்னரும் உணவு கொள்ள வேண்டும். சமண முனிவர்களில் சிலர் இரண்டு நாட்களுக்கு ஒரு முறையும் மூன்று நாட்களுக்கு ஒருமுறையும் எட்டு நாட்களுக்கு ஒரு முறையும் உணவு எடுத்துக் கொள்வர்.

## ஒன்பது பொருட்கள்

இதனை நவபதார்த்தம் என்று சமண சமயம் குறிப்பிடுகிறது. இதனை மேருமந்தர புராணம் கூறுவதாக ஆய்வாளர் பா.தென்றல் கூறியுள்ளார்.

**"உயிரும்உயி ரல்லதும் புண்ணியம் பாவம் ஊற்றும்**
**செயிர்தீர் செறிப்பும் உதிர்ப்பும் கட்டும்வீடும் உற்ற**
**துயர்தீர்க்கும் தூய நெறியும் சுருக்காய்யுரைப்பன்**
**மயல் தீர்ந்த காட்சி யுடையோர் இது கேண்மதித்தே"**[191]

**(மேருமந்திரப் புராணம்)**

என்று சுட்டுகிறது.

| | |
|---|---|
| உயிர் | - ஜீவன் |
| உயிரல்லது | - அஜீவன் |
| புண்ணியம் | - புண்ணியம் |
| பாவம் | - பாவம் |
| ஊற்று | - ஆஸ்ரவம் |
| செறிப்பு | - ஸம்வரை |
| உதிர்பு | - நிர்ஜரை |
| கட்டு | - பந்தம் |
| வீடு | - மோஷம் |

என்பன வடமொழிப் பெயர்ப்பாகும். சமணர்கள் மக்கள் பேசும் மொழியிலேயே தங்கள் கொள்கைகளைக் கூறியுள்ளனர்.

### உயிர்

உயிர் எண்ணிறந்தன: அழிவில்லாதன: அவை நல்வினை, தீ வினைகளுக்கேற்ப நரகதி, விலங்குகதி, மக்கள் கதி, தேவகதி அடையும். தொல்காப்பியர் கூறிய ஓரறிவுயிர், ஈரறிவுயிர், மூவறிவுயிர் என்ற பகுப்பு சமணத்தில் இடம் பெறுகிறது. இதனால் தொல்காப்பியரைச் சமணர் என்று குறிப்பிடுகின்றனர்.

### உயிரல்லது

புத்கலம், தர்மம், அதர்மம், காலம் ஆகாயம் ஆகியவை உயிரல்லவையாகும். இதில் புத்கலம் என்பது உயிர்களின் படிந்து நல்வினை, தீவினைகளைச் செய்விக்கும்.

### புண்ணியம்

நல்லெண்ணங்களாலும், நற்சொற்களாலும், நற்செய்கைகளாலும் உண்டான புண்ணியமானது மனிதராகவும் தேவராகவும் பிறக்கச் செய்கிறது. அறிவு, செல்வம், இன்பம், புகழ், மேன்மை, சிறப்பு ஆகிய நன்மைகளைக் கொடுக்கக்கூடியது.

### பாவம்

தீய எண்ணங்களாலும் தீய சொற்களாலும் தீயச் செய்கைகளாலும் உண்டானப் பாவமானது நரகராகவும் விலங்காகவும் பிறக்கச் செய்கிறது. அறிவின்மை, துன்பம், இகழ்ச்சி, வறுமை, சிறுமை முதலியத் துன்பங்களை அடையச் செய்கிறது.

### ஊற்று

நீர் ஊற்றுக்களில் நீர் சுரப்பது போல நல்வினை, தீவினை இரண்டும் உயிரில் சேர்வது ஊற்று எனப்படும். இதனைக் கன்மத் தொடர்ச்சி அல்லது பொறிவழிச் சேறல் என்றும் கூறுவர்.

## செறிப்பு

உயிர்கள் தாம் முன்பு செய்த நல்வினை, தீவினைப் பயன்களைத் துய்த்து ஒழிக்கும் போது புதிய கர்மங்கள் வந்து சேராதபடி ஊற்றின் வழியை அடைப்பது செறிப்பு எனப்படும்.

## உதிர்ப்பு

இருவினை ஊற்று உயிரினிடத்து மேன்மேலும் பெருகாதபடி தடுத்த பின்னர் அனுபவித்துக் கழிக்காமல் எஞ்சி நின்ற வினைகளைக் களைந்து விடுவதற்கு உதிர்ப்பு என்று பெயர்.

## கட்டு

மனம், வாக்கு, காயம் ஐம்புலன் முதலியவற்றால் உண்டான வினைகள் உயிருடன் ஒன்றில் கலப்பது கட்டு எனப்படும். சமண சமயம் தோற்றுவித்த அறங்களாகக் கையாண்டுள்ளனர்.

## சமணமும் தமிழ்ப்பண்பாடும்

பண்டைக் காலத்தில் சமணர்களின் வாழ்வும் சரித்திரமும் பிரிக்க முடியாதபடி பின்னிப் பிணைந்து செயல்பட்டு வந்து இருக்கின்றன. இதன் விளைவால் நல்ல பல இலக்கியங்கள் தமிழில் தோன்றி இருக்கின்றன. “உலகம் போற்றும் உத்தமர், ஒப்பற்ற தம் தலைவர் காந்தியடிகள் அகிம்சையைப் பற்றி பேசாத நாளே இல்லை. பொது வாழ்விலும், தனி வாழ்விலும் ஒவ்வொருவரும் அகிம்சையைக் கடைப்பிடித்து ஒழுக வேண்டும் என்று காந்தியடிகள் அழுத்தம் திருத்தமாக ஐயம் திரிபுக்கு இடமின்றிப் போதனை செய்தார். இந்துக்கள் போற்றிக் கொண்டாடும் வேதங்களும் அகிம்சையை மிகவும் உயர்ந்த நிலையில் பேசி இருக்கின்றன. அறங்களில் எல்லாம் தலையாய அறம் அகிம்மை பரமோதர்ம.”[192] என்று தமிழரின் பண்பாடுகளைச் சமணத்தின் அறங்களாகக் கொண்டு அமைந்துள்ளதை இதன்வழி அறியமுடிகின்றது.

## சமணர்களின் தமிழ்த் தொண்டு

ஆதிகாலத்தில் அறிவிலிகளாயும் காட்டு மிராண்டிகள் போலும் வாழ்ந்த காலத்தில், ரிஷபதேவர் என்னும் ஒருவர் இவர்களிடையே பிறந்தார். "ஒலி வடிவில் இருக்கும் பேச்சை வரி வடிவில் வரைந்து கொடுத்து, மொழி என்னும் ஒரு சாதனத்தை ரிஷப தேவர் முதலில் ஏற்படுத்திக் கொடுத்தார். வரி வடிவில் அவர் வரித்துக் கொடுத்த எழுத்துக்களுக்குப் பிராமி வடிவம் என்று பெயர். அந்த வடிவம் தான் தமிழ் மொழியின் ஆதி வடிவமாய் இருக்கக் கூடும் என்று கருத முடிகிறது. எண் என்னும் இலக்கங்களையும் ரிஷப தேவர் ஏற்படுத்திக் கொடுத்தார்."[193] என்பர். இவ்வாறு சமணர்கள் தமிழுக்கும், தமிழ்நாட்டிற்கும் ஆற்றிய தொண்டுகள் அளப்பறியது என்பதனை உணரமுடிகிறது.

## ஆலயங்கள்

சமணர்கள் தொழுகின்ற இடங்களைப் 'பள்ளி' என்றும் தலம் என்றும் அழைத்தனர். அந்தப் பள்ளிகளை இரண்டு வகையாகப் பிரித்துள்ளனர். அவை,




சித்த தலம் என்பது சித்தர்கள் வாழ்ந்து முக்தியடைந்த இடம் என்பர். இத்தகைய சமணத்தலங்கள் புதுக்கோட்டை மாவட்டத்திலும் உள்ளன. சணர்கள் தங்கி தவம் மேற்கொண்ட காரணத்தால் இங்குள்ள மலை 'சித்தன்னவாசல்' என்று பெயர் பெற்றுள்ளது. "ஏழடிப்பட்டம் இயற்கைக் குகையில் ஒரு படுக்கையில் காணப்படும் பிராமிக் கல்வெட்டு (கி.மு.2 ஆம் நூற்றாண்டு) எருமையூர் நாட்டில் பிறந்த கௌடிகள் என்னும் சமண முனிவருக்குச் சிறுபாவில் (சித்துப் போசில் அல்லது சித்தன்னவாசல்) இளையர் என்பான் செய்வித்த அதிட்டானம் (படுக்கை) என."[194] அக்கல்வெட்டுக் கூறுகிறது. சித்து என்றால் அதிசயம் (அற்புதம்) என்று பொருள். இத்தகைய அதிசயங்களைச் (சித்துக்களை) செய்யக்கூடியவர்கள் சித்தர்கள் எனப்பட்டனர். ஆகவே 'சித்து' என்ற சொல்லை தம் குழந்தைகளுக்கு இடுவதால் அவர்கள் வாழ்வில் பல்வேறு அற்புதங்களை நிகழ்த்துவார்கள் என்ற நம்பிக்கையில் 'சித்'

என்பதனை முன்னொட்டாக கொண்டு, ஆண்பால், பெண்பால், பலர்பால் வினைமுற்றுக்கள் அமையுமாறு பெயர்களை இட்டுள்ளனர்.

**சான்றாக:** சித்தன், சித்தர், சித்ரா, சித்திரையன் போன்ற பெயர்கள் பெரும்பாண்மையான மக்களிடம் காணப்படுகின்றன.

## புதுக்கோட்டையில் சமணத் தோற்றம்

புதுக்கோட்டைப் பகுதியில் இருக்கின்ற இயற்கை அமைப்புகளும் காடுகளும் சமண முனிவர்களின் தங்குமிடங்களாகப் பயன்பட்டு வந்தன. "சமண சமயம் கி.மு.2ஆம் நூற்றாண்டிலேயே நன்கு வேரூன்றியிருந்தது. சான்றாக சித்தன்னவாசல், வெள்ளனூர், அம்மாசத்திரம், தேனிமலை, நார்த்தாமலை, செட்டிப்பட்டி ஆகிய இடங்களிலுள்ள சமணச் சின்னங்கள் இதற்குச் சான்றாக அமைகின்றன."[195] என்று புதுக்கோட்டை மாவட்ட வரலாறு நூலின் ஆசிரியர் குறிப்பிடுகிறார். கி.பி.7ஆம் நூற்றாண்டிற்குப் பின் பாண்டிய நாட்டில் ஏற்பட்ட சைவ சமய பக்தி இயக்கங்களின் காரணமாகப் புதுக்கோட்டைப் பகுதிக்குச் சமண சமயத்தினர் பெருமளவில் குடிப்பெயர்ந்தனர். இங்கு அவர்களுக்குச் சாதகமான சூழ்நிலைகள் அமைந்திருந்ததை இது காட்டுகிறது. இதனை,

**"கூற்றாயினவாறு விலக்ககிலீர் கொடுமை**
**பலசெய்தன நான் அறியேன்"[196]**

என்று நாவுக்கரசர் சமணம் மாறிச் சைவம் சேர்ந்த நிலையில் பாடிய முதற்பதிகம் ஆகும். இவ்வாறு சமண சமயம் தோற்றம் பெற்றிருந்ததை இதன்வழிக் காணமுடிகிறது.

## புதுக்கோட்டை மாவட்ட சமண சமயக் கோவில்கள்

புதுக்கோட்டை மாவட்டத்தில் இயற்கையான குன்றுகள் மிகுதியாக உள்ளன. அதன் காரணமாக இங்கு அதிக அளவில குடைவரைக் கோயில்கள் காணப்படுகின்றன. இங்குள்ள சித்தன்னவாசல் குகை ஓவியத்திற்குப் புகழ்பெற்ற இடம். இதிலுள்ள ஏழடிப்பட்டம் என்னும் சமணர் குடைவரைக் கோயில் போல அருகிலுள்ள நார்த்தாமலையிலும் 'ஏழடிப்பட்டம்' என்னும் சமணப் படுக்கைகள் மிகுதியாக உள்ளன. இதனால் சமணம் இப்பகுதியில் மிகுதியாக இருப்பதால், மக்கட் பெயர்களில் சமண சமயப் பெயர்கள் விரவிக் காணப்படுகின்றது.

## சித்தன்னவாசல்

சித்தன்னவாசல் அக்காலத்தில் சமண மதத்தின் மையமாகத் திகழ்ந்துள்ளது. இது புதுக்கோட்டையில் இருந்து 7கி.மீ. தொலைவில் உள்ளது. இக்கோயிலில் சமணத் துறவிகள் தங்கித் தவம் செய்து வந்ததை இங்குள்ள பிராமிக் கல்வெட்டுகள் மூலம் அறிய முடிகிறது. சித்தன்னவாசலில் பல்வேறு தீர்த்தங்கர்களின் சிலைகள் உள்ளன. சித்தத் துறவிகலான ஆச்சரியர்கள் வாழ்ந்துள்ளனர் என்பதை "கி.பி.2 ஆம் நூற்றாண்டு எருமையூர் நாட்டில் பிறந்த கௌடிகன் என்னும் சமண முனிவருக்குச் சிறுபாவில் (சித்தன்னவாசல்) இளையர் என்பான் செய்வித்த அதிட்டானம்"[198] என அங்குள்ள கல்வெட்டுக்கள் சுட்டுகின்றன.

முனிவரின் செயல்களைக் கண்டு வியந்த மக்கள் அம்முனிவரின் பெயரான 'கௌ' என்ற எழுத்தில் பின் ஒட்டுக்கள் சேர்த்துத் தம்குழந்தைகளுக்குப் பெயர்களாக இட்டுள்ளனர்.

**சான்றாக:** கௌசல்யா, கௌசிகன், கௌசிக், கௌசலம், கௌதம், கௌதமி

என்றும் சமண முனிவர் என்ற சொல்லில் 'முனி' என்ற சொல் மக்கட் பெயர்களில் எடுத்தாளப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது.

**சான்றாக:** முனியன், முனியாண்டி, முனியம்மாள், முனிஷ்வரன், முனிஷ்வரி என்பனவாகும். முனி தொடர்பான ஆலயங்களும் இங்குக் காணப்படுகின்றன. திருமயம் ஒன்றியத்தைச் சேர்ந்த கோட்டை முனிஷ்வரன், ஆலங்குடி ஒன்றியத்தைச் சேர்ந்த கொப்பான கோட்டைமுனி ஆகிய ஆலயங்கள் இன்றும் இருக்கின்றன. இவற்றைச் சமண முனிவர்களின் வளர்ச்சி நிலைகளாக அறியமுடிகிறது.

## நார்த்தாமலை

சித்தன்னவாசலைப் போன்று நார்த்தாமலையும் பல குன்றுகளுடன் கூடிய இயற்கைச் சூழலுடன் அமைந்த இடமாகும். இங்கு நிறையச் சமணச் சின்னங்கள் காணப்படுகின்றன. ஏழடிப்பட்டத்தைப் போல் நான்கு படுக்கைகள் இருக்கின்றன. மேலும் இரண்டு தீர்த்தங்கரர் சிலைகளும் இடம்பெற்றுள்ளன.

## திருமய வட்டம் தேனிமலை

திருமயம் வட்டத்திலுள்ள தேனிமலை சமண முனிவர்களின் உறைவிடமாகத் திகழ்கிறது. இவ்விடம் தற்போது ஆண்டார்மடம் என்றும் அழைக்கப்படுகிறது. கொடும்பாளுரை ஆண்ட இருக்கவேள் மன்னன் இங்குள்ள சமண முனிவர்களை வணங்கி கொடையளித்த செய்தி இங்குள்ள ஒரு கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறது. ("பு.க.எண்:9)"[199]

## குளத்தூர் வட்டத்தில் சமணம்

குன்னாண்டார் கோயிலுக்கு அருகே உள்ள செட்டிப்பட்டி ஒரு சிறந்த சமண மையமாகத் திகழ்ந்த இடமாகும். கீரனூர் - கிள்ளுக்கோட்டை பெருவழிச் சாலையிலிருந்து சற்று உள்ளே தள்ளியிருக்கும் இந்தச் சிற்றூரில் 'சமணர் குண்டு' என்று அழைக்கப்படும் கோயிலின் இவ்விடம் ஒரு காலத்தில் மிகப் பெரிய சமணப் பள்ளியாக விளங்கியதற்குச் சான்றான இடமாகும். இக்கோயிலின் இடிபாடுகளிடையே கண்டெடுக்கப்பட்ட சமண தீர்த்தங்கரர்கள் மற்றும் சமணம் தொடர்பான சிற்பங்கள் புதுக்கோட்டை அருங்காட்சியகத்திற்குக் கொண்டுவரப்பட்டு காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

புதுக்கோட்டை நகரின் மையத்திலுள்ள மன்னர் கல்லூரி வளாகத்தில் சமண தீர்த்தங்கரர்களின் படிமங்கள் (டீசழணெநந) புதை பொருட்களாக கிடைத்துள்ளன. கலையழகு மிக்க இந்தப் படிமங்கள் தற்போது புதுக்கோட்டை அருங்காட்சியகத்தில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. ""அவற்றின் காலம் சுமார் 10ஆம் நூற்றாண்டு எனக் கருதப்படுகிறது.""[200] ஆகவே அக்காலத்தில் இந்த இடம் ஒரு சமணப் பள்ளியாக இருந்து, பின்பு அழிந்திருக்க வேண்டுமெனக் கருதஇடமுள்ளது.

புதுக்கோட்டை மாவட்டத்தில் இன்னும் பல இடங்களில் இதுபோன்ற சமணப்பள்ளிகள் சமண சிற்பங்கள் இருந்ததற்கான கல்வெட்டுச் செய்திகள் கிடைக்கின்றன.

கி.பி. 12, 13ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு சைவ, வைணவ பக்தி இயக்கங்களின் காரணமாக இப்பகுதியில் சமணம் முற்றிலுமாக வலுவிழந்திருக்க வேண்டும். ஏனெனில் இக்காலத்திற்குப் பின் சமணம் குறித்த செய்திகள் அதிகமாகக் கிடைக்கவில்லை. சமணம் ஒரு காலத்தில் இங்குப் பரவலாகப் பின்பற்றப்பட்டு வந்தபோதிலும் அவர்களது குடியிருப்புகள் சில நூறு

ஆண்டுகளுக்கு முன்கூட இங்கு அதிகம் இருந்திருக்கவில்லை. ஒரு வேளை இவர்கள் சூழ்நிலைகளின் காரணமாக வேறு மதங்களைத் தழுவி இருந்திருக்கக்கூடும். சமணம் பாமர மக்களிடையே வேரூன்றவில்லை என்பதையே இது காட்டுகிறது.

## தீர்த்தங்கரர்களில் மக்கள் பெயர்கள்

சமண சமயத்தைத் தோற்றுவித்து வளர்த்தவர்கள் இருபத்துநான்கு பேர் ஆவர். அவர்களின் பெயர்களை இம்மாவட்ட மக்கள் பெயர்களில் முன், பின் ஒட்டுக்களாகச் சேர்த்தும் தனித்தும் இட்டுள்ளதைக் காணமுடிகிறது.

ரிஷப தேவர் என்ற பெயரில் தேவர் என்ற சொல்லை மட்டும் வைத்து முன் ஒட்டிட்டுக் கூறுகின்றனர்.

தீர்த்தங்கரர்களான, அபிநந்தனர், சுமதிநாதர், புஷ்பநந்தர், வாசுபூஜ்யர், விமலநாதர், தர்மநாதர், சாந்திநாதர், மல்லிநாதர், முனிசுவிரதர், மகாவீரர் ஆகியோரின் பெயர்களில் மூன்று நான்கு எழுத்துகளை மட்டும் எடுத்து முன் பின் ஒட்டுக்கள் சேர்த்துப் பெயர்கள் இட்டுள்ளனர்.

**சான்றாக:** அபிநயா, அபி, அபினேஸ், அபிதா, சுமதி, புஷ்பலதா, புஷ்பவல்லி, புஷ்பவனம், புஷ்பா, வாசுதேவர், விமலானந்தன், விமலா, தர்மர், தர்மதுரை, தர்மராஜ், சாந்தி, மல்லிகா, முனிஸ்வரன், முனியன், மகா, மகாவீரன் போன்ற பெயர்கள் இம்மாவட்ட மக்கள் பெயர்களில் காணப்படுகின்றன.

இருபத்து நான்கு தீர்த்தங்கரர்களில் ஒரு சில தீர்த்தங்கரர்கள் மட்டுமே இம்மாவட்டத்தில் சிறந்து விளங்கியிருக்கிறார்கள் என்பதை, அங்குள்ள இவர்களின் சிலைகள் மூலமாக அறியமுடிகிறது. தீர்த்தங்கரர்களைப் பின்பற்றிச் சில சமண முனிவர்கள் இங்கு வாழ்ந்ததை, இவ்வாய்வின் வழி கண்டுணரமுடிகிறது.

24 தீர்த்தங்கரர்களில் இறுதியாக உள்ள இரண்டு தீர்த்தங்கரர்களின் சரித்திர சம்பந்தமான சான்றுகள் மட்டும் கிடைத்திருக்கின்றன. சமண சமயத்தை நிலைபெறச் செய்தவர்கள் என்பதால், இவர்களின் பெயர்களும் மக்கள் மத்தில் இடம்பெற்றுள்ளன.

**சான்றாக, ரிஷபதேவர்**

| **உறவுகள்** | **பெயர்கள்** | **மக்கட் பெயர்கள்** |
|---|---|---|
| தந்தை நாபி | - | |
| தாய் | மருதேவி | மருதாயி, மருதப்பன், மருதி |
| மகன் | பரதன் | பரத், பரதன் |

**வர்த்தமான மகாவீரர்**

| **உறவுகள்** | **பெயர்கள்** | **மக்கட் பெயர்கள்** |
|---|---|---|
| தந்தை | சித்தார்த்தர் | சித்தார்த், யோகசித்தார்த் |
| தாய் | திரிசலை | திரிவேணி |
| மனைவி | யசோதா | யசோ, யசோதா |
| மகள்கள் | அன்னோசனா | |
| | பிரியதர்சனா | பிரியதர்சன், |
| | | பிரியதர்ஷிணி, பிரியா |
| சகோதரர் | நந்திவர்தனன் | நந்தகுமார், நந்தினி |
| சகோதரி | சுதர்சனா | சுதர்சன், சுதர்சணி |

ஆகிய முழுப்பெயர்களில் முன், பின் ஒட்டுகள் இட்டுள்ளனர்.

## இஸ்லாமியத்தில் மக்கட் பெயர்கள்

'யாதும் ஊரே யாவரும் கேளீர்' என்னும் கணியன்பூங்குன்றனாரின் உயரிய சிந்தனையைப் பின்பற்றிப் புதுக்கோட்டை மாவட்டத்தில் பல சமயத்தவர்களும் வாழ்ந்து வருகின்றனர். இசுலாமியர்களும் இவர்களுள் அடங்குவர் என்பதை இங்குள்ள இசுலாமியப் பெயர்கள் புலப்படுத்துகின்றன.

### சமயத் தோற்றம்

மத்திய தரைக் கடலுக்கு வடக்கே இரண்டு கடல்கள் உள்ளன. ஒன்று ஏசியன், மற்றொன்று ஐயோனியன் கடல் ஆகும். ஐயோனியன் கடலுக்கு

கரையாக அமைந்துள்ள பகுதிகள் பாலஸ்தீனம், சிரியா, லெபனான், துருக்கி, சைப்பிரஸ், கிரேக்கம், ரோமானியம் ஆகியப் பகுதிகளில் அரபு மக்கள் பெரும்பான்மையாக வாழும் பகுதியாகும். இப்பிரதேசத்தில் இருந்து கீழை நாடுகளுக்கு வந்தவர்களை ஒரு காலத்தில் ஐயோனியர்கள் என்று அழைக்கப்பட்டனர். ஐயோனியர் என்ற பதமே காலப் போக்கில் யவனர் என மருவி வந்திருக்கிறது. “தமிழ் இலக்கிய மரபில் யவனம் ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்றாகக் கருதப்படுகிறது. அந்நாட்டவரே தமிழில் யவனர் என அழைக்கப்படுகின்றனர். அந்நாட்டையே மதுரைக் காஞ்சியில் வரும் ‘நனந்தலை தேசத்து’ என்னும் சொற்றொடர் சுட்டுவதாகக் கூறுவர்.”[201] இதனை,

**"விழுமிய நாவாய் பெருகி நீரோச்சுநர்**
**நனந்தலை தேஎத்து நன்க லனுயம்மா**
**புணர்ந்துடன் கொணர்ந்த புரவியோடனைத்தும்”[202] (மதுரைக்.321-322)**

என்பதன் வழி ஐயோனியரான அரேபியர் ‘யவனர்’ என்று அழைக்கப்படுவதன் மூலம் இஸ்லாம் தோற்றம் அறியப்படுகிறது.

## இஸ்லாம் தமிழ்நாட்டில் தோற்றம்

சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள இவ்வகைச் சான்றுகள் மூலம் அரபுமொழி பேசும் மக்கள் பழங்காலத்திலிருந்தே தமிழ்நாட்டுடன் வியாபாரத் தொடர்பு கொண்டிருந்தனர் என்பதுப் புலனாகும். இன்றைய இஸ்லாமியர்களின் மூதாதையர்களும், இஸ்லாத்தைப் பரப்பியவர்களும், வியாபாரம் பொருட்டு வந்தவர்களும் இவ்வராபியரே ஆவர். இஸ்லாம் இவ்வுலகில் தோன்றுவதற்கு முன்னர் சீனம் வரை சென்ற அறாபியர்கள். இஸ்லாம் பரவத்தலைப்பட்டதும் வள்ளல் நபி முகமது (சல்) அவர்களின் வளமான போதனைகளையும் வான்மறையையும் தத்தம் இதயங்களில் ஏந்திச் செல்லலாயினர். “இத்தகையோரின் முயற்சியால் கி.பி. ஏழாம் நூற்றாண்டு முடிவதற்குள் தமிழ்நாட்டிலும் இஸ்லாம் புகுந்துவிட்டது. நபிகள் நாயகம் (சல்) அவர்களின் தோழர்களான தமீமுல் அன்ஸாரி (றலி), அபிவக்காஸ் (றலி) ஆகியோரின் கல்லறைகள் தமிழ்நாட்டில் இருப்பது இஸ்லாத்துக்கும் தமிழ்நாட்டுக்கும் அப்போது இருந்த நெருங்கிய உறவை எடுத்துக்காட்டிக் கொண்டிருக்கின்றது.”[203] இஸ்லாமிய இறை நேசச் செல்வர்களான வலிமார்கள் ஆன்மீக வழிவகுத்த ஞானிகள் முதலாயினோர் தமிழ்நாட்டுக்கு வரத் தலைப்பட்டனர். அதன் பயனாக இஸ்லாம் தமிழ்நாடெங்கும் பரவலாயிற்று.

## இஸ்லாமியர் பற்றிய பிற பெயர்கள்

இஸ்லாம் மக்களும் அவர்களின் மூதாதையரான அரபு மக்களும் தமிழ் கூறும் நல்லுலகுக்கு வந்த பின்னர் பல பெயர்களால் அழைக்கப்பட்டனர். அவர்களை அழைக்க தமிழகம் பயன்படுத்திய சொற்கள் சோனகர், துலுக்கர், ராவுத்தர் என்பனவாகும்.

## சோனகர்

தமிழ்நாட்டிலும் ஈழ நாட்டிலும் வாழும் முஸ்லீம் மக்களின் மூதாதையர் பண்டமாற்று வணிகத்தில் ஈடுபடுவதையே பிரதான குறிக்கோளாகக் கொண்டு இங்கு வந்தனர். அகம், புறம் போன்ற சங்கத் தொகை நூல்கள் இதற்குச் சான்று பகர்ந்து கொண்டிருக்கின்றன. அவை,

**"பொன்னொடு வந்து கறியொடு பெயரும்"[204] (அகம்.149)**

என்றும்,

**"மனைக்குவைஇய கறிமூடையால்**
**கலிச்சுமைய கரைக்கலக்குந்து**
**கலந்தந்த பொற்பரிசும்**
**கழித்தோணியாற் கரைசேர்க்குந்த**
**மலைத்தாரமும் கடற்றாரமும்**
**தலைப்பெய்து வருநர்க்கீயும்**
**புனலங் கள்ளின் பொலந்தார்க் குட்டுவன்**
**முழுங்கு கடன் முழவின் முசிறி"[205] (புறம்.343:3-10)**

எனவும் பண்டமாற்று வியாபாரம் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. இங்கே கறிமூட்டைக்குப் பதிலாக பொன் தரப்படுகிறது. இந்தப் பொன் 'சோன' எனவும் வழங்கப்படுகிறது.

பொன் கொண்டுவந்தமையினால் தமிழக இஸ்லாம்களின் மூதாதையர் அப்பெயரால் அழைக்கப்பட்டிருக்கின்றனர். "சோன என்னும் சொல்லோடு உயர்திணைப் பலர்பால் விகுதியாக 'ஆர்' சேர்ந்தால் சோன+அர்-சோனவர் என வரும். அச்சொல்லோடு ஆண்பால் விகுதியாகிய அன் சேர்ந்தால் சோவன் என்றும் பெண் பால் விகுதி சேர்ந்தால் சோவள் என்றும் வரும். இங்கே உயர்திணை ஆண்பால், பெண்பால், பலர்பால் விகுதியும் வந்து புணரும்

பொழுது உடம்படு மெய்யாக வகரம் தோன்றுவதைக் காணமுடிகிறது."[206] பொன் என்னும் சோனம் நிறைய இருந்தமையாலும் அங்கிருந்து பொன் கொண்டு வரப்பட்டமையாலும் அந்த நாடு சோனகம் என அழைக்கப்படுகின்றது. அந்தச் சோனகத்தைச் சேர்ந்தவர்களே 'சோனகர்' என்று அழைக்கப்பட்டனர்.

இதனைக் கம்பர் தனது கம்பராமாயணத்தில் சோனகர் என்னும் சொல்லைத் தனியே கையாண்டுள்ளார். அவை,

**"ஆலையின் மலையிற் சாலி முளையினில் அமுத வாசச்**
**சோலையில் துவசரில்லில் சோனகர் மனையில்தூய"[207]**

**(கம்ப.அந்தரக.ஊர்தேரும் படலம் 112:207)**

என சோனகரின் மனையின் சிறப்பு விதந்தோதப்பட்டுள்ளது. சோனகர் என்பது தமிழில் கல்வெட்டுக்களிலும் பயன்படுத்தப்பட்டுள்ளது. "தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுக்களில் இச்சொல்லை கையாண்டு கொண்டுள்ளன. கி.பி.1014 ஆம் ஆண்டில் இராஜராஜ சோழ தேவனின் கல்வெட்டில் 'தஞ்சைப் புறம்படி ராஜவித்யாதரப் பெருந்தெருவில் இருக்கும் சோனகன் சாமூர்' என வந்துள்ளது."[208] இருப்பினும் 'சோனகன்' என்று சூட்டப்பட்ட சொல் அரேபியரை மட்டுமே சார்ந்ததாக இருந்திருக்கிறது. மேலும் 'பொன்னின்' சிறப்புக் கருதி 'பொன்' என்ற அடிச்சொல்லை இஸ்லாம் அல்லாத பிற சமயத்தைச் சார்ந்த மக்கட் பெயர்களிலும் ஊர்ப் பெயர்களிலும், தெய்யவப் பெயர்களிலும் மிகுதியாகக் காணப்படுகின்றது.

**சான்றாக:** பொன்னன், பொன்னையா, பொன்னீலன், பொன்னாட்சி, பொன்னாயி, பொன்னி, பொன்னம்மாள், பொன்னாத்தாள், பொன்னழகு, பொன்மலர்

என்று 'பொன்' என்ற சொல் மக்கட் பெயர்களில் ஆட்சி பெற்றுள்ளதைக் காணமுடிகிறது. 'பொன்' என்று ஊர்ப் பெயர்களையும் இம்மாவட்டத்தில் காண முடிகிறது.

**சான்றாக:** பொன்னமராவதி, பொன்னன்விடுதி, பொன்பேத்தி, பொன்குடிப்பட்டி, பொன்னனூர்

ஆகிய ஊர்ப் பெயர்களில் 'பொன்' என்ற சொல் கையாளப்பட்டுள்ளதை அறியமுடிகிறது. 'பொன்' தொடர்புடைய தெய்வப் பெயர்களையும் காணமுடிகிறது.

**சான்றாக:** பொன்னழகி அம்மன், பொன்னடியம்மன், பொன்மாரி, பொற்கொடியம்மன்

எனப் ‘பொன்’ என்ற சொல் அரேபியரின் வருகையால் மிகுதியாக ஆளப்பட்டிருக்கக்கூடும் என்பதனை இதன் மூலம் அறியமுடிகிறது.

## துலுக்கர்

துலுக்கர் என்ற சொல் இஸ்லாம் இனத்தவரை மட்டும் அழைக்கப் பயன்பட்ட ஒரு சொல். ஐயோனி தேசத்திலுள்ள துருக்கியில் இருந்து வந்ததனால் துருக்கர் என்பது துலுக்கர் என்று மருவி வந்துள்ளது. நெல்வேலி என்பது நெய்வேலி என்று மருவி இருப்பதைப் போன்று அமைந்துள்ளது. “பதினோராம் நூற்றாண்டில் அரசோச்சியவன் முதலாம் குலோத்துங்க சோழன். அச்சோழன் காஞ்சி மாளிகையில் நாற்பத்தெட்டுத் தேச மன்னர்கள் திறை அளந்தார்கள். அவ்வாறு திறை அளந்த நாற்பத்தெட்டுத் தேச மன்னர்களின் பட்டியல் ஒன்றினைத் தந்துள்ளார். இதனைச் செயங்கொண்டார் தமது கலிங்கத்துப் பரணியில் கூறியிருக்கிறார்”[209]. அவை,

**"வந்தவர் மத்திகர் மாருவர் மாகதர் மச்சர் மிலைச்சர்களே**
**சூத்திரர் குத்தர் இடக்கர் பிடக்கர் குருக்கர் துருக்கர்”[210] (கலிங்க.333)**

என துருக்கர் பற்றி குறிப்பிடப்பட்டுள்ளமையைக் காணமுடிகிறது. துருக்கர் என்பது துலுக்கர் என்றும் மாறி வருவதை, “கோவை மாவட்டத்தில் உள்ளது பாரியூர். அங்கே உள்ள கல்வெட்டில் பாண்டிய மன்னர் வீரபாண்டித் தேவர் வழங்கிய முற்றூட்டிற்கு நான்கு எல்லை குறிப்பிடும் பொழுது ‘துலுக்கன்பட்டி தென்மேற்கு’ எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.”[211] தாராபுரத்தில் உள்ள ஒரு கல்வெட்டில், **“துலுக்கர் பள்ளியாகிய ஸ்தானம் தெரியாமலாகிவிட்ட”[212]** என்றும், **“முன்னாள் ராஜராஜன் ஸ்ரீசுந்தரபாண்டின் தேவர் துலுக்கருடன் வந்த நாளையில்”[213]** என்றும், **“துலுக்கர் ராச்சியமாய் பல சேமங்கள் தப்பித்து”[214]** என்ற செய்தியை விளம்புரம் திருக்களர் கல்வெட்டும் தெரிவிக்கிறது. ‘துருக்கர், துலுக்கர்’ என்னும் இரண்டு சொற்களும் இஸ்லாம் மக்களைக் குறிப்பிட மாறிமாறிப் பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணமுடிகிறது. ‘துருக்கர்’ என்னும் சொல்லைக் குறிக்க இன்றைய ஆந்திர மாநிலத்தில் உள்ள தெலுங்கில் எழுதப்பட்ட பனகல் கல்வெட்டில் துலுஷ்கர் என்னும் சொல் பொறிக்கப்பட்டுள்ளமை ஒப்பு நோக்கற்பாலது. “தமிழ்ச்சங்க தலவரலாற்று

நூலாக அமைந்துள்ளது. அந்நூலில் பாண்டியர் ஆட்சி மறைந்ததை அடுத்து கி.பி.1324 முதல் கி.பி.1378 வரை நிலைத்த இஸ்லாம் சுல்தான் ஆட்சியை ‘துலுக்காணியம்’ என்னும் புதுச் சொல்லால் குறிப்பிடுகிறது.”[215] என்பதனை அறியமுடிகிறது. ‘துலுக்கன்’ என்ற சொல் இஸ்லாம் தவிர மற்ற இனங்களில் பட்டப் பெயர்களாக மட்டுமே வழங்கப்பட்டுவருகிறது. முஸ்லீம் இனத்தவர் போல உடையனிபவர்களுக்கு துலுக்கன், துலுக்கச்சி என்று அழைக்கப்படுவதை இம்மாவட்ட மக்கட் பெயர்கள் வழி அறியமுடிகிறது. ‘துலுக்கர்’ என்ற சொல் இடப்பெயருக்கும் வழங்கப்படுகிறது. அவை,

துலுக்கன் குண்டு, துலுகன் கேணிவயல் என்பதன் மூலம் அறியமுடிகிறது. மலர்களின் பெயர்களிலும் காணமுடிகிறது. அவை,

துலுகன் செவ்வந்தி, துலுக்கன் தாடிப்பூ என அழைப்பதன் மூலம் துருக்கர் என்ற சொல் வழங்கி வந்துள்ளமையை அறியமுடிகிறது.

## ராவுத்தர்

தமிழ்நாட்டில் இன்று வாழும் இஸ்லாம் மக்களின் மூதாதையரைக் குறிப்பிட பயன்படுத்தப்பட்டது. ‘ராவுத்தன்’ என்ற சொல் தமிழ் இலக்கியத்திலும் இடம் பெற்றுள்ளது. பெரும்பற்றப் புலியூர் நம்பி பாடிய திருவாலவாயுடையார் திருவிளையாடல் புராணத்தில் உள்ளது. அவை,

**“துய்ய பேருலகுக் கெல்லாம்**
**துலங்கிய இராவுத்தராயன்”[216] (திருவிளை.)**

என்றும்,

**“இன்னெறி மன்னர் மன்னன் இனிமை**
**கூர்ந்து இரவுத்தற்கு நன்மைகூர்வரிசைத் தூசு நல்குமென்று”[217]**
**(திருவிளை. )**

என்பதன் வழி அறியமுடிகிறது. அருணகிரிநாதர் கந்தர் அலங்காரம், கந்தர் கலிவெண்பா என்பனவற்றில் முருகப் பெருமானைக் கூறியுள்ளார். அவை.

**“சூர்க் கொன்ற ராவுத்தனே**
**மாமயி லேறும் ராவுத்தனே”[218] (கந்தர்கலி. )**

என்பதன் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது. முஸ்லீம்களைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்ட ராவுத்தன் என்னும் சொல் காலப்போக்கில் தமிழ் சொல்லாகவே மாறிவிட்டதைக் காணமுடிகிறது. இம்மாவட்டத்தில் 'ராவுத்தன்' என்ற சொல்லை இஸ்லாம் இனத்தவர் தம் பெயர்களுக்குப் பின்னால் இட்டுக் கொள்வதை இன்றும் காணமுடிகிறது.

**சான்றாக,**

பிச்சைக்கன்னி ராவுத்தர்

அல்லாபிச்சை ராவுத்தர்

சையது ராவுத்தர்

சுலைமான் ராவுத்தர்

அப்துல் ரஹீம் ராவுத்தர்

போன்ற பெயர்களைச் சுட்டலாம். ராவுத்தராயன் என்ற சொல்லில் 'ராயன்' என்ற சொல் மட்டும் குறிப்பிட்ட தலைவரைக் குறிக்கப் பயன்பட்டிருப்பதைக் அறியமுடிகிறது. புதுக்கோட்டை மாவட்டம் தனியரசாக இருந்த நிலையில் அவற்றைத் தொண்டைமான்கள் ஆட்சி செய்து வந்தனர் அம்மன்னர்களின் பெயருக்குப் பின் 'ராய' என்ற அடைமொழி வந்துள்ளதை நினைவு கூறும் வண்ணம் உள்ளது.

**சான்றாக:** ரகுநாதராயத் தொண்டைமான், விஜயரகுநாதராயத் தொண்டைமான், ராஜாரகுநாதராயத் தொண்டைமான், ராஜா ராமச்சந்திர ராயத் தொண்டைமான், மார்த்தாண்டபைரவ ராயத் தொண்டைமான், ராஜகோபால ராயத் தொண்டைமான்.

இத்தகைய பெயர்களில் உள்ள 'ராய' என்ற சொல் மட்டும் ஏனைய சமயத்தவர் பெயர்களிலும் காணமுடிகிறது. அவை ராயப்பன், ராயப்பன் குமார், ராயப்பதேவர், ராயப்பக் கவுண்டர், ராயப்பக் கோனார், ராயப்பச் செட்டியார் போன்ற இனத்திலும் மக்கட் பெயர்களாக 'ராய' என்ற சொல் பயன்படுத்தப்படுவதை ஆய்வின் வழி அறியமுடிகிறது.

## லெப்பை

கடவுளை வணங்கும் பொழுது வழிபாட்டுக் கோசங்கள் கூறுவது உண்டு. அவை ஒவ்வொரு கடவுளுக்கும் வேறுபடும் சிவனுக்குரிய கோசம் ஓம்

நமச்சிவாய நமஹ என்றும், விஷ்ணுக்குரியது கோவிந்தோ.. என்றும், ஐயப்பனுக்குரியது சாமியேய்! சரணமய்யப்பா! என்றும், முருகனுக்குரியது அரோகரா என்றும் உள்ளதைப் போன்று ஹஜ் கடமையை நிறைவேற்ற மக்கா மாநகரத்திற்கு செல்பவர்கள் எப்போதும் உச்சரித்துக் கொண்டிருக்கும் சொல் ‘அல்லாஹீம் மலப்பைக்க’ என்பதாகும். “இதோ நான் உனது சேவையில் என்பது அதன் பொருள்.”[219] தமிழ்நாடு, இலங்கை போன்ற நாடுகளில் வாழ்ந்த இஸ்லாம்கள் தமது பெயர்களுக்குப் பின்னால் அல்லது முன்னால் ‘லெப்பை’ என்னும் சொல்லைப் பயன்படுத்தலாயினர்.

காலப்போக்கில் தமிழ்நாட்டில் லப்பை என்னும் சொல் ‘பின் தங்கிய இஸ்லாம்கள்’ எனக் கருதப்படும் இனத்தவர் என்று பொருள்பெற்றுள்ளது. அரசு இசைவு பெற்ற ஒரு சொல் “தமிழ்நாட்டிலும் இலங்கையிலும் முஸ்லீம் பள்ளிவாசல்களில் மார்க்கக் கடமைகளை முன்னின்று நடத்துபவர்களும் குர்ஆன் பள்ளிக்கூடங்களில் ஓதிக் கொடுப்பவர்களும் பெரும்பாலும் லெப்பை என அழைக்கப்பட்டனர். இவர்கள் லெவ்வை என்றும் அழைக்கப்படுவதுண்டு. லெப்பை என்பதின் பலர்பால் லெப்பைமார் எனப்பட்டது.”[220] இதனை,

**"சொல்லவே நால்வேதம் லெப்பைமார்கள்**
**சொற்பெரிய உலகத்தில் கர்மிதன்னை**
**மெல்லவே ஆண்டனைக் காட்டுமென்பார்”[221]**
**(இ,த,இ,வ, யாகோபு வகாரக்களங்கு என்னும் வாதவைத்தியம் 300:79)**

என்பதன் வழி அறியமுடிகிறது.

### சமயம்

இம்மதத்தை இஸ்லாம் மதம் என்று சொல்லுவதுண்டு. இஸ்லாம் என்றால் பக்தி என்றும் அர்த்தம். இவர்களின் வேதத்திற்கு குர்ஆன் என்று பெயர். இது ஜிப்ரையில் மூலமாகக் கிடைத்ததால் அதை தேவவாக்யம் என்பர். இந்த இஸ்லாம் மதத்தில் விசுவாசிக்கத் தகுந்தது இரண்டு வகைப்படும் ஒன்று ‘இமாம்’, மற்றொன்று ‘தீன்’ என்பதாகும். அவற்றுள் விசுவசிக்கத் தகுந்த இமாம் ஆறு வகைப்படும். அவை,

1. அல்லா (தேவனிருக்கின்றான்) - நிஜமான அல்லா என்னும் கடவுளைத் தவிர வேறொருவனில்லை அல்லாஹ் ஹீராப் என்றும் அவனுக்குப் பெயருண்டு.

2. தேவதூதர்கள் இருக்கின்றனர், ஜிப்ராயேல், மிகாயேல், அஸ்ராயேல், இஸ்ரபேல் என்னும் தேவ தூதர்கள் உள்ளன. ஹிப்லீஸ் என்னும் சைத்தான் இருக்கின்றது. ஒவ்வொரு மனிதருடனும் இரண்டு தூதர்களிருந்து புண்ணிய பாவங்களை எழுதிக் கொண்டிருப்பர்.

3. தௌராத்து, ஜபூரு, இஞ்சிலு, குர்ஆன் என்பன வேதப் புத்தகங்கள்.

4. நபிபுருஷர்களிருக்கின்றார்கள் 2,24,000, நபீக்களிருக்கின்றனர், அவர்களில் ஆதாம், நோவா, ஆப்ரகாம்மோசே, இசா, முகமத் என்பவர்கள் சிரேஷ்டர்கள்

5. இறந்தசரீரம், ஏழு மோஷலோகங்களும் ஏழு நரகங்களும் உண்டு புண்ணிய பாவங்கள் தராசில் வைக்கப்பட்டு நிறுத்தறியப்படும்.

6. ஜீவித்து நியாயத் தீர்ப்பை அடையும். உலக முழுதும் நஜீப் என்னும் விதிப் பிரகாரம் நடந்து வருகின்றது. ஆசரணக்கிரமமான தீன்: அல்லாஹ் தஆலா உடைய கட்டளைப்படியும் நபி அவர்களின் வழிமுறைப்படியும் வாழ்வதற்குத் தீன் என்று கூறப்படும். “நபி அவர்கள் கூறியுள்ளார்கள்: இஸ்லாமிய மார்க்கம் மிகவும் எளிதானது. அல்லாஹ் தஆலா அனைத்து மனிதர்களுக்கான வெற்றியைத் தீனில் தான் வைத்துள்ளார். மனிதர்களுக்குத் தண்ணீர் எவ்வளவு அவசியமோ அது போன்று மனிதனுக்குத் தீன் என்பது அடிப்படைத் தேவையாகும். ஆகையால் மார்க்கத்தை நல்லமுறையில் கற்று அதன் படி வாழ வேண்டும். ஒவ்வொரு மனிதனும் செயல்பட ஏதுவாக அல்லாஹ் மார்க்கத்தை எளிதாக்கி வைத்துள்ளார்.

மார்க்கத்தில் இறையியல், வணக்கவியல், வணிகவியல், வாழ்வியல், பண்பியல் என்பதாகும். அவை,

இறையியல் - ‘அல்லாஹ் ஒருவன்’ என்றும் முகம்மது நபி அவர்கள் ‘அல்லாஹ்வின் தூதர்’ என்று நம்புவது.

வணக்கவியல் - தொழுகை, நோன்பு, ஜகாத், ஹஜ் போன்றவை.

வணிகவியல் - கொள்முதல், விற்பனை, வாடகை மற்றும் கொடுக்கல், வாங்கல் எவ்வாறு செய்வது என்பன.

வாழ்வியல் - தாய், தந்தை, சகோதரன், சகோதரி, நண்பர்கள், உறவினர்கள் மற்றும் அண்டை வீட்டார்களோடு எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பன.

பண்பியல் - நல்லவராக இருப்பது உண்மையாளராக இருப்பது என்பன.

எப்பொழுது இந்த ஐந்து அம்சங்களும் நமது வாழ்க்கையில் வருமோ, அப்பொழுது அல்லாஹ் வாக்களித்தபடி நமக்கு வெற்றி கிடைக்கும்."[222] என்கிறது.

## இஸ்லாமியக் கடவுள்கள்

கடவுளின் தன்மை, பண்புநலன்கள் யாவும் இஸ்லாமிய இறையியலில் கூறப்படுகின்றன. அவை,

'லா இல்லா இல்லல்லாஹ்'

அல்லாஹ் ஒருவனே நாயகன். அவனின்றி வேறொன்றும் இல்லை என்பதே இம்மதத்தின் கொள்கை ஆகும். இதனை,

**"கடுகுக்குள் எழுகடலை யிட்டு**
**அணுவில் அகல்வெளி யைப்பூட்டி**
**கடுகுக்குள் கயாத்துல கைபார்**
**கடலையே அடைக்கும் நாயன்**
**இடமென்று நிலைமை யில்லான்**
**எங்குமே யவனே யாக**
**இடமெல்லாம் நிறைந்த நாயன்**
**ஏகனே ஒருவன் தானே"[223]** **(இ,த,இ,வ, திரு.நெறி.நீதம்.பா.4:1:21)**

என்றும்,

**"தானொரு உருவில் லாதான்**
**தாய்தம ரொருவ ரில்லான்**
**ஆணில்லான் பெண்ணு மில்லான்**
**ஆணும்பெண் ணவனே யுள்ளான்**
**ஈனமொன் றணுகி டாதான்**
**யாவர்க்கு மூப்பா முன்னோன்**

**ஆவை னிறைவ குத்த**

**ஆலங்க ளனைத்தும் தானே"[224] (இ,த,இ,வ, திரு.நெறி.நீதிம்.பா.4:1:14)**

என்றும்,

**"உலகத்தில் பசி தெளிக்க**

**உணவினை வகுத்தான் வல்லோன்"**

என்றும் பீர் முகம்மது புலவர் தம் உரையில் கூறியுள்ளதனை அறிய முடிகிறது.

அவருக்கு வழங்கப்பட்டுள்ள திருநாமங்கள் ஆயிரத்திற்கு மேற்பட்டவையாகும். அவற்றுள் குறிப்பிடத்தகுந்த தொண்ணூற்றொன்பதும் இஸ்லாமியர்களின் கடவுள் நம்பிக்கைக்கு அரண் செய்கின்றன. இவை இரண்டு வகையில் உள்ளன. ஒன்று மகிமையான நாமங்கள் மற்றொன்று பயங்கரமான நாமங்கள் ஆகும். இவை ஏழு பண்புகளில் கூறப்படுகின்றன. அவை ஜீவன், அறிவு, சக்தி, சித்து, கேட்டல், பார்த்தல், பேசுதல் ஆகியவை ஆகும்.

அவர் நாமம் தொழுவதே தம் வாழ் நாள் கடமைகளாக வகுத்துள்ளனர். "ஒவ்வொருவரினதும் முயற்சி நிறைவேற அல்லாஹ்வை மனத்தில் எண்ணவேண்டும். தாம் கூறியவற்றைச் செய்து பார்த்து அதில் சித்தி எய்த அல்லாஹ்வை நினைக்க வேண்டும்."[225] என்பதனை யாக்கோப்பு சித்தர் வழி அறிய முடிகிறது. இதனை,

**"வண்மையாய் அல்லாவை மனதில் எண்ணி**

**வடிவாக எல்லாமுஞ் சித்தியாக"[226]**

**(இ,த,இ,வ, யாகோபு அண்மை சித்தர் ப. 300:69)**

என்றும்,

**"அதனையெடுத்து அல்லாவைத் தொழுது போற்றி"[227]**

**(இ,த,இ,வ, யா.சித்.பா., யா.அண் 300171)**

என்றும் கூறுவர். இஸ்லாம் மதக் கடவுளின் நாம மேன்மையை அறியமுடிகிறது.

## அல்லாஹ்வின் திருநாமங்கள்

அல்லாஹ்வின் திருநாமங்கள் பல உள்ளன. அவற்றுள் மிக அழகியவை தொண்ணூற்று ஒன்பது (99) ஆகும். அதனை முகமதியர் பாராயாணம் செய்து

ஐந்து வேளைத் தொழுகையிலும் கூறுவர். "அஸ்மாவுல் **ஹீஸ்னா:** அல்லாஹீ தஆலாவின் அழகிய பெயர்களுக்கு 'அஸ்மாவுல் ஹீஸ்னா' என்று சொல்லப்படும். அல்லாஹீ தஆலாவிற்கு அழகான பெயர்கள் இருக்கின்றன. அவற்றைக் கொண்டு அவனை நீங்கள் அழையுங்கள் ஹதீா: நபிகள் நாயகம் அவர்கள் கூறினார்கள். சந்தேகமின்றி அல்லாஹீ தஆலாவிற்கு 99 பெயர்கள் இருக்கின்றன. யார் அப்பெயர்களை மனனம் செய்வாரோ, அவர் சுவனம் செல்வார். அல்லாஹ்வின் தன்மைப் பெயர்களின் மிக வல்லமையும், சக்தியும் உள்ளன. மேலும் அப்பெயர்களை மனனம் செய்வதில் மிகவும் சிறப்புகள் இருக்கின்றன. மேலும் அப்பெயர்களைக் கூறி துஆ கேட்டால் அங்கீகரிக்கப்படுகின்றன."[228] அவர்கள் வைத்திருக்கக் கூடிய வழிபாட்டு மாலையில் தொண்ணுற்றி ஒன்பது முத்துக்களே இருக்கும் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

அதில் உள்ள ஒவ்வொரு மணியிலும் அல்லாஹ்வின் திருநாமங்களைக் கூறுவர். அவற்றின் உட்பொருளான நீதி, வல்லமை, நிறைவு போன்றவற்றைக் கூறுவனவாகும். அவை, "ரஹீக், மாலிக், ஹீயூட்டஸ், சலாம், முமின், முகைமின், ஆஷிக், ஜாபர், முதாகபீர், ஹாலிக், பரிமுஷவிர், ஜாபர், குவாஹ்கர், வாஹ்ஹாப், ராஷிக், பாத்திமா, அலிம், ஹியூபிஸ், பாஷித், ஹாபிஸ், ரபிமுயிஸ், அஸ்சயி, பஷிர், ஹாகம், அல்ஆடில், லத்தீப், கபீர், ஹலிக், அஜிம், க.ஃபீர், ஷாகுர், அலி, காபீர், ஹ.ஃபீஸ், முஹித், ஹசீப், ஜாலில், கரீம், ரஹிப், முஜிப், வஸி, ஹகீம், வடுத், மஜித்பைய்த், ஜாகிர், ஹாக், வகில், குவி, மதீன், வலி, ஹமீது, முஸ், மு.ஃதி, முனைது, முகை, முகம்மது, ஹாயி, ஹியூம், வஜித், மஜித், வஹித், அஹத், சமாத், காதர், முக்தாதீர், முகைதீன், அஹ்கீர், அவழ், ஆஹீர், ஜாகிர், பாத்தின், வாளி, மு.ஃதாஅலி, பார், நவாப் முன்தகிம், அ.ஃபூவ், ரா.ஃப், மாலிக் உல் முலிக், உல்-ஜால்-இஉல்-.ஃராம், முஜித், ஜாம்ஜ, ஹானி, முஹனி, மான்னைய், அ.ஃதார்"[229] போன்ற நாமங்கள் அல்லாஹ்வின் சிறப்புப் பெயர்களாக உள்ளன.

அல்லாஹ்வின் பெயர்களை இம்மாவட்டத்தில் உள்ள இஸ்லாம் சமயத்தவர் பெயர்களில் காணமுடிகிறது.

**சான்றாக:** ரஹீம், மாலிக், சலாம், ஆஷிக் ஜாபர், ரபிஸா, லத்தீப், கபீர்ஹான், அஜ்மீர், ஷாகுல், மஜித், ஜாகிர் உசேன், ரா.ஃபியா, ரா.ஃபிக், அலி, முகம்மது, முக்தாகீர், காதர்பீவி, மாலிக், நவாப், ஹனி.ஃபா போன்றவையாகும்.

## ஆதிமுன் மன்றாடுபவர்

ஆதிபிதா ஆதாம் நபி (அலை) அவர்கள் முதற்கொண்டு ஈசா ரூஹுல்லா (அலை) அவர்கள் ஈறாக உள்ள அனைத்து நபி மார்களுள் இஸ்லாம் மார்க்கத்தை இவ்வுலகில் பூரணமாக்கினர். அண்ணலெம் பெருமானார் முஹம்மது (சல்) அவர்களே ஆவார்கள். அதனால் "ஆலிப்புலவர், நாயகம் (சல்) அவர்களை இறைத்தூதர்களிலேயே தலையாயர் எனக் குறிப்பிட்டுள்ளார்."[230] என்பர்.

அத்துடன் இறைத் தூதர்களுள் தங்களுடைய உம்மத் (தம்மைப் பின்பற்றுபவர்) தினரின் நன்மைய நினைவு கூர்ந்து அல்லாஹ்விடத்து சபாஅத்து (மன்றாட்டம்) செய்பவரும் நபி (சல்) அவர்களே ஆவர். இதனையே 'ஆதிமுன் மன்றாடுவர்' எனச் சுட்டியுள்ளார். குறைஷிப் படை தோல்வியையே பிரதானமாகக் கொண்ட நிலையில் முகமது நபி (சல்) அவர்கள் தலைமைப் பொறுப்பேற்று. கைசுப் படையைத் தோல்வியுறச் செய்தார். அதன்மூலம் குறைஷிப் படைக்கு இஸ்லாம் மதம் பரப்புதல் நிகழ்த்தப்பட்டது. இதனால் இஸ்லாத்தை ஏற்காத குறைஷிப் படை முகமது (சல்) அவர்களை மக்க மாநகரில் இருந்து வெளியேற்றினர். இருந்த போதிலும், மதீன மாநகருக்குச் சென்று இஸ்லாத்தின் கொள்கைகள் பரப்பப்பட்டன. எனவே இஸ்லாத்தின் ஆதிமுன் முகமது நபி (சல்) அவர்களே என்பதன் மூலம் அறியப்படுகிறது. இதன் பயனாலே இஸ்லாம் சமயத்தவர் தம் குழந்தைகளுக்கு முகம்மது நபி (சல்) அவர்களின் பெயர்களை இட்டு வருகின்றனர். தனிப் பெயராகவும், இறைவன் பெயர்கள் சேர்த்தும் மக்கட் பெயர்களில் காணப்படுகிறது.

**சான்றாக:** முகம்மது, முகமது உசேன், முகமது சுலைமான், முகம்மது ரபீக், முகம்மது அன்ஸாரி, முகம்மது ஹுசேன், ரஸாக் முகம்மது, பீர்முகம்மது, நபிஸா, நபிஸாபேகம், நபிஸா பானு, நபி (சல்) ஆகியன.

## நபி (சல்) அவர்களின் வேறுபெயர்கள்

நபி அவர்களின் வேறு பெயர்களும் உள்ளன. அவை,

அல்அமீன் (நம்பிக்கையாளர்)

அஸ்ஸாதிக் (உண்மையாளர்)

போன்றவையாகும். இவை தொடர்பான மக்கட் பெயர்கள் வருமாறு

அமீன்துல்லா, ஸாதிக் பாட்ஷா, ஸாதிக் போன்ற முன், பின் ஒட்டுப் பெயர்களைக் காணமுடிகிறது.

## நபி (சல்) உறவுகளின் பெயர்களில் மக்கட் பெயர்கள்

இஸ்லாம் சமய மக்களுக்காக இறைவனிடம் நேரடியாக மன்றாடுபவர் என்பதாலும் இறைவன் நபி (சல்) அவர்களை வணங்கியவர்கள் தம் வாழ்நாள் இறுதியில் சொர்க்கப் பதவியை அடைவர் என்று குர்ஆன்னில் இடம்பெற்றுள்ளதால் இம்மாவட்ட இஸ்லாம் சமய மக்கள் தங்கள் குழந்தைகளுக்கு நபி தொடர்பாகவும் அவரின் உறவுகள் தொடர்பாகவும் உள்ள பெயர்களை வைத்துள்ளனர். சீறாபுராண ஆசிரியர் நபி (சல்) தலைமுறையினர் பெயர்களைத் தம் நூற்பாவில் கூறியுள்ளார். அவை,

**"மக்க மூர்கிலா பருள்குசை யப்துல் முனாபுக**
**கக்க மானஹா சீமுத லப்துல்முத் தலிபு**
**தக்க மன்னவர் மைந்தரி லப்துல்லா தவத்தான்**
**மிக்க னென்பெயர் முகம்மது வென வளம்பினரே"[231]**

**(இ,த,இ,வ,இ.த.இ.வ. சீறா.ஊசா.பா.8)**

என்பனவாகும். நபி (சல்) தலைமுறைப் பெயர்களான,

**மூதாதையர் கிலாப்**
↓
மகன் குசை
↓
மகன் ஹாசீம்

மகன் அப்துல்முத்தலிபு
↓
மகன் அப்துல்லா
↓
மகன் முகம்மது நபி

எனத் தலைமுறைப் பெயர்களைக் கூறியுள்ளார். இப்பெயர்களில் மக்கட் பெயர்களும் காணப்படுகின்றன.

**சான்றாக:** முகம்மது குசைன், அப்துல்ஹாசீம், அப்துல் முத்தலிபு, முகம்மது அப்துல்லா, முகம்மது

போன்றவை.

## நபி (சல்) மனைவிகள்

நபி (சல்) அவர்களுக்குத் திருமணம் புரியும் போது வயது இருபத்தைந்து ஆண்டுகள் இரண்டு மாதங்களும் இரண்டு நாட்களும் என்று குறிப்பிடப்படுகிறது. இதனை,

**"திண்டிறற் புவியின் முகம்மது தமக்குத்**
**திருவய திருபத்தைந் தினின்மேற்**
**கண்டதிங் களுமோ ரிரண்டுநா ளிரண்டிற்**
**கனகநாட் மவர்கள்கண் களிப்ப**
**வெண்டிசை முழுதுந் திருப்பெயர் விளங்க**
**விருநில மணிக்க கதீஜாவை**
**வண்டுறை மரவச் செழுந்தொடை புனைந்து**
**வரிசைமா மணம்பொருந் தினரே"[232]**

**(இ.த.இ.வ. சீறா.மணம்புரிபடலம்: பா.117)**

தமது இருபத்தைந்தாம் வயதில் கதீஜா அம்மையாரை மணந்து நான்கு பெண் குழந்தைகளையும் மூன்று ஆண் குழந்தைகளும் பெற்றெடுத்துள்ளார். பின் ஆயிஹா, ஹப்ஸா, ஸெயினப் போன்ற பதினோரு மனைவிகளையும் திருமணம் புரிந்து பொருட் செல்வத்தோடு வாழ்ந்து வந்திருக்கிறார். இவர்கள் தொடர்பாகவும் மக்கட் பெயர்களைக் காண முடிகிறது.

**சான்றாக:** கதீஜா பானு, கதீஜா பேகம், ஹப்ஸியா பேகம், ஹப்ஸியா, ஸெயிலாணி, ஸெயிலா பானு, ஆயிசா பானு

இவற்றுள் முன், பின் ஒட்டுக்கள் இணைத்து வைத்துள்ளதை மக்கட் பெயர்களின் வழி அறியமுடிகிறது.

## நபி (சல்) குழந்தைகள் பெயர்களில் மக்கட் பெயர்கள்

கதீஜா அம்மையார் முதன் முதலில் ஸயினப் என்னும் பெண் குழந்தையைப் பெற்றெடுத்துள்ளார். அதனை,

**"பெருகுமிள மயில் கதீஜா ஸயின**
**பெனம் பசுங்கிளியைப் பெற்றா ரன்றே"[233]**

**(இ.த.இ.வ. சீறா.க/பத்துல்லா படலம்)**

அடுத்ததாக றுக்கையா அம்மையாரையும், உம்முகுல்தூம் அம்மையாரையும் ஈன்றுள்ளார். அதனை,

**"குயின் மொழி றுக்கையாவை யீன்றும்**
**முக் குல்தூமை யீன்று"[234] (இ.த.இ.வ. சீறா.க/பத்)**

என்பதன் மூலம் அறியலாம். நான்காவதாக பாத்திமா, அம்மையார் இப்பூவுலகத்திலுள்ள பெண்களுக்கும் சுவர்க்கலோகத்தில் உள்ள பெண்களுக்கும் எந்நாளும் அறம் சென்று விளங்க பாத்திமா நாயகி (நபி) அவர்கள் பிறந்தார்கள் என்று க.ஃபத்துல்லா வரலாற்றுப் படத்தில் உள்ள மூன்றாம் செய்யுளில் இவ்வாறு விவரிக்கப்பட்டுள்ளது.

## ஆண்பிள்ளைகள்

நபி அவர்களின் ஆண் பிள்ளைகளான காசீம், தையிப், தாகிர் என்பவர்களைப் பெற்றெடுத்தமை பற்றி

**"செயிரறநா லாவதிலாண் பிள்ளைகா சீமெனவோர்**
**நயமுறப்பின் தையிபுபெனுஞ் சேயீன்றுதாகிறையு நல்கினாரே"[235]**

என்பதன் மூலம் அறியமுடிகிறது. இவர்கள் தொடர்பாகவும் இம்மாவட்ட இஸ்லாம் சமயத்தவர் பெயர்களில் காணமுடிகிறது.

**சான்றாக:** குல்தூம் பேகம், பாத்திமா பேகம், பாத்திமா பானு, காசீம், அயூப், தாகிர் உசேன், தாகிரா பானு

போன்ற பெயர்களை அறியமுடிகின்றது.

## நபி (சல்) அவர்களின் அடியார்கள் (கலீபாக்கள்)

நபி (சல்) அவர்களின் இறைக் கருத்துக்களை ஏற்க மறுத்த குறைஷி இனத்தவரை அடுத்து தனது உறவுகளான இருமாமன்கள், இருமருமகன்கள் முதல் அடியார்களாக காட்சியளித்தனர். இதனை,

**"மக்கமா நகரில் வள்ளல் முகம்மதர்**
**இருபதத் தையும் போற்றி**
**மாமரு மிருபேர் மருமக மிருபேர்**
**இருபதத்தையும் போற்றி"[236] (இ.த.இ.வ. திருநெறிநீதம்: 4)**

எனும் பாடல் சுட்டுகின்றது.

### அடியார்கள் (கலீபாக்கல்)

மாமனார் - ஆபூபக்கர்(றலி) - (புதல்வி ஆயிஷா)

மாமனார் - உமறு கத்தாப் (றலி) - (புதல்வி ஹப்ஸா)

மருமகன் - உதுமான் இப்னு அப்பான் (றலி) (மகள் - றுகைய்யா, உம்முகுல்தூம்)

மருமகன் - அலி இப்னு அபூதாலிப் (றலி) (மகள் - பாத்திமா)

என்ற பெயர்களை முன், பின் ஒட்டுக்கள் இட்டுப் பல்வேறு பெயர்களைக் காணமுடிகிறது.

**சான்றாக:** ஆபூல் கலாம், உமறுதீன், உமறு முகம்மது, அபூதாகீர், முகமது அலி போன்றவை.

### சொர்க்கம் தொடர்பான பெயர்கள்

ஒளியால் படைக்கப்பட்ட படைப்புக்கு 'மலக்குகள்' என்று கூறப்படும். மலக்குகளின் எண்ணிக்கை அல்லாஹ்வைத் தவிர வேறு யாருக்கும் தெரியாது. அதில் நான்கு மலக்குகள் குறிப்பிடத் தகுந்தவர் ஆவார். "ஹழ்ரத் ஜிப்ரயீல் ஹழ்ரத் மீகாயில், ஹழ்ரத் இஸ்ரா.்.பீல், ஹழ்ரத் இஜ்ராயீல்"[237] ஆவர்.

இத்தகைய மலக்குகள் சொர்க்கத்தில் காணப்படுவார்கள். சொர்க்கம் ஏழு அடுக்கு விண்ணையும், ஏழு அடுக்கு மண்ணையும் கொண்டு விளங்கக் கூடியதாகும். அத்தகைய சிறப்பு வாய்ந்த சொர்க்கத்திற்குப் போவதற்கு முகம்மது நபி அவர்களுக்கு இறைவன் கட்டளைக் கிடைக்கப்பெற்றது. அங்குச் செல்வதற்கு மிகுராஜ்ஏணி மலக்குகளால் கொண்டு வரப்பட்டது. ஏணியின் மொத்தப் படிகள் ஐம்பத்து ஐந்து (55) ஆகும். அவற்றில் படிகளின் தொலைவு விரைவாகச் செல்லக்கூடிய பரியின் வேகத்தில் 40 ஆண்டு செல்லக்கூடியதாகும்.

**"ஏணித்திரு நிலைபொன்னதி னிலங்கும்பல மணிகள்**
**சேணுற்றிடு மதனின்படி செப்பும்பதி னோரைந்**
**தேணிப்படி யொன்றொன்றினி னிடையே செலுதூரங்**
**கோணத்திடை தேசிப்பரி கொடு நாற்பது வருடம்"[238]**

**(இ.த.இ.வ. மிகுராசு மாலை:184)**

என்பதனை உணரமுடிகிறது. சொர்க்கத்தில் உள்ள படித்தங்களில் நடுநிலையாக இருப்பது “ஜன்னத்துல் பிர்தௌஸ்” என்பதாகும். இதனை,

**"வல்லோ னுடைய மலக்காகு மன்னவர்க**
**ளெல்லோருஞ் சொர்க்கத் தியல்பாம் பிருதவுசின்**
**மெல்லா யிருக்கும் விறலேணி தன்னை யினை**
**யில்லா னருளா லினிதா யிருக்கினரே”[239]**

**(இ.த.இ.வ. மிகுராசு மாலை:182)**

என்ற பாடல் உணர்த்துகின்றது. ஒவ்வொரு படியிலும் வானவர்களைச் சந்தித்ததாக நபி(சல்) அவர்கள் கூறியுள்ளார். அவற்றை “இருபத்தி நான்காம் படியில் றக்குத்தாயீலையும், இருபத்தி ஏழாம் படியில் மன்சாயீலையும் இருபத்தொன்பதாம் படியில் பறுக்கியாயீல் என்றும், முப்பத்தியொன்றாம் படியில் ஜறுசாயிலையும் முப்பத்தி மூன்றாம் படியில் ஜெபுறாயீல் என்பவரும் பல்லாயிரக்கணக்கான வானவர்களுடன் அண்ணலெம் பெருமானார் நபிகள் நாயகம் (சல்) அவர்களை எதிர்கொண்டு வரவேற்று சொர்க்கத்தின் பல்வேறான இயல்புகள் பற்றியும் எடுத்துரைத்தனர்.”[240] என்பதனை உணரமுடிகிறது.

அளவற்ற அருளாலனும் நிகரற்ற பண்பாளனுமாகிய அல்லாஹ்வின் நாமத்தை நினைத்து, முகம்மது நபி (சல்) அவர்களின் வாழ்க்கை முறைப்படி வாழ்ந்தால் மனிதர்களாகிய அனைவரும் சொர்க்கம் செல்ல முடியும் என்பதனை இதன் மூலம் அறியமுடிகின்றது.

சொர்க்கத்தில் உள்ள மலக்குகள், வானவர்கள், படிகளின் நடு நிலை ஆகிய அனைத்திலும் உள்ள நாமங்களை இஸ்லாம் மக்களிடம் பரவலாகிக் கிடக்கின்றன.

## கிறித்துவ மதம் தொடர்பான மக்கட் பெயர்கள்

உலகில் வழங்கும் சமயங்கள் பல் எனினும் அவற்றுள் வரலாற்றுப் பின்னணி கொண்டவை ஒரு சிலவே. அவற்றில் குறிப்பிடற்குரியது கிறித்தவம். வையம் அனைத்தும் அளந்த தமிழ் போன்று வையம் எங்கணும் பரவியுள்ள சமயம் கிறித்தவம். கிறித்துப் பெருமானின் நெறிகளே கிறித்தவம் ஆகும். அவற்றைப் பின்பற்றுவோரே கிறித்தவர் ஆவர். பெயர்கள் எவ்வாறு கிறித்துவத்தைப் போற்றுகின்றன என்பதனைப் புதுக்கோட்டை மாவட்ட மக்கட் பெயர்களின் வழி அறியமுடிகிறது.

## கிறித்து சமயத் தோற்றம்

உலகெங்கும் பரவியுள்ள கிறித்தவம் மேற்கு ஆசியாவில் பாலஸ்தீனத்தில் யூதர்களிடையே தோன்றியதாகும். இது கிறித்துவினால் தோற்றுவிக்கப்பட்டதன்று கிறித்துவிற்கு முன்னரே வழங்கி வந்த ஒன்று. அதனைப் பின்பற்றியோரின் சீர்கேடுகளைப் போக்கி கிறித்துப் பெருமானால் செம்மைப்படுத்தப்பட்டதே ஆகும். யூதர்களால் பின்பற்றப்பட்டு வந்த சமயம் கிறித்துப் பெருமானின் சீரிய நெறிகளால் புத்துயிர் பெற்றது. மரபு வழியாகப் பின்பற்றப்பட்டு வந்த யூத சமயம் கிரேக்க அறிஞர்களான அரிசுடாடில், பிளேட்டோ, சாக்கரடிஸ் ஆகியோர்களின் அறிவு விளக்கங்களைக் காலப்போக்கில் ஏற்றுக்கொண்டது. எனினும் பின்னர்த் தோன்றிய இசுடாயூக்குகளின் மனிதனின் மேம்பட்ட ஆற்றல் உலகை ஆக்குகின்றது என்னும் கருத்தினைத் தவிர்த்தது. யூத சமயத்தினரின் கடவுள் ஆட்சிக் கொள்கையின் சில குறைபாடுகளைச் சீர்திருத்திக் கொண்டது. அறத்தின் வழி நின்ற அன்புச் சமயமாக நிலைபெற்றது. இவ்வாறு அன்புச் சமயமாக யூதர் பின்பற்றிய சமயத்தை ஆக்கியவர் கிறித்து பெருமான். ஆயினும் அவரது காலத்தில் அச்சமயத்திற்குக் கிறித்தவம் என்ற பெயர் ஏற்படவில்லை அவர்களுக்கும் பின் ஓரிரு நூற்றாண்டுகள் கழித்தே அப்பெயர் ஏற்பட்டது.

## கிறித்துவின் வகை

வாஸ்கோடாகாமா கடல் வழிக்கண்ட காலம் போர்த்துகீசியர்கள் இந்தியாவோடு தொடர்புகொள்ள அதிக வாய்ப்பேற்பட்ட காலம் ஆகும். அதனையொட்டி இந்தியாவில் பரவிய கிறித்தவ சமயத்தைச் சிரியன் கிறித்தவம், கத்தோலிக்க கிறித்தவம், புராட்டஸ்டண்டு அல்லது திருத்தமுறைக் கிறித்தவம் என்று மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் தமிழகத்தில் பரவியவையாகக் கத்தோலிக்கம், திருத்தமுறை ஆகிய இவ்விரண்டனுள்ளும் கத்தோலிக்கம் முந்தியது என்பதைக் காண முடிகிறது.

## கிறித்து குறித்த பெயர் காரணம்

இறைவனே மானிடர் மீட்படையக் காரணமானவர். அவர் மனிதகுல மீட்பர் ஆனார். "அப்பொருளிலேயே 'மெசியா' என அழைக்கப்பட்டார். 'மெசியா' என்பது எபிரேயச் சொல். அது கிரேக்க மொழியில் 'கிறிஸ்டாஸ்' எனத் திரிந்தது.

அதுவே ஐரோப்பிய மொழிகளில் ‘கிறைண்ட்’ ஆயிற்று. இன்று ‘கிறித்து’ எனத் தமிழில் வழங்கலாயிற்று”[241] என்பதன் மூலம் அறியமுடிகிறது.

## கிறித்துவின் கோட்பாடு

கிறித்தவக் கோட்பாட்டின்படி கிறித்து ஒருவனே. முன்னோர் செய்த தீவினையால் மனிதன் கருவிலே மருவுற்றான். அவர்தம் பழிதுடைத்துத் தம் பாடுகளால் மீட்க மானிடனாகத் தோன்றிய இறைவனின் திருவுருவே கிறித்து என்பது கோட்பாடுகளாக உள்ளது.

## கடவுளின் படைப்புகள்

இவ்வுலகமும், மனிதனும், உருவாவதற்கு முதற்காரணம் கடவுள் என்பது விவிலியத்தின் கூற்றாகும். அதில் கடவுளின் படைப்புகளை ஏழு நாள் நிகழ்வாகக் கூறுகிறது. முதல் நாள் - மண்ணையும், விண்ணையும் படைக்கிறார், இரண்டாவது நாள் - மேகத்தைப் படைக்கிறார், மூன்றாம் நாள் - நிலம், கடல், புற்பூண்டு, விதை, செடி, கனி தரும் மரங்களைப் படைக்கிறார், நான்காம் நாள் - ஆதவன், சந்திரன், விண்மீன்கள் ஆகியவற்றைப் படைக்கிறார், ஐந்தாம் நாள் - உயிரினங்கள், நீர் வாழ்விகள், கடல்பாம்பு, பறவைகள் ஆகியவற்றைப் படைக்கிறார். ஆறாம் நாள் - காட்டு விலங்குகள், கால்நடை, ஊர்வன, பாம்புகள் ஆகியவற்றைப் படைக்கிறார்.

ஏழாம் நாள் - அவர் உருவிலான மானிடரை உருவாக்குகிறார். அவர் படைத்த உயிர்களில் சிறப்பிடம் பெற்றது மானிட இனம். ஏன் என்றால் அவரின் மூச்சைக் கொண்டே உயிர்ப்பெறச் செய்கிறார். பேரானந்தம் அடைகிறார். அவன் படைத்த முதல் மனிதன் ஆதாம் ஆகும். இதில் மனிதன் தவிர்த்த ஆறு படைப்புகளின் இயற்பெயர்கள் இன்றும் அவ்வாரே வழங்கப்பட்டிருக்கின்றன. மனிதனின் தலைமுறைக்கு மட்டும் வேறு வேறு பெயர்கள் காணப்படுவதை அன்றிலிருந்து இன்று வரை அறிய முடிகிறது.

கடவுள் படைத்த உயிரினங்கள் அனைத்திலும் ஆண், பெண் இரண்டும் உண்டு. இறைவன் மனித இனத்தில் ஆதாம் என்ற ஒருவனை மட்டும் படைத்துள்ளார். பின் அவனுக்குத் துணையாக ஆதாமின் விலா எலும்பில் ஒரு பெண்ணை உருவாக்குகிறார். அவள்தான் ‘ஏவாள்’ ஆவாள். இருவருக்கும் ஏதேன் என்னும் தோட்டத்தைக் கொடுத்து உயிர்வாழ்வதற்கான அனைத்து வசதிகளும் அதில் அமைத்திருக்கிறார். அந்நிலையில் இருவரின் கண் திறக்கப்பட வில்லை.

கடவுள் ஏதேனில் நடுவில் இருக்கும் தீய மரப் பழங்களை மட்டும் தவிர்த்து மற்றையெல்லாம் உண்க என்றார். கடவுள் படைத்த தீய சக்தியான பாம்பு, ஏவாலை அந்த தீயமரக் கனியை உண்ண சூழ்ச்சி செய்தது. அந்தப் பழத்தைத் தானும் உண்டு தன் கணவனுக்கும் கொடுத்தாள். பின் இருவரின் கண்களும் திறக்கப்பட்டுவிட்டன.

இதனை அறிந்த இறைவன் அந்தப் பாம்பிற்கும், கணவன் மனைவிக்கும் சாபம் விடுக்கிறார். முதலில் பாம்பிற்குக் கூறிய வாக்குறுதி "ஆண்டவராகிய கடவுள் பாம்பிடம் நீ இவ்வாறு செய்ததால், கால்நடைகள், காட்டு விலங்குகள் அனைத்திலும் சபிக்கப்பட்டிருப்பாய். உன் வயிற்றினால் ஊர்ந்து உன் வாழ்நாள் எல்லாம் புழுதியைத் தின்பாய். உனக்கும் பெண்ணுக்கும், உன் வித்துக்கும் அவள் வித்துக்கும் பகையை உண்டாக்குவேன். அவள் வித்து உன் தலையைக் காயப்படுத்தும். நீ அதன் குதிங்காலைக் காயப்படுத்துவாய்"[242] என்றார். பின் பெண்ணிற்கு அளித்த வாக்குறுதி "அவர் பெண்ணிடம் உன் மகப்பேற்றின் வேதனையை மிகுதியாக்குவேன் வேதனையில் நீ குழந்தைகளைப் பெறுவாய் ஆயினும் உன் கணவன் மேல் நீ வேட்கை கொள்வாய் அவனோ உன்னை ஆள்வான்"[243] என்றார். பின் ஆதாமிடம் கூறிய வாக்குறுதியையும் விவிலியம் கூறுகிறது. "உன் மனைவியின் சொல்லைக் கேட்டு, உண்ணக் கூடாது என்று நான் கட்டளையிட்டு விலக்கிய மரத்திலிருந்து நீ உண்டதால் உன் பொருட்டு நிலம் சபிக்கப்பட்டுள்ளது உன் வாழ்நாளெல்லாம் வருந்தி அதன் பயனை உழைத்து நீ உண்பாய். முட்செடி முட்புதர் அது முளைக்கும் வயல்வெளிப் பயிர்களை நீ உண்பாய் நீ மண்ணிலிருந்து உருவாக்கப்பட்டதால் அதற்குத் திரும்பும் வரை நெற்றி வியர்வை நிலத்தில் விழ உழைத்து உன் உணவை உண்பாய். நீ மண்ணாய் இருக்கிறாய் மண்ணிற்கே திரும்புவாய்"[244] என்று கடவுள் படைத்த மனிதத் தலைமுறை இவ்வாறு உருவாகின.

## மனிதத் தலைமுறைகள்

கடவுளால் வாக்குறுதி பெற்ற இருவரின் மூலமாக மனித சமுதாயம் பல்கிப் பெறுகின. அவை




ஆகியோராவர். ஏறக்குறைய ஏழு தலை முறைகளாகப் பல்கிப் பெருகின. இவர்கள் ஒவ்வொருவரின் வயது ஏறக்குறைய தொள்ளாயிரத்து ஐம்பதற்கும் உட்பட்டதாகத் திருவிவிலியத்தின் மூலம் அறிய முடிகிறது. இத்தலைமுறைகள் செய்த தீமையின் பயனால் கடவுள் இவர்களை அழிக்கத் திட்டம் செய்கிறார். தலைமுறையின் இறுதியாகிய நோவாத் தன் பக்கத்தில் அழைத்துக் கொள்கிறார். நோவாவிடம் கடவுள் கூறியதாக "நீ உன் குடும்பத்தார் அனைவரோடும் பேழைக்குள் செல். ஏனெனில் இத்தலைமுறையில் உன்னையே நான் நேர்மையானவனாகக் காண்கிறேன். தக்க விலங்குகள் எல்லாவற்றிலிருந்தும் ஆணும் பெண்ணுமாக ஏழு சோடிகளையும், தகாத விலங்குகளிலிருந்து ஆணும் பெண்ணுமாக ஒரு சோடியையும் வானத்துப் பறவைகளிலிருந்து ஏழு சோடிகளையும் மண்ணுலகெங்கும் அவற்றின் இனங்கள் உயிர் பிழைத்துக் கொள்வதற்காக உன்னுடன் சேர்த்துக்கொள்.

ஏனெனில் இன்னும் ஏழு நாட்களில் மண்ணுலகின் மேல் நாற்பது பகலும் நாற்பது இரவும் நான் மழை பெய்விக்கப் போகிறேன். நான் உருவாக்கிய இந்த உயிரினங்களை எல்லாம் இந்த நிலத்திலிருந்து அழித்தொழிப்பேன்."[245] என்றார்.

ஆண்டவர் கட்டளைப்படி நோவா செய்தார். பின் நாற்பது இரவும் பகலும் மழை பெய்து அனைத்தையும் அழித்தன. பின் நோவாவினால் மீண்டும் தலைமுறைத் தோன்றுகிறது. வெள்ளப் பெருக்கின் போது நோவாவின் வயது அறுநூறு ஆகும். நோவாவின் புதல்வர்கள் சேம், காக், எப்பேத்து ஆகிய மூவரில் இருந்துதான் மண்ணுலகம் முழுவதும் மனித இனம் பரவியது என்பதை இதன் மூலம் உணர முடிகிறது. இத்தலை முறையில் தான் கடவுள் நோவாவிடம் ஒரு உடன்படிக்கையை வைக்கிறார். அவை "மண்ணுலகில் உள்ள எல்லா உயிர்களோடும் என் உடன்படிக்கையை நிலைநாட்டுகிறேன் உங்களோடும் என் உடன்படிக்கையை நிறுவுகிறேன்: சதையுள்ள எந்த உயிரும் வெள்ளப் பெருக்கால் மீண்டும் அழிக்கப்படாது மண்ணுலகை அழிக்க இனி வெள்ளப் பெருக்கு வரவே வராது."[246] என்று உடன்படிக்கைக் கூறுகிறார். கடவுளின் ஆசியால் நோவாவின் தலைமுறை தளையத் தொடங்கியது. இத்தலைமுறையின் தீமைகளைக்களைய கடவுள் ஏசு என்னும் இறைத் தூதரை விடுவிக்கிறார். இத்தலைமுறைகளாவன என்பதைப் பின் வருமாறு உணரலாம்.






**எகிப்தின் புதல்வர்கள்**




கப்தோரியம்

**கானானின் புதல்வர்கள்**




செமாதி

அமர்த்தி

ஆகியோர் நோவாவின் வழி மரபினர் ஆவர்.

**ஆகார் - ஆபிரகாம்**






ஆகியோர் ஆபிரகாம் மனைவி ஆகாரின் வழி மரபினர்கள் ஆவர். அதனை அடுத்து ஆபிரகாமின் மனைவி சாராவின் வழி மரபினர்கள் வருமாறு,



## ஆபிரகாமின் வழி மரபினர்

ஆபிரகாமுக்கு ஆண்டவர் கட்டளை இடுகிறார். அவை "ஆண்டவர் ஆபிரகாமை நோக்கி உன் காரான் நாட்டிலிருந்தும் உன் இனத்தவரிடமிருந்தும் உன் தந்தை வீட்டிலிருந்தும் புறப்பட்டு நான் உனக்குக் காண்பிக்கும் கானா நாட்டிற்குச் செல். உன்னை நான் பெரிய இனமாக்குவேன். உனக்கு ஆசிவழங்குவேன். உன் பெயரை நான் சிறப்புறச் செய்வேன். நீயே ஆசியாக விளங்குவாய். உன் வழியாக மண்ணுலகின் மக்களினங்கள் அனைத்தும் ஆசி பெறும்."[247] என்று ஆண்டவர் கட்டளை இடுகிறார். இதன் மூலம் ஆபிரகாமின் வழித் தோன்றல்கள் கானா நாட்டில் உருவாகின. அவை பின்வருமாறு



அபியாம், அபியாம் மகன்,

↓

ஆசா, ஆசா மகன்,

↓

யோசபாத்து, யோசபாத்து மகன்,

↓

யோராம், யோராம் மகன்,

↓

உசியா, உசியா மகன்,

↓

யோத்தா, யோத்தா மகன்,

↓

ஆகாசு, ஆகாசு மகன்,

↓

எசேக்கியா, எசேக்கியா மகன்,

↓

மனாசே, மனாசே மகன்,

↓

ஆமோன், ஆமோன் மகன்,

↓

யோசியா, யோசியா மகன்,

↓

யோசியாவின் காலத்தில்தான் யூதர்கள் பாபிலோனுக்குச் சிறைப்பிடித்துச் செல்லப்பட்டார்கள்.

↓

எக்கோனியா, எக்கோனியா மகன்,

↓

செயல்தியேல், செயல்தியேல் மகன்,

↓

செருபாபேல், செருபாபேல் மகன்,

↓

அபியூது, அபியூது மகன்,

↓

எலியாக்கிம், எலியாக்கிம் மகன்,

↓

அசோர், அசோர் மகன்,

↓

சாதோக்கு, சாதோக்தகு மகன்,

↓

ஆக்கிம், ஆக்கிம் மகன்,

↓

எலியூது, எலியூது மகன்,

↓




இவ்வாறு இயேசு கிறித்துவின் வழித்தோன்றல்களை மூன்று பிரிவுகளில் காணமுடிகிறது.

## கிறித்து வழிமரபுகளில் மக்கட் பெயர்கள்

கிறித்து சமய மக்கள் தங்கள் மதத்தின் மீது உயிரின் மேலான நம்பிக்கைகளைக் கொண்டுள்ளனர். ஆகையால் கிறித்துவிற்கு முன், பின் உள்ள இறைத் தூதுவர்கள் இறைவன் வழிமரபுகள் தொடர்பான பெயர்களை, மக்கட் பெயர்களில் மிளிர்வதைக் காண முடிகிறது.

**சான்றாக:** ஆபிரகாம், காத்தமுத்து, சாலமன், எப்சி, ரோகன், அடைக்கல மேரி, ரூபன், மேரி, மரியாள், மரியநாயகம், ஸ்டீபன், சில்பா, அற்புதம்மாள், மெர்சியா, எலிசா, ஜோசப், ஷியாம், சாரா, சாமுவேல், எலிசபத், ஆரோன், இமானுவேல் போன்ற வழிமரபு, இறைத் தூதுவர் பெயர்களையும் இம்மாவட்ட மக்கட் பெயர்களில் காண முடிகிறது.

இம்மாவட்டத்தில் இருக்கக்கூடிய அன்னை மரியாளுக்கு யோசேப்புக்கும் பல்வேறு பெயர்களில் திருக்கோயில்கள் உள்ளன. மெசியா என்றழைக்கப்படும் இயேசுவிற்கு அடைக்கலம் தந்ததால், அடைக்கல அன்னை, அடைக்கலமாத, அருள்மேரி, ஆரோக்கிய அன்னை என்று உள்ளன. குழந்தையை உடையவள் என்பதாள் குழந்தையம்மாள் போன்ற பெயர்களில் திருக்கோயில்கள் உள்ளன. அக்கோயில் உள்ள மாதவின் பெயர்களை மக்கட் பெயர்களிலும் காண முடிகிறது.

**சான்றாக:** அடைக்கலம், புனிதா, அடைக்கலமேரி, அருள்மேரி, அருள்சாமி, அருளானந்து, குழந்தைசாமி, குழந்தையம்மாள், மரியாள், மரியம்மை போன்றவை.

## இயேசுவின் பெயர்கள்

இயேசுவிற்கு வழங்கும் பெயர்கள் மக்கட் பெயர்களில் காணப்படுகின்றன.

மெர்சியா, இமானு, புனிதர் என்ற பெயர்களில் மெர்சியா என்றால் அருளாளர், இமானு என்றால் கடவுள் நம்மோடு இருக்கிறார் என்றும், புனிதர் என்றால் மனிதர்களின் பாவங்களைப் போக்கும் புனிதர் என்றும் அழைக்கப்படுகின்றனர். இதன் தொடர்பாக மக்களின் பெயர்கள் இடப்படுவதைக் கிறித்து சமயத்தில் காணமுடிகிறது.

**சான்றாக:** மெர்சி, டெய்சி, நேயா, இமானுவேல், புனிதா, புனிதபாத்திமா, இயேசுராஜ போன்ற இயேசுவின் பல நாமங்கள் மக்கட் பெயர்களைக் காணமுடிகின்றன.

## மக்கட் பெயர்களில் இயேசுவின் தந்தைப் பெயர்கள்

திருமணம் ஆவதற்கு முன்பே கருவுற்ற அன்னை மரியாளை எந்த இச்சைக்கும் உட்படுத்தவில்லை. இறைத் தூதுவரின் அருள் பெற்ற யோசேப்பே இறைவனின் தந்தை ஆவார். அவரின் நாமத்தையும் மக்கட் பெயர்களின் வழிக் கண்டுணரப்படுகிறது.

செபஸ்தியார், அந்தோணிசாமி, செபஸ்தியாம்மாள், செபஸ்டீன், செபஸ்தியர், அந்தோணி, அந்தோணியார், அந்தோணியம்மாள், சூசையப்பர், சூசைமாணிக்கம், ஜோசப் போன்ற பெயர்களில் மக்கட் பெயர்களைக் காணமுடிகின்றன.

## ஏசுவின் தூதுவர்கள்

ஏசுவின் தூதுவர்கள் பதினொரு பேர் ஆவார். அவர்கள் பெயர் வருமாறு, பேதுரு, யோவான், அந்திரேயா, பிலிப்பு, பர்த்தலமேயு, மத்தேயு, தோமா, யாக்கோபு, ததேயு, சீமோன், யூதாசு ஆகியோர் இயேசுவின் சீடர்கள் என்று சொல்லக்கூடியவர்கள். இவர்கள் பெயர்களில் மக்கட் பெயர்கள் குறைந்த அளவிலேயே உள்ளன. அவை, யோவான், சீமான் போன்ற பெயர்கள் மட்டும் மக்கட் பெயர்களில் காணமுடிகின்றன. பெயர்களில் காணப்படாவிட்டாலும், ஆலயங்களில் அவர்களின் நற்செய்தி வாசங்கள் நாள் தோறும் போற்றப்படுகின்றன.

## இறை ஆசிபெற்றவர்கள்

எலிசபெத் என்பவருக்கு குழந்தைப்பேறு என்ற நிலையே இல்லை என்று அறிவித்தபின்னும் இறைவன் அருளால், யோவானைப் பெற்றாள் என்பதால் அவர் பெயரை மக்கட் பெயர்களில் காணமுடிகிறது.

**சான்றாக:** எலிசா, எலியாஸ், எலிசபத் போன்றவை.

## கிறித்து குறித்த பெயர்கள்

கிறித்துவ மக்கள் தங்கள் சமயத்தைப் போற்றும் விதமாக சமய பெயர்களை மக்கட் பெயர்களில் இட்டுள்ளதை அறியமுடிகிறது.

**சான்றாக:** கிறிஸ்டினா, கிறிஸ்டி, கிறிஸ்டோபர் நிஷா, கிறிஸ்டோபர்ராணி, ஷாய் கிருஷ்டி போன்றவையாகும்.

## இறைத்தொண்டர்கள் பெயர்கள்

இறைத்தொண்டர்கள் என்று போற்றக்கூடியவர்களுக்கு இறைவன் இயேசு 'வாழ்த்து' என்னும் பகுதியில் நன்றி தெரிவிக்கிறார். அவை வருமாறு, பிரிஸ்கா, அகிலா, மரியா, அந்திரோன், யூனியா, அம்பிலியா, உர்பா, ஸ்தாக்கி, அப்பெல்லாத்து, அரிஸ்தோபுல், எரோதிபோ, நர்க்கிசு, பெர்சி, ரூபு, பிலிலோகு, யூலியா, நேரேயு, ஒலிம்பாலூக்கா, பவுல் ஆகியோர் ஆவர். இவர்கள் குறித்தப் பெயர்களை மக்கட் பெயர்களாக இம்மாவட்ட மக்களிடம் கண்டுணர முடிகிறது.

## கிழக்கிந்திய சமயத் தூதுவர்கள்

இஸ்ரயேலில் யூதர்கள் துரத்தியடிக்கப்பட்ட நிலையில் பல்வேறு தூதுவர்கள் திருக்கோயில் நிலை உருக்கி சமயத்தை வளர்த்தனர். அந்நிலையில் சமயத் தூதுவர் என்று போற்றப்பெற்ற துறவிகள் சிலர் உள்ளனர். "துறவி பிரான்சிஸ் சவேரியார் (கி.பி.1506-1552) இந்தியா வந்த இயேசு சபை குருக்களுள் முதல்வராவர். இவரைத் தொடர்ந்து பிரான்சிஸ்கள் சபையினர் கி.பி.1517 லும் தொமினிக்கன் சபையினர் கி.பி.1548 லும், அகஸ்துனியன் சபையினர் கி.பி.1572 லும், கார்மாலைட்டுகள் கி.பி.1556 லும் இந்தியா வந்தனர். கி.பி.1557-இல் கோவா கத்தோலிக்கத் திருச்சபையின் தலைமையகமாக விளங்கியது."[248] இவர்கள் தொடர்பான பெயர்களையும் இம்மாவட்ட மக்கட் பெயர்களின் வழிக் காணமுடியும்.

**சான்**றாக: பிரான்சிஸ், பிரான்சிஸ்கான், அகஸ்டீனா, பிரின்சன் போன்ற பெயர்கள்.

## இயேசு சபைத் துறவிகள்

முத்துக்குளித் துறையில் பரதவ மக்களிடையே கிறித்தவத்தைப் பரப்ப, போர்த்துக்கள் அரசர் மூன்றாம் ஜான் என்பவர் பாப்பரசர்க்கு விடுத்த சவேரியார் சமயப் பணிபுரிய 1542 இல் கோவா நகரை வந்தடைந்தார். அதன் பின்பு முத்துக்குளித்துறைக்குச் சென்று பரதவ மக்களிடையே பணியாற்றினார்.

கி.பி.1546 ஆம் ஆண்டில் இந்தியாவிற்குச் சமயத் தொண்டு புரிய வந்தவர் அன்டிரிக் அடிகளார் ஆவர். இவர் முத்துக்குளித்துறையில் 50 ஆண்டுகள் உழைத்தார். “உரோமாபுரியைச் சார்ந்த இயேசு சபை குரு இராபர்-டி-நோபிலி இந்தியத் துறவியரைப் போல் ஆடையணிந்து தமிழகத்தில் சமயப் பணியாற்றியவர்.”[249] “இத்தாலி நாட்டினரான வீரமாமுனிவர் சேசுசபை குருவாகி கி.பி.1711இல் தமிழகம் வந்தனர். அதே நாட்டைச் சார்ந்த சுவாமி டிரோசி 1836இல் வறவநாட்டிற்கு வந்தார்.”[250]

இத்தகைய சமயத்தைப் பரப்ப வந்த சமயத் துறவிகளின் பெயர்கள் கிறித்துவ மக்கட் பெயர்களில் எச்சங்களாக மிளிர்கின்றன.

**சான்றாக:** ஜான், சவேரியார், அன்ரிக்ரோசி போன்றப் பெயர்கள் சான்றுகளாகும்.

## திருத்த முறைத் தொண்டர்கள்

தமிழகத்தில் திருத்தமுறைக் கிறித்தவரின் பணி பிற்காலத்தில் தான் தொடங்கியது. கி.பி.1706இல் தரங்கம்பாடியை நிலைக்களமாகக் கொண்டு தம் பணியைத் தொடங்கினர். காலப்போக்கில் அவர்கட்குள்ளேயே சில உட்பிரிவுகள் தோன்றின. எனினும் மீண்டும் அவை கி.பி.1947இல் தென் இந்தியத் திருச்சபையாக இணைந்தன. அச்சபையில் பின் வருவோர் குறிப்பிடத்தக்கோர் ஆவர். “பாத்தலோமிய சீகன்பால்கு 1706இல் தரங்கம்பாடிக்கு வந்து விவிலியத்தைத் தமிழில் மொழிபெயர்த்து தமிழ் மக்களுக்கு வழங்கிறார். பின் பிலிப் பெப்ரீஷியஸ் (Philipp Fabricius) விவிலியத்தை மொழிபெயர்த்தார். மேனாட்டுத் திருத்த முறைக் கிறித்தவத் தொண்டர் எல்லீஸ் (francis white ellis), வின்சுலோ (winslow), பெர்சிவல் (percivel), ஜி.யூ.போப் (G.U.pope),

கால்டுவெல் (Caidwell), ஜான் லாசரஸ் (john lasarus).””[251] போன்ற திருத்த முறைத் தொண்டர்கள் பெயர்களை மிகுதியாக மக்கட் பெயர்களில் காணமுடிகிறது.

**சான்றாக:** பெட்ரீஷியா, எல்லீஸ், வின்சன், பெர்சி, ஜான் பெரிலிக்ஸ் போன்றவை.

தாமஸ் அக்குவினா, விண்தூதுவர் அறிஞர் (angelic Doctor) எனவும், திருச்சபைப் புலவர் (doctor of the church) எனவும் பாராட்டப்பட்டவர். அக்குவினா என்பது அவரது இயர்பெயர். இவரது ஆசிரியர் “ஆல்பர்ட் இவர் பாரிசில் ஆசிரியராகப் பணியாற்றினார். கிறித்துவின் ஆன்மத் தத்துவத்தையும், மும்மையையும் அகஸ்துவின் சிந்தனை அடிப்படையில் விளக்கினார்.”[252] என்பர். “ஜான்ஹஸ் என்பவர் பிரேக் என்னுமிடத்தில் 1369இல் பிறந்து தன் கல்விக்காக பிரேக்பல் சுயமாக வேலை செய்து அங்கேயே துணைவேந்தர் பதிவிக்கு உயர்த்தப்பட்டவர்.”[253] “ஜெரோம் இவர் பொகீமியாவில் ஹஸ் உடன் சேர்ந்து நாட்டின் சமய உரிமைகளுக்குக் குரல் கொடுத்தவர்.”[254] இவர்களின் பெயர்கள் இம்மாவட்ட மக்கட் பெயர்களில் உள்ளன.

**சான்றாக:** தாமஸ், ஆல்பர்ட், ஹாட்வின் ஆல்பர்ட், ஜான், ஜெரோம் ஆகிய பெயர்கள்.

## தொகுப்புரை

- ❖ சிவன் ஆதி அந்தம் இல்லாதவன். எங்கும் நீக்கமற நிறைந்தவன். நிரஞ்சன் ‘புதுக்கோட்டை மாவட்ட’ பதினோறு ஒன்றியங்களிலும் சிவன் தலங்கள் அமைந்துள்ளன. கடவுள் என்பதனால் சாதி, மதம் பேதமின்றி அனைவராலும் போற்றப்படுகிறார். நிகண்டுகளில் குறிப்பிட்டுள்ள பல்வேறு பெயர்களைப் ‘புதுக்கோட்டை மாவட்ட’ சிவனின் நாமமாகவும், மலைமகள் நாமமாகவும் கையாண்டுள்ளதை இதன் வழி அறிய முடிகிறது.

- ❖ அறந்தாங்கியை அடுத்து ஆவுடையார் கோவில் உள்ளது. அங்குள்ள சிவன் ‘ஆவுடையார்’ என்பதாகும். ஆவுடையார் தொடர்பான நிகண்டுப் பெயர்கள் மக்கள் பெயர்களில் காண முடிகிறது.

- பசுபதி, ஆதி, உமாபதி, கங்காதரன், மதிவண்ணன், மூர்த்தி, சிவன், சங்கரன் என பல பெயர்கள் உள்ளன.

- புதுக்கோட்டையில் இருந்து 5கி.மீ தொலைவிலுள்ள 'திருக்கோகர்ணத்திலுள்ள சிவன் 'கோகர்ணேசர்' என்று அழைக்கப்படுகிறார்.

- இந்திரனால் சாபம் பெற்றக் காமதேனு பசு கபில முனிவரின் உபதேசத்தால் தனது இரண்டு காதுகளிலும் கங்கை நீரை நிரப்பிக் கொண்டு வந்து சிவபெருமானுக்கு வழிபாடு செய்த காரணத்தால் இப்பெயர் பெற்று விளங்கியதாகக் குறிப்பிடுகின்றனர்.

- நிகண்டுகளில் உள்ள சிவன், சக்தி மக்கள் பெயர்களில் சூட்டப்பட்டுள்ளன. அவை, கங்கா, கங்காதரன், பசுபதி, பூதநாதன், பெருமான், நந்தினி போன்றவையாகும்.

- நிரஞ்சன் என்பதனால் அனைத்து ஒன்றியங்களிலும் குடிகொண்டிருக்கிறான். அனைத்துச் சிற்றூர்களிலும் உள்ள மக்கள் பெயர்களால் நிறைந்து இருக்கிறான்.

- புத்தர் தொடர்பான உறவுமுறைகள், தெய்வங்கள், புத்தப்படிமங்கள், பாலிமொழிச் சொற்கள், மதத்தைப் பரப்பியச் சோழ மன்னன் வீரராஜேந்திரன், சக்கரவர்த்தி ஆகிய பெயர்கள் முன், பின் ஒட்டுகள் மற்றும் முழுமையான சொற்களிலும் மக்கட் பெயர்களாக உள்ளன.

- பௌத்தம் வழக்கிழந்த நிலையிலும் இப்பகுதியில் இன்றும் பாலிமொழித் தொடர்பான ஊர்கள் மற்றும் புத்த நிலைகள் இருக்கின்றன.

- பல்வேறு சமயங்கள் மக்கள் ஐம்புலன்களை அடக்கி ஆள வேண்டும். ஒழுக்க நெறிகளைக் கடைபிடிக்க வேண்டும் என்ற நோக்கில் உருவாக்கப்பட்டன. சமண சமயமும் பல்வேறு நெறிமுறைகளைச் சமுதாயத்திற்குக் கொடையாக அளித்திருக்கின்றது. அவர்களின் அறுங்குணங்கள், செயல்களை அடுத்த சமூகத்திற்குக் கொண்டு சேர்க்கும் வகையில் அவர்களின் பெயர்கள் மக்கட் பெயர்களில்

பிரதிபலிக்கின்றன. சைவ, வைணவ பக்தி இயக்கங்களின் காரணமாக சமணம் முற்றிலுமாக இம்மாவட்டத்தில் வலுவிழந்திருந்தாலும், சமணம் தொடர்பான பெயர்களும் ஆலயங்களும், மக்கள் மத்தியில் இன்றும் காணப்படுகின்றன.

❖ அல்லாஹ்வின் மிகப் பெரிய கிருபையால் அவன் நம்மை இஸ்லாமாக ஆக்கினான். முகம்மது நபி அவர்களின் உம்மத்தில் (சமுதாயம்) நம்மைப் பிறக்கச் செய்தான். இன்னும் நமக்காகச் சிறந்த இலகுவான மார்க்கத்தையும் தந்துள்ளான். அதன் மூலமாக நாம் அல்லாவின் கடமையையும் நபிகள் நாயகம் அவர்களின் வழிமுறைகளின் படியும் நடக்க முடியும். நாம் தீனுடைய வாழ்க்கையைப் பின்பற்றி நடந்தால் அல்லாஹ் அதற்குப் பரிகாரமாக நமக்கு இவ்வுலகத்தில் சிறந்த வாழ்வையும், மறுமையில் அழிவே இல்லாத சொர்க்கத்தையும் தருவான் என்பதால் இசுலாம் சமயப் பெயர்கள் இங்கு அதிகமுள்ளன.

❖ மக்கள் இனத்தை நெறிப்படுத்துவதற்காக இறைவன் தோற்றம் பெற்று உருவாக்கியதே கிறித்தவ சமயம். பல்வேறு தலைமுறைகளை உள்ளடக்கிப் பின் மூன்றுப் பகுதிகளாக கிறித்தவம் பரவியுள்ளது.

❖ மூன்று நிலைகளிலும் உள்ள தலைமுறைகளின் பெயர்கள் மக்கள் மத்தியில் காணப்படுகின்றன.

❖ புதுக்கோட்டை மாவட்டத்தில் கிறித்தவர்களிடையே உள்ள மக்கட் பெயர்கள் கிறித்தவ நெறிகளைக் கடைபிடிக்கும் நோக்கில் அமைந்துள்ளதைக் கள ஆய்வின் மூலம் அறிய முடிந்தது.

## சான்றெண் விளக்கம்

1. ஐயன்பெருமாள், கோனார்தமிழ் அகராதி, ப. 158
2. ச. பவானந்தம்பிள்ளை, தமிழ்ச்சொல்லகராதி, ப. 283
3. க்ரியா, தற்காலத் தமிழ் அகராதி, ப. 576
4. தமிழண்ணல், தொல்காப்பியம் (மூலமும் உரையும்), ப. 409
5. அ. மா. பரிமணம், பரிபாடல் (மூலமும் உரையும்), ப. 154
6. பொ. வே. சோமசுந்தரனார், பத்துப்பாட்டு (மதுரைக்காஞ்சி), ப. 157

7. மேலது, ப. 6

8. மேலது, ப. 18

9. தமிழண்ணல், தொல்காப்பியம், ப. 1

10. மேலது, ப. 63

11. மேலது, ப. 103

12. மேலது, ப. 56

13. மேலது, ப. 42

14. மேலது, ப. 124

15. கா. பாஸ்கரன், தமிழியலில் ஆய்வில் மக்கட் பெயர்கள், ப. 159

16. க. ப. அறவாணன், திருக்குறள், ப. 76

17. மேலது, ப. 98

18. மேலது, ப. 361

19. புலியூர்கேசிகன், சிலப்பதிகாரம், ப. 27

20. அ. அருளம்பலவானார், திருவாசக ஆராய்ச்சியுரை, ப. 138

21. அ. சுவாமிநாதன், நிகண்டுச் சொற்பொருட்கோவை, ப. 159

22. மேலது, ப. 159

23. அ. மா. பரிமணம், ஐங்குறுநூறு (மூலமும் உரையும்), ப. 167

24. அ. மா. பரிமணம், நற்றிணை (மூலமும் உரையும்), ப. 339

25. தமிழண்ணல், அகநானூறு, ப. 246

26. அ. மா. பரிமணம், கலித்தொகை (மூலமும் உரையும்), ப. 98

27. அ. மா. பரிமணம், பரிபாடல் (மூலமும் உரையும்), ப. 233

28. தமிழண்ணல், பதிற்றுப்பத்து, ப. 265

29. பொ. வே. சோமசுந்தரனார், பத்துப்பாட்டு (நெடுநல்வாடை), ப. 24

30. மேலது, ப. 5

31. இரா. மோகன், பத்துப்பாட்டு (பெரும்பாணாற்றுப்படை), ப. 208

32. மேலது, ப. 6

33. வே. வேலு, மக்கட் பெயர்கள், ப. 24

34. ச. வே. சுப்பிரமணியன், சங்க இலக்கியம் எட்டுத்தொகை, ப. 201

35. க்ரியா, தற்காலத் தமிழ் அகராதி, ப. 859

36. கோ. சுரேஷ், இராமநாதபுர மாவட்ட ஊர்ப்பெயர்கள், ப. 58

37. க. ப. அறவாணன், தமிழ் மக்கள் வரலாறு, ப. 52

38. மேலது, ப. 53

39. மேலது, ப. 53

40. அ. ஆலிஸ், பதிற்றுப்பத்து (மூலமும் உரையும்), ப. 26

41. க. ப. அறவாணன், திருக்குறள், ப. 74

42. துளசி ராமசாமி, ப. 81

43. தினதந்தி, புதுக்கோட்டை மாவட்டம், ப. 18 (23. 7-14)

44. அ. மா. பரிமணம், நற்றிணை (மூலமும் உரையும்), பா. 40:9-12

45. மேலது, பா. 81:33-37

46. தினதந்தி, புதுக்கோட்டை மாவட்டம், ப. 10 (22. 7. 2-14)

47. மேலது, ப. 12

48. இரா. மோகன், பத்துப்பாட்டு (நெடுநல்வாடை), பா. 42:3

49. அ. ஆலிஸ், அகநானூறு, பா. 124

50. க்ரியா, தற்காலத் தமிழ் அகராதி, ப. 331

51. தமிழண்ணல், தெல்காப்பியம் (மூலமும் உரையும்), ப. 315

52. க. ப. அறவாணன், திருக்குறள், ப. 283

53. அ. ஆலிஸ், ஐங்குறுநூறு, பா. 124

54. அ. ஆலிஸ், அகநானூறு, ப. 79

55. மேலது, ப. 351

56. மேலது, ப. 427

57. இரா. மோகன், புறநானூறு, ப. 178

58. கள்ளழகர் அம்மானை, ப. 74

59. சி. செல்வராஜ், தகவலாளி

60. இரா. சந்திரசேகரன், நாட்டார் தெய்வங்கள், ப. 78

61. மேலது, ப. 78

62. க்ரியா, தற்காலத் தமிழ் அகராதி, ப. 403

63. அ. லெ. நடராஜன், பகவான் மகாவீரர் வாழ்க்கை வரலாறு, ப. 3

64. மேலது, ப. 3

65. தமிழண்ணல், தொல்காப்பியம், ப. 8

66. அ.சுவாமிநாதன், சங்க கால வரலாறு, ப. 65

67. மேலது, ப. 66

68. பெ. வே. சோமசுந்தரனார், பத்துப்பாட்டு (மதுரைக்காஞ்சி), ப. 15

69. மு. சண்முகம்பிள்ளை, நிகண்டுச் சொற்பொருட்கோவை தெய்வப்பெயர்கள், ப. 205

70. மேலது, ப. 213

71. இரா. சந்திரசேகரன், நாட்டார் தெய்வங்கள், ப. 93

72. மேலது, ப. 93

73. மேலது, ப. 93

74. பெ. வே. சோமசுந்தரனார், பத்துப்பாட்டு (மலைபடுகடாம்), ப. 16

75. ஜெ. இராஜாமுகமது, புதுக்கோட்டை மாவட்ட வரலாறு, ப. 189

76. மேலது, ப. 190

77. மேலது, ப. 201

78. மேலது, ப. 206

79. மேலது, ப. 206

80. மேலது, ப. 207

81. மேலது, ப. 190

82. மேலது, ப. 236

83. மேலது, ப. 236

84. மேலது, ப. 246

85. மேலது, ப. 246

86. மு. சண்முகம்பிள்ளை, நிகண்டுச் சொற்பொருட்கோவை தெய்வப்பெயர்கள், ப. 256

87. மேலது, ப. 256

88. மேலது, ப. 258

89. சி. வை. தாமோதரம்பிள்ளை, கலித்தொகை, ப. 107

90. மேலது, ப. 108

91. மேலது, ப. 10

92. மேலது, ப. 38

93. மேலது, ப. 47

94. மேலது, ப. 105

95. அ. மா. பரிமணம், பரிபாடல் (மூலமும் உரையும்), ப. 155

96. பொ. வே. சோமசுந்தரனார், பத்துப்பாட்டு (பெரும்பாணாற்றுப்படை), ப. 222

97. மு. சண்முகம்பிள்ளை, நிகண்டுச் சொற்பொருட்கோவை, தெய்வப்பெயர்கள், ப. 260

98. கம்பராமாயணம் (பாலகாண்டம்), ப. 48

99. பொ. வே. சோமசுந்தரனார், பத்துப்பாட்டு(திருமுருகாற்றுப்படை), ப. 7

100. அ. ச. ஞானசம்பந்தன், தேவாரத் திருப்பதிகங்கள், ப. 347

101. மு. சண்முகம்பிள்ளை, நிகண்டுச் சொற்பொருட்கோவை, தெய்வப்பெயர்கள், ப. 229

102. திவாகரம், நிகண்டுச் சொற்பொருட்கோவை, ப. 184

103. மு. சண்முகம்பிள்ளை, நிகண்டுச் சொற்பொருட்கோவை, தெய்வப்பெயர்கள், ப. 236

104. மேலது, ப. 237

105. அ. ச. ஞானசம்பந்தன், தேவாரத் திருப்பதிகங்கள், ப. 5

106. அடி மதிக்குடிஅய்யனார், பிள்ளைத்தமிழ், ப. 7

107. மேலது, ப. 30

108. மு. சண்முகம்பிள்ளை, நிகண்டுச் சொற்பொருட்கோவை, தெய்வப்பெயர்கள், ப. 244

109. தமிழண்ணல், தொல்காப்பியம், ப. 8

110. அ. ஆலிஸ், ஐங்குறுநூறு, ப. 103

111. நச்சினார்க்கினியர், கலித்தொகை, ப. 115

112. இரா. மோகன், பத்துப்பாட்டு (திருமுருகாற்றுப்படை), ப. 34

113. மேலது, ப. 55

114. மேலது, ப. 61

115. மேலது, ப. 74

116. அ. மா. பரிமணம், குறுந்தொகை (கடவுள் வாழ்த்து), ப. 4

117. ச. வே. சுப்பிரமணியன், அகநானூறு, ப. 86

118. நச்சினார்க்கினியர், கலித்தொகை, ப. 74

119. அ. மா. பரிமணம் (ப. ஆ.), பரிபாடல், ப. 413

120. பொ. வே. சோமசுந்தரனார், பத்துப்பாட்டு (திருமுருகாற்றுப்படை), ப. 99

121. அ. மா. பரிமணம், பரிபாடல், ப. 478

122. பொ. வே. சோமசுந்தரனார், பத்துப்பாட்டு (திருமுருகாற்றுப்படை), ப. 68

123. மேலது, ப. 76

124. அ. மா. பரிமணம் (ப. ஆ.), நற்றிணை, ப. 147

125. அ. மா. பரிமணம் (ப.ஆ.), பரிபாடல், ப. 191

126. மேலது, ப. 233

127. மேலது, ப. 236

128. மேலது, ப. 414

129. பொ. வே. சோமசுந்தரனார், பத்துப்பாட்டு (திருமுருகாற்றுப்படை), ப. 75

130. அ. அருணகிரி, இருபெருஞ்சமயங்கள், ப. 143

131. மேலது, ப. 149

132. மேலது, ப. 149

133. மேலது, ப. 151

134. மேலது, ப. 151

135. மு. சண்முகம்பிள்ளை, நிகண்டுச் சொற்பொருட்கோவை, தெய்வப்பெயர்கள், ப. 229

136. மேலது, ப. 220

137. மேலது, ப. 220

138. ஜெ. ராஜாமுகமது, புதுக்கோட்டை மாவட்ட வரலாறு, ப. 215

139. வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார், திருக்குறள், ப. 112

140. அ. ச. ஞானசம்பந்தன், தேவாரத் திருப்பதிகம், ப. 346

141. மு. சண்முகம்பிள்ளை, நிகண்டுச் சொற்பொருட்கோவை, தெய்வப்பெயர்கள், ப. 273

142. அ. மா. பரிமணம், குறுந்தொகை, ப. 472

143. ச. வே. சுப்பிரமணியன், சங்க இலக்கியம், எட்டுத்தொகை, அகநானூறு, ப. 56

144. சி. வை. தாமோதரம்பிள்ளை, கலித்தொகை, ப. 106

145. அ. மா. பரிமணம், பரிபாடல், ப. 21

146. அ. மா. பரிமணம், புறநானூறு, ப. 578

147. அ. ஆலிஸ்(உ. ஆ.), பதிற்றுப்பத்து, ப. 26

148. போ. வே. சோமசுந்தரனார் மூலமும் உரையும், பத்துப்பாட்டு (மதுரைக்காஞ்சி), ப. 84

149. இரா. மோகன், பத்துப்பாட்டு (பொருநராற்றுப்படை), ப. 96

150. அ. ஆலிஸ், புறநானூறு, ப. 75

151. அ. மா. பரிமணம், பரிபாடல், ப. 97

152. இரா. மோகன், பத்துப்பாட்டு (பொருநராற்றுப்படை), ப. 299

153. இரா. மோகன், பத்துப்பாட்டு (திருமுருகாற்றுப்படை), ப. 78

154. அ. மா. பரிமணம், பரிபாடல், ப. 44

155. மேலது, ப. 3

156. மேலது, ப. 160

157. மேலது, ப. 188

158. உ. வே. சாமிநாதய்யர், மணிமேகலை வெண்பா, ப. 12

159. மு. சண்முகம்பிள்ளை, தெய்வப்பெயர்கள், ப. 234

160. மேலது, ப. 274

161. மேலது, ப. 274

162. மேலது, ப. 234

163. அ. மா. பரிமணம், கலித்தொகை, ப. 279

164. அ. மா. பரிமணம், பரிபாடல், ப. 480

165. மயிலை சீனி. வேங்கடசாமி, பௌத்தமும் தமிழும், ப. 23

166. ஜனகன், கௌதமபுத்தர் வாழ்க்கையும் உபதேசமும், ப. 117

167. மேலது, ப. 117

168. மயிலை சீனி. வேங்கடசாமி, பௌத்தமும் தமிழும், ப. 5

169. மேலது, ப. 149

170. மேலது, ப. 150

171. சூடாமணி நிகண்டு, ப. 218

172. மயிலை சீனி. வேங்கடசாமி, பௌத்தமும் தமிழும், ப. 5

173. அ.ச.ஞானசம்பந்தம், தேவாரத் திருப்பதிகங்கள், ப. 348

174. அரசிதழ் சிறப்பு வெளியீடு, பக். 4, 13, 14, 20, 23, 24, 26

175. மயிலை சீனி. வேங்கடசாமி, பௌத்தமும் தமிழும், ப. 152

176. தமிழண்ணல், தொல்காப்பியம் (மூலமும் உரையும்), ப. 367

177. வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார், திருக்குறள், ப. 84

178. மேலது, ப. 85

179. மயிலை சீனி. வேங்கடசாமி, பௌத்தமும் தமிழும், ப. 109

180. பொ. வே. சோமசுந்தரனார், பத்துப்பாட்டு (மதுரைக்காஞ்சி), ப. 15

181. வீரசோழியம், ப. 76

182. ஜெ. ராஜாமுகமது, புதுக்கோட்டை மாவட்ட வரலாறு, ப. 249

183. மயிலை சீனி. வேங்கடசாமி, பௌத்தமும் தமிழும், ப. 110

184. மேலது, ப.110

185. அ. மா. பரிமணம், கலித்தொகை, ப. 110

186. ஜெ. ராஜாமுகமது, புதுக்கோட்டை மாவட்ட வரலாறு, ப. 249

187. அ. லெ. நடராஜன், பகவான் மகாவீரர் வாழ்க்கை வரலாறு, ப. 9

188. பா. தென்றல், காப்பியங்களில் அறமாந்தர்கள், ப. 43

189. வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார், திருக்குறள், ப. 297

190. மேலது, ப. 300

191. பா. தென்றல், காப்பியங்களில் அறமாந்தர்கள், ப. 45

192. அ. லெ. நடராஜன், பகவான் மகாவீரர் வாழ்க்கை வரலாறு, ப. 4

193. மேலது, ப. 4

194. ஜெ. ராஜாமுகமது, புதுக்கோட்டை மாவட்ட வரலாறு, ப. 164

195. மேலது, ப. 163

196. மேலது, ப. 87

197. மேலது, ப. 164

198. மேலது, ப. 164

199. மேலது, ப. 164

200. மேலது, ப. 166

201. முகமது உவைஸ் ம. (ப.ஆ.), இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு, ப. 3

202. இரா. மோகன், பத்துப்பாட்டு (மதுரைக்காஞ்சி), ப. 102

203. முகமது உவைஸ் ம. (ப.ஆ.), இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு, ப. 13

204. தமிழண்ணல் (ப.ஆ.), அகநானூறு, ப. 132

205. அ. ஆலிஸ், புறநானூறு, ப. 746

206. ம. முகமது உவைஸ் (ப.ஆ.), இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு, ப. 47

207. கம்பராமாயணம் (சுந்தரகாண்டம்), ப.

208. முகமது உவைஸ் ம. (ப. ஆ.), இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு, ப. 48

209. மேலது, ப .55

210. கலிங்கத்துப்பரணி, ப. 474

211. முகமது உவைஸ் ம. (ப. ஆ.), இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு, ப. 55

212. மேலது, ப. 55

213. மேலது, ப. 55

214. மேலது, ப. 55

215. மேலது, ப. 56

216. மேலது, ப. 47

217. மேலது, ப. 49

218. மேலது, ப. 48

219. ம. முகமது உவைஸ் (ப.ஆ.), இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு, ப. 127

220. மேலது, ப. 127

221. ம. முகமது உவைஸ் (ப.ஆ.), இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு, ப. 300

222. அஹும் அறக்கட்டளை, தீனியாத்பிரைமரி கோர்ஸ், ப. 101

223. ம.முகம்மதுஉவைஸ், இ. த. இ.வரலாறு, பா. 4:1:21

224. மேலது, ப.303

225. ம. முகமது உவைஸ் (ப.ஆ.), இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு, ப. 122

226. மேலது, ப. 123

227. மேலது, ப. 177

228. அஹும் அறக்கட்டளை, தீனியாத்பிரைமரி கோர்ஸ், ப. 85

229.Islamicoccasions.com, 99 Names of allah (Asma ul Husna)

230. ம. முகமது உவைஸ் (ப.ஆ.), இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு, ப. 198

231. மேலது, பா.8

232. ம. முகம்மது உவைஸ், இ. த. இ. வரலாறு, ப. 117

233. மேலது, ப. 116

234. மேலது, ப. 118

235. மேலது, ப. 120

236. மேலது, ப. 121

237. அஹும் அறக்கட்டளை, தீனியாத்பிரைமரி கோர்ஸ், ப.123

238. ம. முகமது உவைஸ் (ப.ஆ.), இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு, ப. 210

239. மேலது, ப. 182

240. மேலது, ப. 212

241. சூ. இன்னாசி, கிறித்தவமும் தமிழகமும், ப. 01

242. ஜெ. சூசைமாணிக்கம், திருவிவிலியம், ப. 6

243. மேலது, ப. 6

244. மேலது, ப. 6

245. மேலது, ப. 10

246. மேலது, ப. 12

247. மேலது, ப. 14

248. சூ. இன்னாசி, கிறித்தவமும் தமிழகமும், ப. 8

249. மேலது, ப. 9

250. மேலது, ப. 10

251. மேலது, ப. 10

252. க. தேவகடாட்சம், வரலாற்றில் கிறிஸ்தவம், ப. 151

253. மேலது, ப. 190

254. மேலது, ப. 195

# இயல்-6

# மக்கட் பெயர்களில் பிற பெயர்கள்

## முன்னுரை

ஒரு செல் பல பொருட்கள் தருவது போல, இம்மாவட்ட மக்கள் பெயர்களில் அஃறிணை, தெய்வம், மொழி, திரைப்படம், தலைவர்கள், வீரச்செயல் புரிந்தோர் போன்ற பல பெயர்கள் விரவி வந்துள்ளமையை இவ்வியல் தெளிவுபடுத்துகின்றது.

## இனம் தொடர்பான மக்கட் பெயர்கள்

பண்டைய இந்தியாவில் சிறுசிறு இனக் குழுக்கள் குறிப்பிட்ட புவியியல் பகுதியில் தனக்கெனத் தனித்தனி மொழிகளைக் கொண்டிருந்தார்கள். அவர்களை ஒரு பொதுவான பண்பாட்டைக் கொண்டவர்கள் எனலாம். சாதி, சமயம் இல்லாமல் இயற்கையைச் சிதைக்காமல், இயற்கையை வணங்கி, இயற்கையோடு இயைந்த தொழில்நுட்பம், வாழ்க்கை முறை ஆகியவற்றைக் கொண்டிருந்தனர். ஆண், பெண் என்ற வேறுபாடுகள் மட்டுமே இருந்துள்ளன. இதனை நல்வழி,

**"சாதியிரண் டொழிய வேறில்லை சாற்றுங்கால்"[1] (நல்வழி:2)**

என்பதன் வழி அறியமுடிகிறது. இத்தகைய ஆண், பெண் இனம் பல்கிப் பெருகியதன் விளைவால் தன்னை வேறுபடுத்துவதற்காகத் தான் செய்த தொழிலை மையமாகக் கொண்டு இனங்கள் தோன்றியதை

**"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா**
**செய்தொழில் வேற்றுமை யான்"[2] (குறள்:972)**

என்பதன் மூலம் உணர முடிகிறது. ஆரியரின் மனுதர்மம் தமிழ்நாட்டில் கால்கொண்டதன் விளைவால் நால்வருணப் பேதங்களும் அதன் வழிச் சாதிகளும் தோன்றலாயின. அத்தகையச் சாதிகளைப் பெயர்களுக்கு முன்னால் இட்டுக்கொண்டனர். தற்காலத்திலும் பெயருக்குப் பின்னால் இட்டுக் கொள்கின்றனர்.

## இனம் சொற்பொருள் விளக்கம்

'இனம்' என்பதற்குப் பல்வேறு பொருள் உள்ளன. "இனக்குழுவியல் என்னும் பொருளுடைய 'Ethnography' என்ற கிரேக்கச் சொற்களின் மூலங்களைப் பெற்றது. 'Ethnos' என்பதற்கு இனம், இனக்குழு, மக்கள் என்பது பொருள். 'graphenin' என்பதற்கு 'எழுதுவது' அல்லது வரைதல் என்பது பொருள்."[3] போன்றவற்றின் மூலம் இனம் பற்றி அறியமுடிகிறது.

## தோற்றம்

இனம் என்பது சங்க காலத்திற்கு முன்பே தோற்றம் பெற்றுள்ளது. அக்காலத்தில் தாங்கள் செய்தத் தொழிலையே இனமாகக் கொண்டுள்ளனர்.

**"கணியன் பூங்குன்றனார், கூலவாணிகன்**
**சீத்தலைச் சாத்தனார், பொன் வணிகனார்**
**மகனார் நப்பூதனார், மதுரைக் கணக்காயனார் நக்கீரனார்"**

என்னும் புலவர்களின் பெயர்களுக்கு முன் உள்ள தொழில் பெயர்கள் அவர்கள் மேற்கொண்ட தொழில்களைக் குறிக்கின்றன."[4] ஆரியர்கள் கி.மு.1500 அளவில் இந்தியாவில் குடியேறினர். அவர்களுக்கு இந்திய மக்களின் தோற்றம் உடல்நிறம், மொழி, சமயம், செயலாறுகள் அனைத்தும் வெவ்வேறாகத் தெரிந்தன. ஆயினும் இந்தியர்களுடன் கலந்து வாழத் தொடங்கினர். இதன் விளைவாக இந்தியாவில் இரு பிரிவுகள் தோன்றின. அவை "தசுயூக்கள் அல்லது தாசர்கள், ஆரியர்கள் என இரு பிரிவுகள் உருவானது."[5] இருக்கு வேதத் தொடக்க (கி.மு.1200) காலத்தில் தான் இந்திய, ஆரிய கலப்புச் செயல்பாடுகள் பெருகின. இதன் காரணமாகப் புரோகிதத் தொழிலைக் கவனிக்க 'பிரமா', போர்த் தொழில் 'சத்ரா', பிற தொழில்கள் 'விசர்' என்னும் பிரிவுகள் உருவாயின. (கி.மு.1000) நால்வருண முறை என்ற அமைப்பு உருவானதும் குறிப்பிடத்தக்கது.

கி.மு.600 க்குப் பிறகு நால்வருண அமைப்பு முறையில் செய்தொழில், மண உறவு முதலியவை தொடர்பாகக் கட்டுப்பாடுகளும் விதிமுறைகளும் ஏற்பட்டன. "சுமிருதிகளின் காலத்தில் நால்வருண அமைப்பு முறை மறைந்து பல்வேறு சாதிப் பிரிவுகள் அடங்கியச் சாதி அமைப்பு முறை தோன்றியது."[6] என்பர். இதனால் வருணங்களுக்கிடையே ஏற்பட்ட கலப்பு பல்வேறு சாதிப் பிரிவுகள் தோன்றக் காரணமாய் இருந்துள்ளது.

## இனம் பற்றி அறிஞர்கள் கருத்து

ஒரு குறிப்பிட்ட மக்கள் குழு அல்லது வட்டாரத்தில் காணப்படும். “அனைத்து வகையான மரபுகள் பற்றி மேற்கொள்ளப்படும் விளக்க முறை ஆய்வே இன வரைவியல் (Bruvand, 1986:329, ப.9)”[7]என்றும், “ஒரு குறிப்பிட்ட இனக்குழுவை அல்லது பண்பாட்டை விளக்கும் கலை அல்லது அறிவியல் இனவரைவியல் எனப்படும் (Fetterman 1989:11)”[8] என்றும், “ஏதேனும் ஒரு பண்பாட்டை பற்றி எழுதப் பெறும் வரைவு அல்லது வருணனையே இனவரைவியல் (Hersleovits 1976:8).”[9] எனவும் மொழி மதம் போன்ற பல்வேறு பண்பாட்டுக் கூறுகளுள் ஏதேனும் ஒன்றினால் பொதுவாக அடையாளப்படுத்தப்படும். இதனைக் “குறிப்பிட்ட மக்கள் பிரிவினரைக் குறிப்பது ‘இனம்’ என்பதாகும். அம்மக்கள் இனத்தின் பண்பாட்டைப் பற்றி விவரித்து எழுதுவதால் உருவாகும் படைப்பை இனவரைவியல் என்பர். (ஆ.தனஞ்செயன் 2006:3).”[10] என்றும் பல்வேறு கருத்துக்கள் உள்ளன. முன்னோர் காலத்தில் தோற்றம் பெற்ற இனம் இன்றும் சிதைவுராமல், அதன் மரபு காக்கப்படுவது இனம்.

## புதுக்கோட்டை மாவட்ட இனங்கள்

‘முன்னோர் மரபைப் பென்னே போல் போற்றுதல்’ என்ற நூற்பாவிற்கு ஏற்ப முன்னோர் வழித் தோன்றிய இனங்கள் இம்மாவட்டத்தில் அதிக அளவில் காணப்படுகின்றன. அவை, அகமுடையர், பள்ளர், கவுராநாயுடு, இசைவெள்ளாளர், வண்ணான் (மருத்துவர்), ஒட்டர், அம்பலகாரர், வேளாளர், செட்டியார், ஆண்டிக்கவுண்டர், பிள்ளைமார், குருக்கள், ராவுத்தர், பட்டாணி ராவுத்தர், கொடிக்கா வெள்ளாளர், பறையர், குறவர், கள்ளர், மறவர், கோனார், ஆசாரி, சேர்வராயர், முத்தரையர், தொண்டைமான் கள்ளர், இராஜா கள்ளர், வலையர், இடையர், உவச்சப் பட்டர், நாடார், ஆசாரி (கொல்லன்), கம்மாலர், குயவர், ஐயர், குறும்பர், வடுகர், மேளக்காரர், பறையர், கிறித்துவ பறையர், சக்கிலியர், நாட்டுக்கோட்டை செட்டி, வீரக்குடி வெள்ளாளர், படையாச்சி (வண்ணியர்) ஆகிய இனங்கள் இம்மாவட்டத்தில் வசிக்கின்றனர்.

## மக்கட் பெயர்களில் இனம்

அக்காலத்தில் செய்யும் தொழிலை வைத்து இனங்களைத் தாழ்ந்த குலம், உயர்ந்த குலம் என்ற அடிப்படையில் பிரித்துள்ளனர். பகுத்தறிவு

குன்றியிருந்த காலத்தில் இனம் (சாதி) என்பது ஒரு பெரிய சர்ச்சைக்குறியதாக இருந்தது. அக்காலத்தில் மேல்தட்டு மக்கள் என்று சொல்லக்கூடிய உயர் சாதியினர் சாதியைத் தங்கள் பெயருடன் சேர்த்துக் கொண்டிருந்தனர். சாதியைப் பெருக்குப் பின் அமைத்துச் சிறப்பு என மிகைப்படுத்திக் கருதினர். இன்றைய காலத்தில் அவை மாற்றமடைந்திருக்கின்றன. இனம் என்பது ஒரு குறிப்பிட்ட இனத்தவரின் அடையாளமே தவிர சிறப்புக் கருதியதாக அமையாது என்ற நிலை ஏற்பட்டு வருகின்றது. இதனைத் தொல்காப்பியர்,

**"சிறப்பி னாகிய பெயர்நிலைக் கிளவிக்கும்**
**இயற்பெயர் கிளவி முற்படக் கிளவார்"**[11]

என்பார். ஒருவர் தாம் பெற்ற சிறப்பைப் பெயர்ச் சொல்லுக்குப் பின் அமைத்துக் கூறமாட்டார். "சிறப்புப் பெயருக்குப் பிற்படவே இயற்பெயரை அமைத்துக் கூறுவர் முனைவர் மு.வரதராசனார், மருத்துவன், தாமோதரனார் போன்றவை."[12] தான் பெற்ற சிறப்பினால் வரும் பெயர்களை மட்டும் முன்னொட்டாக இடவேண்டும். இலக்கண மரபுப்படி சாதி என்பது சிறப்பினால் வருவது அல்ல என்பது புலனாகிறது. பெயருக்கு முன் அமைக்கப்பட்ட சாதியைப் பின்பு பெயருக்குப் பின்னால் அமைத்துக் கொண்டனர்.

உயர்தட்டு மக்கள் மட்டுமே தங்கள் பெயருக்குப் பின்னால் சாதியை அமைத்துக் கொண்டுள்ளனர் என்பது இம்மாவட்ட மக்களிடமும் காணப்படுகிறது.

**சான்றாக:** ஆபதூதாரணக் குருக்கள், வேலாயுதம் செட்டியார், அழகப்பக் கோனார், கருப்பையா தேவர், முத்தன் ஆசாரி, பெரியண்ண வேளார், ஆண்டிக் கவுண்டர், சுப்பையா அம்பளம், கிருஷ்ணசாமி நாயுடு, சையது ராவுத்தர், ஆரோக்கியம் பிள்ளை, அழகப்ப மறவர், அய்யாச்சாமி சேர்வை போன்ற பெயர்களைக் குறிப்பிடலாம்.

இத்தகைய நிலையில் மாற்றங்களைக் காணமுடிகிறது. உயர் சாதி மக்கள் மட்டும் தங்கள் பெயருக்குப் பின்னால் இட்டுவந்த நிலையில், இன்று கீழ்த்தட்டு மக்களும் தங்கள் சாதியைப் பெயருக்குப் பின்னால் இட்டுவருவதை இம்மாவட்ட மக்கட் பெயர்களின் வழிக் காணமுடிகிறது.

கீழ்த்தட்டு மக்களின் முன்னோர்கள் அடிமைகளாகவும் கூலிகளாகவும் இருந்துள்ளனர். இந்நிலைமாறி கீழ்த்தட்டு மக்கள் பெரும்பாலானோர் உயர்கல்வி கற்றோர்களாகவும், உயர் பதவி வகிப்பவர்களாகவும் இருப்பதால் முன்னோர்

வழி வந்த கீழ்தட்டுச் சாதியை இன்று சிலர் தங்கள் பெயருக்குப் பின்னால் இட்டுவருவதைக் கள ஆய்வின் வழி அறிய முடிகிறது.

**சான்றாக:** அடைக்கப்ப பள்ளன், பழனிச்சாமி பறையன், மாணிக்க குறவன் போன்றவை.

கறம்பக்குடி வட்டம் கொல்லைக் காடு என்ற ஊரில் சாதி ஆதிக்கத்தின் காரணமாக ஒருவர் தனக்கு வைக்கப்பட்ட 'சண்முகம்' என்ற பெயரை மாற்றி 'அய்யாச்சாமி' என்று மாற்றியுள்ளனர்.

## மொழி அடிப்படையில் மக்கட் பெயர்கள்

தற்காலத்தில் மொழியுணர்வு காரணமாக மிகுதியானப் பெயர்கள் இடப்படுகின்றன. தன்னுடைய மொழி மீது ஒரு சமூகம் கொண்டிருக்கும் பற்றினை இப்பெயரிடுமுறைகள் உணர்த்துகின்றன. மொழிவழிச் சிந்தனையின் விளைவாகத் தூய தமிழ்ச் சொற்களும் தமிழ் இலக்கண, இலக்கியங்கள் சுட்டும் பெயர்களும் இயற்பெயராய் அமைகின்றன. வடமொழியின் செல்வாக்கால் ஊர்ப்பெயர்களிலும், மக்கட் பெயர்களிலும் ஏற்பட்டத் தாக்கங்கள் போல தற்காலப் பெயர்களில் மொழியுணர்வு மிகுந்துள்ளது.

வடமொழிப் பெயருக்கும், தமிழ்ப் பெயருக்கும் உள்ள வேறுபாட்டினை அறியாத நிலையில் வடமொழிப் பெயரைத் தமிழ்ப் பெயர் என எண்ணி இடுவதும் உண்டு. தற்போது பெயரிடுமுறையில் ஆங்காங்கே தூயத் தமிழ்ப் பெயர்களும் இடப்படுகின்றன. இதற்குத் திராவிட இயக்கத்தினரின் பங்கும் முக்கியமானது. மொழியைப் பயன்படுத்தி ஓரளவு வெற்றியும் கண்டுள்ளனர்.

இயக்கங்களின் வாயிலாகவும் வடமொழிப் பெயர்கள் தமிழாக்கம் பெற்று வருகின்றன. வடமொழியின் ஆதிக்கத்தை எதிர்த்தலில் 'தனித்தமிழ் இயக்கம்', மறைமலைஅடிகள், பரிதிமாற்கலைஞர் ஆகியோரின் பங்கு குறிப்பிடத் தகுந்ததாகும். இவ்வியக்கத்தின் விளைவாய் வடமொழிப் பெயர்கள் தமிழாக்கம் பெற்றன. 'சூரியநாராயண சாஸ்திரி' 'பரிதிமாற்கலைஞர்' எனவும் 'சுவாமி வேதாசலம்' 'மறைமலைஅடிகள்' எனவும் மாற்றினார்கள்.

இவ்வாறு பல்வேறு இயக்கங்களாலும், தனிநபர் முயற்சியாலும் புதுமை நோக்காலும் மொழியின் அடிப்படையில் பெயர்கள் உருவாகின்றன. இப்பெயர்கள் 'தமிழ்' என்ற சொல்லாட்சியை அடியொற்றியும், இலக்கியம் சார்ந்த தமிழ்ச் சொற்களைப் பின்னணியாகக் கொண்டும் அமைகின்றன.

**சான்றாக:** தமிழ்செல்வன், தமிழ்மாறன், தமிழரசன், அமுதன், செந்தமிழ்செழியன், செந்தமிழ்ச்செல்வன், தமிழ்அருவி, தமிழ்ச்செல்வி, செந்தமிழ்செல்வி, செந்தமிழ்பாவை, தமிழரசி, தேன்மொழி, அமுதா, அமுதவள்ளி, கணிமொழி போன்றவை 'தமிழ் மொழி' தொடர்பான மக்கட் பெயர்கள் ஆகும்.

## மக்கட் பெயர்களில் அரசியல் தலைவர்

## கடையேழு வள்ளல்கள் பெயர்கள்

வளப்பமிகு தமிழகத்தை ஆண்ட வன்மை மிகு மூவேந்தர்களைப் போலவே, குன்றாப் புகழ் கொண்ட குறைவிலா நெஞ்சத்தோடு பல குறுநில மன்னர்களும் ஆட்சி புரிந்தனர். பெருஞ்சித்தனார், நத்தத்தனார் ஆகியோர் கடையேழு வள்ளல்களைப் பற்றிச் சிறப்பித்துக் கூறியுள்ளனர். கடையேழு மன்னர்களின் பெயர்கள் இம்மாவட்ட மக்கட் பெயர்களில் இடம் பெற்றுள்ளதைக் கள ஆய்வின் வழி அறியமுடிகிறது.

## கடையேழு வள்ளல்கள்

பாரி முல்லைக்குத் தேரீந்து எல்லையில்லா இன்பம் கொண்டு பறம்புப் பகுதியை ஆண்டவன். இதனைப் "பறம்பு மலையையும் அதனைச் சூழ்ந்த 300க்கும் மேற்பட்ட ஊர்களையும் பெற்ற நாட்டை ஆண்டன். கடையேழு வள்ளல்களில் பெருமைபடக் கூறப்படும். இவனே தலை சிறந்தவனாவான். முல்லைக்குத் தேர் ஈந்து எல்லையில்லா புகழ் பெற்ற இவன் நாட்டை, மூவேந்தர்கள் பொறாமைக் கொண்டு முற்றுகையிட்டனர்."[13] என்பர். இத்தகைய பறம்பு மலையில் புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள பிரான்மலைப் பகுதிகளும் உட்பட்டிருந்தன.

பறம்பையூர் என்ற வல்லின 'றகரம்' இடையின 'ரகர'மாக மாறி பரம்பையூர் என அழைக்கப்படுகிறது. இதனை "பரம்பையூர் பு.க.1029, எ:99"[14] என்பர். 'பரம்பை' மையமாக வைத்து மக்கள் பெயர்களைச் சூட்டியுள்ளனர். பரம்பாயி, பரம்பன் ஆகிய பெயர்கள் பரம்பு மலையை போற்றும் வகையில் அமைந்துள்ளன. பரம்பு மலையை ஆண்ட 'பாரி வள்ளல்' குறித்த ஊர்ப்பெயர்களையும், மக்கட் பெயர்களையும் இம்மாவட்டத்தில் காணலாம்.

**சான்றாக:** பாரிநகர், பாரியூர் போன்ற ஊர்ப் பெயர்கள். பாரி, பாரிவேந்தன் போன்ற மக்கட் பெயர்கள் முள்ளூர்ப் பகுதியை ஆண்ட காரி

என்னும் வள்ளல் பெயர் இம்மாவட்ட ஊர்களிலும் மக்கட் பெயர்களிலும் உணரமுடிகின்றன.

**சான்றாக:** காரியன், காரி, காரியப்பன் போன்ற மக்கட் பெயர்களும் முள்ளூர் என்பதால் முள்ளிப்பட்டி என்றும், காரிப்பட்டி என்றும் ஊர்ப்பெயர்கள் இம்மாவட்டத்தில் இடம்பெற்றுள்ளன.

'பொதியன்' என்று 'ஆய்' ஆண்ட மலைப் பகுதியின் பெயர்களில் மக்கட் பெயர் காணப்படுகின்றது.

சங்க காலத்திலிருந்தே மன்னர்கள் புதுக்கோட்டை மாவட்டத்தை ஆட்சி செய்து இருக்கிறார்கள். முதலில் ஆட்சி செய்தவர்கள் பாண்டியர்கள். இதன் பொருட்டு இங்குள்ள மக்கள் பாண்டிய மன்னர்களின் தலைமுறையினரின் வீரம், ஈகை, சிறப்பு, ஒழுக்கம் ஆகியவற்றைச் சிறப்பிக்கும் விதத்தில் பெயர்கள் வைத்துள்ளனர்.

## பாண்டிய நாடு

சங்க இலக்கியங்களில் புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள பல ஊர்களின் பெயர்களைக் குறிப்பிட்டுள்ளனர். இம்மாவட்டத்தின் தென்பகுதி பாண்டியப் பேரரசிலும், வடபகுதி சோழப் பேரரசிலும் உடன்பட்டிருந்தன. இதனை,

**"தென் பாண்டிக்குட்டம் குடங்கற்கா வேண்பூழி**
**பன்றியருவா வதன்வடக்கு நன்றாய்**
**சீதமலாடு புனநாடு செந்தமிழ்ச்சேர்**
**ஏதமில் பன்னிரு நாட்டெடன."**

என்பதன் மூலம் இம்மாவட்டத்தின் தென்பகுதி பாண்டியர்கள் ஆட்சி செய்த பகுதி என்பதனை அறியமுடிகிறது. பன்றி நாடு என்று சொல்லக்கூடிய புதுக்கோட்டையைக் கோனாடு, கானாடு என்று இரண்டாகப் பிரித்துள்ளனர். இந்தக் கோனாட்டின் ஒரு பகுதி ஒல்லையூர். இப்பகுதியை வெற்றி கொண்டவன். "ஒல்லையூர் தந்த பூதபாண்டியன் என்னும் மன்னன். (அகம்-25 பாடல் இவன் பாடியதாகும்). ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன் (புறம்-242), இருங்கோள் ஒல்லையாயன் செங்கண்ணனார் (அகம்-279) ஆகியோர் ஒல்லையூரைச் சேர்ந்தவர்களே."[15] இவ்வூர் இன்றையத் திருமயம் வட்டத்தில் 'ஒலியமங்கலம்' என்ற பெயரோடு விளங்குகிறது. பாண்டியர்கள் கூடல்நகரைத் தலைமையிடமாகக் கொண்டிருந்ததையும் அறியலாம். அவை,

**"வேம்பின் வழுதி கூடல்"[16] (அகம்)**

**"வளமதுரை நகர்கண்டு மற்றதற்கு மதில்வகுத்தும்"[17]**

என சின்னமனூர் பெரிய சாசனம் மூலம் அறியமுடிகிறது.

## பாண்டியர்களின் பெயர்களில் மக்கட் பெயர்கள்

பாண்டியரைப் பல பெயரிட்டு அழைத்தனர் என்பதை இலக்கியங்கள் தெரிவிக்கின்றன. அவை, "பாண்டியன், பூழியன், கடலன், மீனவன், செழியன், வழுதி, தென்னவன், கூடற்கோன், கௌரியன், திங்கட் செல்வன், தமிழ்க்காடன்."[18] எனவும் பல பெயர்களால் பாண்டியர் குறிக்கப்படுகின்றனர். சந்திர குலத்தவர் என்றும் கூறுவர்.

**"மாமலைத் திங்கள் வாழியோன்"[19]**

என்று சிலம்பு கூறுவதிலிருந்து பாண்டியர் தங்களைச் சந்திர குலத்தில் பிறந்தவர் என்று கூறிக் கொண்டதை அறியலாம். பாண்டியர் இரட்டை மீனைத் தங்கள் இலச்சினையாகக் கொண்டிருந்தனர். இத்தகையத் தனிச்சிறப்புக்களைப் பெற்றுள்ள பாண்டியர்களின் பெயர்கள் இம்மாவட்ட மக்கட் பெயர்களிலும் இடம்பெற்றுள்ளன.

**சான்று:** பாண்டியன், பாண்டி, பாண்டியராஜன், பாண்டித்துரை, பாண்டிச்செல்வம், பாண்டிமீனாள், பாண்டிச்செல்வி, பாண்டியம்மாள், பாண்டீஸ்வரி, முத்துப்பாண்டி, சரவணபாண்டி, பாண்டித்தேவர், நெடுஞ்செழியன், இளஞ்செழியன், கௌரி, கௌரிசங்கர் போன்றவை.

## புதுக்கோட்டையை ஆட்சி புரிந்த பாண்டியர்கள்

களப்பிரர்களின் ஆளுமையிலிருந்து பாண்டியன் கடுங்கோன் பாண்டிய நாட்டுப் பகுதியைக் கைப்பற்றினான். இதனை "பாண்டியன் நெடுஞ்செழியன் வேள்விக்குடி செப்பேடு இதைப் பற்றி குறிப்பிடுகிறது. கடுங்கோன் கி.பி.590 முதல் 620 வரை ஆட்சி செய்தான்."[20] என்பதன் மூலம் அறியமுடிகிறது. அரசர் பெயர்கள் பின்வருமாறு.

| வ.எண் | அரசர் பெயர் | காலம் | கல்வெட்டு |
|---|---|---|---|
| 1. | கோச்சடையன்ரணதீரன் | கி.பி.710-740 | குடுமியான் மலை, மேலைக்கோயில் |
| 2. | மாறன் சடையன் | கி.பி.765-815 | திருக்கோகர்னம், குடுமியான்மலை, நீர்பழனி, கவிர்நாடுக் கண்மாய் |
| 3. | ஸ்ரீமாற ஸ்ரீவல்லபன் | கி.பி.815-862 | சித்தன்னவாசல் ஓவியம் தீட்டப்பட்டது. |
| 4. | வரகுணவர்மன் | கி.பி.862-880 | |
| 5. | வீரபாண்டியன் | கி.பி.946-966 | |
| 6. | முதலாம் சடையவர்மன் குலசேகரப் பாண்டியன் | கி.பி.1190-1217 | இரண்டாம பேரரசின் தொடக்கம் |

"வெள்ளாற்றிற்குத் தென்மேற்குப் பகுதிகள் இவனது ஆட்சிக்குட்பட்டன. இவனது கால கல்வெட்டுகள் சுமார் எட்டு இங்குக் காணப்படுகின்றன."[21] என்பதன் மூலம் அறியலாம்.

7. முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன்

இவன் கி.பி.1216-1239 வரை ஆட்சி புரிந்துள்ளான். "இவன் சோழ நாட்டை வெற்றி கொண்டு நெல்லூர் வரை பாண்டியரின் புகழ் பரப்பினான். இவனது கல்வெட்டு சோனாடு கொண்டருளிய தேவா் எனக் கூறுகிறது."[22]

8. இரண்டாம் சடையவர்மன் குலசேகரன். இவன் ஒரு சில மாதங்களே ஆண்டதாகவும் அவனது கல்வெட்டோ மற்ற செய்திகளோ கிடைக்கவில்லை எனவும் கே.வி.இராமன் கூறுகிறார். (ஜெ.ராஜா முகமது ப.36).

9. மாறவர்மன் இரண்டாம் குலசேகரன், கி.பி.1237.

இவன் முதலாம் மாறவர்மன், இரண்டாம் சடையவர்மன் காலத்திலும் இணைந்து ஆட்சி செய்துள்ளான்.

10. இரண்டாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன், கி.பி.1238

“இவனது காலத்தில் ஹோய்சாளரின் செல்வாக்குப் பாண்டிய மண்டலத்தில் ஓங்கியிருந்தது. இவனது கல்வெட்டு ஏழு இங்கு காணப்படுகிறது.”[23]

11. முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியன் கி.பி.1251-1271

“இவனது காலத்து கல்வெட்டு பதினைந்து புதுக்கோட்டையில் காணப்படுகின்றன.”[24]

12. சுந்தர பாண்டியன் மற்றும் விக்ரம் பாண்டியன்

கி.பி.1283-1296 ஒரே சமயத்தில் பாண்டிய சகோதரர்கள் பலர் ஆண்டு வந்ததை முஸ்லீம் வரலாற்று ஆசிரியர் உசாம் குறிப்பும் இலங்கை வரலாற்று நூலான மகாவம்சமும் தெரிவிப்பதாக ஜெ.ராஜா முகமது தமது நூலில் கூறியுள்ளார்.

13. முதலாம் மாறவர்மன் குலசேகரபாண்டியன் கி.பி.1268-1311

14. இரண்டாம் சடையவர்மன் வீரபாண்டியன் கி.பி.1296-97

15. மூன்றாம் சடையவர்மன் சுந்தர பாண்டியன் கி.பி.1303

ஆகிய பதினைந்து பாண்டியர்களின் தலைமுறையினர் ஆட்சி செய்திருக்கிறார்கள் என்பதை அறியமுடிகிறது.

பாண்டிய மன்னர்கள் நீதிமுறையில் தவறவில்லை. தவறினாலும் ‘யானோ அரசன்! யானே கள்வன்’ என்று கூறி நீதி முறை பிழைக்க உயிர்விட்டதும், பொற்கை பூண்டதும் பாண்டியரின் வரலாறு. ஆட்சியில் சத்தியம், தர்மம் நீதி, நியாயம் பவனி வந்ததைக் காணமுடிகிறது. இதன் அடிப்படையில் சடையப்பன், சடையன், பம்பையன், வீரபாண்டியன், குணசேகரன், ராஜசேகரப் பாண்டியன், இளமாறன், சுந்தர பாண்டியன், சுந்தரம், சுந்தர், விக்ரம், விக்ரம பாண்டியன், விக்ரம் போன்ற பாண்டியர்களின் பெயர்களை மக்கட் பெயர்களில் காணமுடிகிறது.

## சோழர்கள் நாடு

முடிவுடை மூவேந்தரில் சோழர்கள் இடையில் வைத்துப் போற்றப்படுகின்றனர். அவர்கள் ஆட்சி புரிந்த பகுதி காவிரி, பெண்ணை, பாலாறு, வெள்ளாறு, கொள்ளிடம் ஆகிய ஆறுகள் பாயும் கவின்மிகு பகுதியாகும். இவர்கள் புதுக்கோட்டையின் வட பகுதியை ஆண்டனர் என்பதைப் பழம் பாடல் மூலம் அறியலாம். இதனை,

**"வடக்கு நன்றாய்**
**சீதமலாடு புனநாடு செந்தமிழ்ச்சேர்"**

என்றும்,

**"கடல்கிழக்குத் தெற்கு கரைபொரு வெள்ளாறு**
**குடதிசையிற் கோட்டைக் கரையாம் வடதிசையில்**
**ஏணாட்டுப் பண்ணை யிருப்பது நாற்காதம்**
**சோணாட்டுக் கொல்லையெனச் சொல்"[25] (சங்க காலச் சோழர்கள்)**

என்றும் சோழர்கள் ஆட்சி செய்த நாடுகள் போற்றப்படுகிறது. "சோழநாடு பல ஆறுகள் பாய்ந்து விளைச்சலை அதிகரித்ததால், அதனை நீர்நாடு, புனல்நாடு என்றும் சிறப்பித்துக் கூறுவர்."[26]

## சோழர் பெயர்கள்

பாண்டிய மன்னர்களுக்கு வழங்கப்பட்ட குலப் பெயர்களைப் போல் சோழ மன்னர்களுக்கும் குலப் பெயர்கள் வழங்கியுள்ளனர். அதனை, "கிள்ளிவளவன், சென்னி, செம்பியன்"[27] போன்ற பெயர்கள் எடுத்துக்காட்டுகின்றன. இது தொடர்பான பெயர்களில் மக்கட் பெயர்களையும் காணமுடிகிறது.

**சான்றாக:** செம்பன், செம்பையா, செம்பாயி, செம்பி ஆகிய பெயர்களில் காணமுடிகின்றன.

## மக்கட் பெயர்களில் சோழ மன்னர்கள் பெயர்கள்

சோழ மன்னர்கள் தமது ஆட்சிக் காலங்களில் புதுக்கோட்டைப் பகுதியில் ஆட்சியைப் பரப்பியுள்ளனர். பல இடங்களில் கோயில் எழுப்பியும் கொடைகள் வழங்கியும் சிறப்பித்துள்ளனர். "கி.பி.9ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் சோழர் ஆட்சிக்குப் புத்துயிர் அழித்தவன் விஜயாலயன் ஆவான்."[28]

இவன் புதுக்கோட்டையில் சில பகுதிகளில் கோயில்கள் எழுப்பியும் புதுப்பித்தும் உள்ளான். "நார்த்தாமலையிலுள்ள விஜயாலயச் சோழீச்சுரம் கோயில் முத்தரையர்களால் கட்டப்பட்டது என்று கல்வெட்டுகள் குறிப்பிட்டாலும் விஜயாலயச் சோழனால் புதுப்பிக்கப்பட்டிருக்க வேண்டும். ஏனெனில் இக்கோயில் இவன் பெயராலேயே வழங்கப்பட்டு வருகிறது."[29] என்பதன் வழி காணமுடிகிறது. இதன் சிறப்புக் கருதி இம்மாவட்ட மக்கள் சோழர்கள் பெயர்களைச் சூட்டியுள்ளனர்.

**சான்றாக:** விஜயாலயன், விஜயன், விஜய் விஜயா, விஜி போன்ற பெயர்கள். விஜயாலயனுக்குப் பின் அவன் மகன் முதலாம் ஆதித்தன் ஆவான். அவன் பாண்டியரையும் பல்லவரையும் வென்று தனது நாட்டை புதுக்கோட்டை வரை விரிவு படுத்தினான். இவனது ஆட்சி ஆண்டுகளைக் குறிப்பிட்ட கல்வெட்டுகள் இங்குக் காணப்படுகின்றன. இவன் வீரத்தின் சிறப்பால் இன்றும் அவன் பெயர் மக்கள் மத்தியில் காணப்படுவதை அறியலாம்.

**சான்றாக:** ஆதி, ஆதித்தியன், ஆதிலெட்சுமி ஆகிய பெயர்களைக் காணலாம். முதலாம் பராந்தகன் ஆட்சியின் சிறப்பை அவன் எழுப்பிய கோயில்களாலும், பொறித்த கல்வெட்டுக்களாலும் காணமுடிகிறது. "திருமயம் வட்டம் சித்தூரிலுள்ள வாகீஸ்வரர் கோயிலும் முதலாம் பராந்தகன் காலத்தைச் சோந்தவை யாகும். பரகேசரி என்னும் பட்டத்துடன் பராந்தகனின் கல்வெட்டுகள் இம்மாவட்டத்தில் சுமார் இருபத்தி இரண்டு இடங்களில் காணப்படுகின்றன."[30]

இப்பகுதியில் மேலும் இராஜகேசரி, கண்டராதித்தன், பரகேசரி, அரிஞ்சயன், இராஜகேசரி இரண்டாம் பராந்தகன், சுந்தரசோழன், பரகேசரி இரண்டாம் ஆதித்தன், பரகேசரி உத்தமச்சோழன், ராஜேந்திரச் சோழன், வீரசோழ இளங்கோவேள் ஆகியோர் ஆட்சி செய்துள்ளனர். இவர்களது ஆட்சியாண்டுகளில் சோழர்களுக்கும் கொடும்பாளூர் வேளிர்களுக்கும் சோழருக்கும் முத்தரையருக்கும், வேளிருக்கும் இடையே நெருங்கிய அரசியல் மண உறவுகள் இருந்தன என்பதைக் குறிக்கும் மன்னர்கள் காலத்துக்குட்பட்ட கல்வெட்டு. கொடும்பாளூர், குடுமியான்மலை, வெள்ளனூர், திருவேங்கைவாசல் ஆகிய இடங்களில் காணப்படுகின்றன என்று ஜெ.ராஜா முகமது கூறுகிறார்

(ஜெ.ராஜா முகமது, புதுக்கோட்டை மாவட்ட வரலாறு, ப.22, 1998). இவர்கள் பெயர்களில் மக்கட் பெயர்களையும் காணலாம்.

**சான்றாக:** சுந்தரம், ஆதித்தன், உத்தமன், ராஜேந்திரன், இளங்கோவன், இளங்கோ ஆகிய மக்கட் பெயர்களையும் குலோத்துங்க சோழப்பட்டணம், சுந்தம், சுந்தரசோழபுரம், மங்கல நல்லூர் (எ) சோழ சிகாமணி சதுர்வேதி மங்கமலம் (க.ஆண்டு.1311 க.எண்:4200) ஆகிய ஊர்ப் பெயர்களையும் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன.

சோழப் பேரரசில் புகழ் பெற்ற இராசராச சோழன் புதுக்கோட்டைப் பகுதி முழுவதும் ஆட்சிப் புரிந்தான். இவனது ஆட்சியாண்டில் இப்பகுதியிலிருந்த நிலங்கள் முழுவதும் அளக்கப்பட்டுப் பிரிக்கப்பட்டன. ஆட்சி அமைப்பு, வளர்ச்சி சபை அமைப்பு, அரசியல் அமைப்பு போன்றவற்றைக் குறிப்பிடும் கல்வெட்டுக்கள் புதுக்கோட்டை மாவட்டத்தில் காணப்படுகின்றன. “இவையணைத்தும் இவனது நான்காவது ஆட்சியாண்டிலிருந்து இருபத்தி எட்டாவது வரை உள்ள காலங்களில் வெட்டப்பட்டவையாகும்.”[31] இவன் தொடர்பானப் பெயர்கள் மக்கட் பெயர்களில் காணப்படுகிறது.

**சான்றாக:** தமிழகத்தில் கல்வியறிவு, விழிப்புணர்வு போன்ற காரணங்களால் பல இனங்கள் தங்களைச் சேரர் வம்சாவழி, சோழர் வம்சாவழி, பாண்டியர் வம்சாவழி, முத்தரையர், பல்லவர் வம்சாவழி என அழைப்பதைப் பெருமையாகக் கருதுவதால் அம்மன்னர்களின் பெயர்களைத் தங்கள் பிள்ளைகளுக்குச் சூட்டுவதும் நடைமுறையில் உள்ளது. இராஜன், இராஜா, இராஜராஜன், இராஜாராம், இராஜராஜ சோழன் போன்ற பெயர்கள்.

## களப்பிரர்

தமிழகத்தைச் சுமார் 300 ஆண்டுகள் ஆட்சி செய்து இருண்ட கால ஆட்சியாளர்கள் என்று குறிப்பிடப் பெற்ற களப்பிரர்கள் புதுக்கோட்டைப் பகுதியிலும் ஆட்சி செய்துள்ளனர். “களப்பிரர் பற்றியோ அவர்களது ஆட்சி பற்றியோ முழுமையான விவரங்கள் கிடைக்காதக் காரணத்தால் தமிழக வரலாற்றில் இக்காலத்தை ஒரு இருண்ட காலமாகவே கருதுகின்றனர்.”[32] என்பர்.

இக்காலத்தில் பாண்டிய நாட்டில் சமணத்தின் செல்வாக்கு அதிகரித்திருந்தது என்பதனை அறியமுடிகிறது.

### களப்பிரர் நாடு

இவர்கள் கன்னட நாட்டைச் சேர்ந்தவர்கள் என்ற கருத்து ஏற்றுக் கொள்ளத்தக்கதாக உள்ளது. இதற்குப் பல்வேறு இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. அவை "பெரியபுராணம், கல்லாடம், தமிழ் நாவலர் சரிதை, யாப்பெருங்கலம் போன்ற தமிழ் இலக்கியச் சான்றுகளும், கன்னட நாட்டில் சிரவணபெலகோலா போன்ற பகுதிகளில் கிடைத்துள்ள கல்வெட்டுகளும் மேற்சொன்ன கருத்திற்கு வலுவூட்டுகின்றன."[33] ஆக களப்பிரர் கன்னட நாட்டைச் சேர்ந்தவர்கள் என்பதை உறுதியளிக்கிறது.

### களப்பிரர் சமயம்

களப்பிரர் வைதீக மதங்களுக்கு எதிராகவும், பௌத்த, சமண மதங்களுக்கு ஆதரவாகவும் செயல்பட்டதன் காரணமாகத் தொன்றுதொட்டு வந்த பல சமயக் கோட்பாடுகள் பாதிக்கப்பட்டன. பாண்டி நாட்டில் சமணத்தின் செல்வாக்கு அதிகரித்தது என்பதை அறியலாம். பாண்டியர்கள் சமண ஆச்சாரியர்களாகவும் இருந்ததை இம்மாவட்டக் கல்வெட்டுகள் மூலம் அறிய முடிகிறது. "தர்மதேவர், கனகசந்திரா என இரண்டு சமண ஆச்சாரியர்களையும் இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது."[34] இதன் வழி 'தேவர்' என்ற சொல் பாண்டியரைக் குறிக்கும் சொல் ஆகும். 'சந்திரர்' என்ற சொல் பாண்டியர்களின் குலத்தைக் குறிக்கும் சொல் என்பதனைச் சிலம்பு வழி அறியலாம்.

**"மாமலைத் திங்கள் வாழியோன்"[35] (சிலம்பு.)**

என்பதன் மூலம் களப்பிரர்களின் ஆட்சியில் பாண்டியர்களின் செல்வாக்கால் பௌத்த, சமணம் செல்வாக்குப் பெற்றிருந்ததைக் காணமுடிகிறது.

### களப்பிரர் பெயர்

இவர்களின் வரலாறு முழுமையாகக் காணப்படாததால் அவர்களின் பெயர்களும் மிகுதியாகக் கிடைக்கவில்லை. எனினும் புதுக்கோட்டையை ஆட்சி செய்ததற்கு அடையாளமாக ஒரு சில மன்னர் பெயர்களும், ஊர்ப் பெயர்களும் காணப்படுகின்றன. புதுக்கோட்டை மாவட்டம் பொன்னமராவதிக்கு அருகிலுள்ள

பூலாங்குறிச்சியில் இவர்களது (களப்பிரர்களது) கல்வெட்டுக்களைக் கண்டுபிடித்துள்ளனர். "இக்கல்வெட்டின் காலம் கி.பி.422 எனக் கருதப்படுகிறது. கோச்சேந்தன் கூற்றம் என்னும் மன்னது பெயரில் இக்கல்வெட்டு உள்ளது. ஒல்லையூர் கூற்றம் (திருமயம் வட்டம், ஒலியமங்கலம் பகுதி) முத்தூற்றுக் கூற்றம் (அறந்தாங்கி, திருவாடனை பகுதி) ஆகிய பகுதிகள் அவனது ஆளுகைக்குட்பட்டிருந்ததாக இக்கல்வெட்டுச் செய்தி"[36] மூலம் அறியமுடிகிறது. இது தொடர்பான ஊர்ப் பெயர்கள் பின்வருமாறு,

**சான்றாக:** இன்றைய தாஞ்சூர் என்று அழைக்கப்படும் ஊர். அன்று 'சேந்தவன்மங்கலம்' (க.எ.1366, க.எ.456) என்ற பெயரில் அழைக்கப்பட்டது. மேலும் அறந்தாங்கி வட்டம் காரமங்கலம் என்று அழைக்கப்படும் ஊர், அன்று 'சேந்தவன்மங்கலம்' (க.1498, எண்:822) என்பதைத் கல்வெட்டுக்கள் மூலம் அறிய முடிகிறது.

களப்பிரரின் தாக்கம் ஊர்ப்பெயர்களில் ஏற்படுத்தியதைப் போல மக்கட் பெயர்களில் ஏற்படுத்தவில்லை. மக்களின் பெயர்களில் களப்பிரர் பெயர்கள் இட்டுவந்ததாகத் தெரியவில்லை என்பதைக் கள ஆய்வின் வழி அறியமுடிகிறது.

## பல்லவ மன்னர்களின் பெயர்கள்

தொண்டை மண்டலத்தில் கி.பி.575இல் களப்பிரரை வென்று பல்லவரின் ஆட்சியை நிறுவியவர் சிம்மவிஷ்ணுவின் பரம்பரையினர் ஆவார். கி.பி.7 ஆம் நூற்றாண்டின் முடிவில் காவிரிக் கரையின் வடக்குப் பகுதி வரை பல்லவப் பேரரசின் ஆளுமைக்குட்பட்டது. ஆனால் "புதுக்கோட்டைப் பகுதியில் கி.பி.8 ஆம் நூற்றாண்டில் ஆட்சி செய்து வந்த பல்லவ மன்னர்களின் கல்வெட்டுகள் மட்டுமே கிடைக்கின்றன."[37] என்பதன் மூலம் கி.பி.8 ஆம் நூற்றாண்டிலே பல்லவர் ஆட்சி இம்மாவட்டத்தில் நிகழ்ந்திருக்கக் கூடும் என்பதை அறியமுடிகிறது.

## பல்லவ மன்னர்கள்

இன்றையப் புதுக்கோட்டைப் பகுதியை ஆண்ட பல்லவ மன்னர்கள் பின் வருமாறு.

| வ.எண் | மன்னர்கள் | காலம் | கல்வெட்டு |
|---|---|---|---|
| 1. | சிம்மவிஷ்ணு | கி.பி.575 | - |
| 2. | இரண்டாம் நந்திவர்மன் | கி.பி.710-765 | குன்னாண்டார்கோயில், ராசாளிப்பட்டி |
| 3. | நந்திவர்மன் | கி.பி.775-826 | குன்னாண்டார்கோயில், மலையடிப்பட்டி, |
| 4. | நிருபதுங்கவர்மன் | கி.பி.849-875 | நார்த்தாமலையில் |
| 5. | மகேந்திரவர்மன் | - | குடவரைக்கோயில்கள் |

இம்மன்னர்களின் வீரத்தையும் தீரத்தையும் பறைசாற்றும் வகையில், இம்மன்னர்களின் பெயர்களை மக்கட் பெயர்களில் காணமுடிகிறது.

**சான்றாக:** விஷ்ணுப்பிரியா, விஷ்ணு, சிம்மன், சிம்மாயி, நந்தினி, நந்தக்குமார், மகேந்திரன் ஆகிய பெயர்களைக் குறிப்பிடலாம்.

## குடவரைக்கோயில்கள்

பல்லவர்கள் தங்களது அரசியல் திறனை மட்டும் காட்டவில்லை. தங்களது கலை வண்ணத்தைக் காட்டுவதில் போட்டியிட்டுக் கொண்டு பல புதிய பாணிகளை உள்ளடக்கியக் கலைச்சின்னங்களை உருவாக்கியிருக்கின்றனர். அழியும் பொருட்களில் கோயில் கட்டுவதை விடுத்துப் பாறையைக் குடைந்து கோயில் எடுக்கும் பழக்கத்தை முதன் முதலில் மகேந்திரவர்மப் பல்லவன் தமிழகத்தில் அறிமுகம் செய்தான் என்று ஜெ.ராஜாமுகமது தமது நூலில் கூறியுள்ளார். (ஜெ.ராஜா முகமது, புதுக்கோட்டை மாவட்ட வரலாறு, ப.16). புதுக்கோட்டை மாவட்டத்தில் பதினைந்து குகைக்கோயில்கள் உள்ளன. ஓரடுக்குக் கொண்ட விமானம், சிறிய கோபுரங்களைக் (கல்லினால்) கட்டும் பழக்கம் ஏற்படுத்தப்பட்டது. இதுபோல கலைப்பாணியில் காலத்தால் முந்திய சிறிய ஓரடுக்கு விமானம் கொண்ட கோயில்கள் காளியாப்பட்டி, ஏனாதி ஆகிய இடங்களில் காணப்படுகின்றன. இத்தகையப் பெருமைக்குரியவர்கள் பல்லவர்கள்.

## முத்தரையர்கள் பெயர்கள்

புதுக்கோட்டை வரலாற்றில் முத்தரையர் குறிப்பிடத்தக்கவர் ஆவார். புதுக்கோட்டையில் பெருநிலக் கிழார்களாக வாழ்ந்து வந்த முத்தரையர். பெரும் மன்னர்களாகவும் வாழ்ந்து வந்துள்ளனர். இவர்களது புகழுக்குச் சான்றாகப் புதுக்கோட்டைப் பகுதியிலுள்ள இவர்கள் காலத்துக் கோயில்களும், கலைச் சின்னங்களும் அதிகளவில் கிடைக்கின்றன. இவர்களின் சிறப்பைக் கண்டுணர இம்மாவட்ட மக்கட் பெயர்கள் துணைசெய்கின்றன.

## முத்தரையர் பெயர் விளக்கம்

முத்தரையர் ஆரம்பக் காலத்தில் பாண்டிய நாட்டு முத்துக்குளிக்கும் துறைமுகப் பகுதிகளில் ஆட்சி செய்திருக்க வேண்டும். ஏனெனில் முத்து+அரையர்=முத்தரையர் (அரையர் என்றால் நாடாள்வோர் என்று பொருள்). அரையனா யமருளகமாள்வதற்கு-தேவாரம்-648-4) முத்தரையர் மாறன், மீனவன், தென்னவன் போன்ற பாண்டியரின் குடிப்பெயர்களைப் பெற்றிருந்த செய்தியைப் புதுக்கோட்டைக் கல்வெட்டுகள் தெரிவிப்பதாக ஜெ.ராஜா முகமது தமது நூலில் கூறியுள்ளார். (ஜெ.ராஜா முகமது, புதுக்கோட்டை மாவட்ட வரலாறு, ப.18). இதன் மூலம் முத்தரையர் பாண்டியரின் கிளைக்குடியினாக இருந்திருக்க வேண்டும். தங்கள் அரசியல் மேலாண்மையாளர்களானப் பல்லவரின் பட்டப் பெயர்களான விடேல், விடுகு, பெரும்பிடுகு, மார்ப்பிடுகு, பகாப்பிடுகு போன்ற பட்டங்களைத் தங்களது பெயர்களுடன் சேர்த்து வைத்துக் கொண்டனர். இதன் மூலம் முத்தரையர் பாண்டிய மற்றும் பல்லவர்களுக்கு உட்பட்ட சிற்றரசர்கள் என்பது புலனாகிறது.

## முத்தரையர் பெயர்கள்

முத்தரையர்களில் ஆண்கள் பெண்களும் சேவைகள் செய்திருக்கிறார்கள். அவர்களில் குறிப்பிடத் தக்கோர் பின்வருமாறு

சாத்தன்மாரன்-தாய் பெரும் பிடுகு பெருந்தேவி

இவர் திருமயம் “சத்தியமூர்த்தி குகைக்கோயிலை எட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் புதுப்பித்து அதன் பராமரிப்பிற்கு நன்கொடைகள் வழங்கிய செய்தியை இங்குள்ளக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.”[38] என்பதன் மூலம்

அறியமுடிகிறது. இவர் தொடர்பான பெயர்கள் மக்கட் பெயர்களில் காணப்பகிறது.

**சான்றாக:** திருமாறன், இளமாறன், சாத்தன், சாத்தப்பன், மகா, மகாலெட்சுமி, தேவி போன்ற பெயர்கள். பின்னர் குவான் சாத்தன் (எ) விடேல் விடுகு வாகீஸ்வரருக்கு (சிவன்) குகைக் கோயில் எடுப்பித்து நன்கொடைகள் வழங்கியுள்ளான். அவனது மகன் சாத்தம் பழியிலி என்பான். அவனது பெயராலேயே 'பழியிலி ஈச்சுரம்' என்ற பெயரிலையே அக்கோயில் விளங்குகிறது.

சாத்தம்பூதி என்பவன் 'விஜயாலய சோழிச்சுரம்' என்னும் கோயிலை எடுப்பித்துள்ளான். இவன் சிறப்புக் கருதி மக்கள் தங்கள் குழந்தைகளுக்குப் பெயர்களாக இட்டுள்ளதை அறியமுடிகிறது.

**சான்றாக:** சாத்தம்மை, சாத்தி, பூவி போன்ற பெயர்கள். உத்தமதானி (இளங்கோ முத்தரையர்) என்பானது பெயரிலேயே உத்தமதானீஸ்வரர் என்னும் கோயிலைக் கீரனூரில் அமைத்துள்ளான்.

இவன் தொடர்பான மக்கட் பெயர்கள் வருமாறு, உத்தமி, உத்தமன், இளங்கோ, இளங்கோவன் போன்ற பெயர்கள் இவ்வாறு முத்தரையர்கள் கி.பி.ஒன்பதாம் நூற்றாண்டில் முதற்பகுதியில் இம்மாவட்டத்தை ஆண்டுள்ளதை மக்கட் பெயர்கள் வழி அறியமுடிகிறது.

தற்பொழுது முத்தரையர்களின் வழித் தோன்றல்கள் புதுக்கோட்டைப் பகுதிகளில் பரவலாக இருந்து வருகின்றனர்.

**சான்றாக:** முத்தரையர் என்ற ஓர் இனம் இம்மாவட்டத்தில் அதிகளவில் காணப்படுகின்றது.

## தொண்டைமான் குறித்த பெயர்கள்

புதுக்கோட்டையை ஆண்ட தொண்டைமான் மன்னர்களின் ஆட்சி கி.பி.1639 முதல் 1948 வரை ஆகும். தொண்டைமான் மன்னர்கள் தொன்மையானதொரு பரம்பரையினர் ஆவார். ஆயினும் அவர்கள் தொன்றுதொட்டு வந்த அரச மரபினர் அல்ல. அவர்கள் தமது வீரத்திலும், தீரத்திலும் நாடாள்வோராக உயர்ந்தவர்கள் ஆவர்.

## தொண்டைமான்களின் தோற்றம்

இவர்கள் பழங்காலத்தில் தமிழகத்தில் வட எல்லையான வேங்கடம் எனப்படும் திருப்பதி மலைப்பகுதியில் வாழ்ந்தவர்கள். இவர்கள் கள்ளர் மரபினரின் வழி வந்தவர்கள். இது தொடர்பாகக் கள்ளர் மரபிலும் இன்றும், பல்வேறு கிளைகள் உள்ளன. அவை தொண்டைமான் கிளை, ராஜா கிளை என்பனவாகும்.

## தொண்டைமான்களின் வீரம், பட்டமும்

தொண்டைமான்கள் யானைக்குப் பயிற்சியளிப்பதில் சிறந்து விளங்கியவர்கள். கி.பி.1639இல் மூன்றாம் விஜயநகர பேரரசரான வெங்கிடராயர் தமது பரிவாரங்களுடன் ராமேஸ்வரம் யாத்திரை மேற்கொண்டிருந்தார். அப்போது அவரது யானை மதம் பிடித்தது. யாராலும் கட்டுக்குள் கொண்டுவர முடியவில்லை. அப்போது ஆவுடைய தொண்டைமான் விரைந்து சென்று அந்த யானையை அடக்கி அரசர் முன் நிறுத்தினார். தொண்டைமான் வீரத்தைப் பாராட்டி அவருக்கு அம்பாரி யானை, முரசு யானை, சிங்கமுகப் பல்லாக்கு ஆகியவற்றை வழங்கியதோடு 'ராய ராகூத்த ராய வச்சிடு, ராய மன்னிடு ராய' என்ற பட்டத்தையும் வழங்கினார். பின்னர் தொண்டைமான்களின் வீரத்தைப் பாராட்டி தஞ்சை விஜயராகவ நாயக்கர் "விஜய" என்ற பட்டத்தையும் வழங்கினார். இப்பட்டத்தோடு கி.பி.1661 முதல் சிறப்பான ஆட்சி நடத்தினர். அன்று முதல் இன்று வரை இத்தகையப் பட்டங்களுடன் திகழ்கின்றனர். இப்பட்டங்களை மக்கட் பெயர்களிலும் ஊர்ப் பெயர்களிலும் காணலாம்.

**சான்றாக:** விஜயன், விஜயா, ராயப்பன், ராயப்பன் குமார் போன்ற மக்கட் பெயர்களும், ராயாபுரம், விஜயரகுநாதபுரம் போன்ற ஊர்ப் பெயர்களும் ஆகும்.

## மன்னர்களின் தலைமுறைகள்

சுல்தான்கள் தங்களது செல்வாக்கை நிலைநிறுத்த முயற்சித்த காலத்தில் தொண்டைமான்கள் தஞ்சை அச்சுத விஜயராகவ நாயக்கரின் படையுடன் சேர்ந்துப் பல போர்களில் கலந்து கொண்டு வீரத்தையும் திறமையையும் காட்டினர். இதனைப் பாராட்டிய தஞ்சை நாயக்கர் 'பெரிய ராமபாணம்' என்னும் விருதுவாளும், விலையுயர்ந்த வைர மாலையும் அவருக்கு அளித்ததாக ஜெ.ராஜா முகமது கூறுகிறார். (ஜெ.ராஜா முகமது புதுக்கோட்டை

மாவட்ட வரலாறு, ப.62) வீரம் பொருந்தியத் தொண்டைமான்களின் ஆட்சி காலங்கள் பின்வருமாறு,

## அரசர்கள் காலம்

| | | |
|---|---|---|
| 1. ரகுநாதராயத் தொண்டைமான் | - | 1661 |
| 2. விஜயரகுநாதராயத் தொண்டைமான் | - | 1730-69 |
| 3. ராயரகுநாதத் தொண்டைமான் | - | 1769-89 |
| 4. ராஜா விஜய ரகுநாதத் தொண்டைமான் | - | 1789-1807 |
| 5. ராஜா விஜயரகுநாதத் தொண்டைமான் | - | 1807-25 |
| 6. ரகுநாதத் தொண்டைமான் பகதூர் | - | 1825-1839 |
| 7. ராஜா ராமச்சந்திரத் தொண்டைமான் பகதூர் | - | 1839-86 |
| 8. மார்த்தாண்ட பைரவ தொண்டைமான் | - | 1886-1928 |
| 9. ராஜா ராஜகோபால தொண்டைமான் | - | 1928-48 |

இம்மன்னர் புதுக்கோட்டை மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்வதிலும், அறப்பணி, ஆன்மீகப் பணியிலும் ஆர்வம் காட்டியுள்ளார். ஆங்கிலேயர் நம் நாட்டை அடிமைப்படுத்திய காலத்தில் இம்மாவட்டத்திற்கு ஒரு தீங்கும் வந்ததில்லை. ஆங்கிலேயருக்குப் போதுமான படைகளைத் திரட்டி அனுப்பினார்கள். அவர்களின் ஆலோசனைகளையும் கேட்டு நடந்தார்கள். தொழில், கல்வி, திறமை, அரசாட்சி முறை ஆகியவற்றைத் திறம்படப் பெற்றுத் திகழ்ந்தவர்கள் தொண்டைமான்கள்.

மக்கள் மத்தியில் நீங்கா இடம்பிடித்த மன்னர்களின் பெயர்களை இம்மாவட்ட மக்கள் முன், பின் ஒட்டுகள் சேர்த்து இன்றும் வழங்கி வருவதை மக்கள் பெயர்களின் வழி கண்டு கொள்ளமுடிகிறது. அவை, ரகுராம், ரகுவரன், ரகுநாதன், ரகுபதி, விஜயன், விஜயநாதன், விஜயபாஸ்கர், விஜயா, விஜயலெட்சுமி, விஜயகாந், ராஜா, கார்த்திக்ராஜா, அழகுராஜா, அழகுராணி, ராணிமேரி, ராணி, ராமச்சந்திரன், மார்த்தாண்டன், வைரவன், ராஜகோபாலன், ராஜலெட்சுமி, ராஜரெத்தினம் ஆகியனவாகும்.

## புதுக்கோட்டை மாவட்ட அரசியல் தலைவர்கள் பெயர்கள்

இவ்வையகம் தன் நலம் கருதாது, பிறர் நலம் கருதி வாழும் பெரியோர்களைக் கடவுளாகப் போற்றும். புதுக்கோட்டையில் பிறந்து மக்களுக்காக அரும்பாடுபட்டோர் அரசியல் தலைவர்களாகவும் இருந்திருக்கிறார்கள். அவர்களின் பெயர்களை மக்கள் தங்கள் குழந்தைகளுக்குப் பெயராகச் சூட்டி மகிழ்கின்றனர் என்பதைக் கள ஆய்வின் மூலம் அறியமுடிந்தது.

### தலைவர்கள்

புதுக்கோட்டைக்குப் பெருமை சேர்க்கும் வகையில் அரணாக அமைந்தவர்கள் இருவர். அதில் தீரர் சத்தியமூர்த்தி, மற்றொருவர் மருத்துவர் முத்துலெட்சுமி ரெட்டி ஆவார்.

### டாக்டர் முத்துலெட்சுமி ரெட்டி

'மங்கையராக பிறப்பதற்கே நல்ல மாதவன் செய்திடல் வேண்டுமம்மா' என்ற கவிமணியின் வாக்கிற்கு ஏற்ப தமிழன்னையின் மாதவப் புதல்வியாகத் தோன்றிய டாக்டர் முத்துலெட்சுமி ரெட்டி, புதுக்கோட்டையில் பிறந்தவர். மங்கையர் குல மாணிக்கமாக டாக்டர் முத்துலெட்சுமி இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்த மிகப் பெரிய சமூகசேவகி ஆவார். நலிந்த ஆதரவற்ற பெண்களுக்காகத் தனது வாழ்கையை அற்பணித்துக் கொண்டவர். இவரின் சிறப்பை இம்மாவட்ட மக்கள் போற்றுகின்றனர்.

### தோற்றம்

புதுக்கோட்டை மன்னர் கல்லூரியின் முதல்வராகப் பணியாற்றிய நாராயணசாமி அய்யர். இசைக் கலையில் புலமை வாய்ந்த சந்திரம்மா என்ற தம்பதியருக்கு மகளாக டாக்டர் முத்துலெட்சுமி 1886-ஆம் ஆண்டு ஜீலை மாதம் 30-ம் நாள் புதுக்கோட்டையில் மலர்ந்தார்.

## படிப்பு

'அடுப்பூதும் பெண்களுக்குப் படிப்பெதற்கு' என்று கருதிய அக்காலச் சமுதாயத்தில் எதிர்நீச்சல் போட்டுத் தனது பள்ளிப் படிப்பை, புதுக்கோட்டை பாலையா பள்ளியிலும், இராணியார் உயர் நிலைப் பள்ளியிலும் டாக்டர் முத்துலெட்சுமி முடித்தார். சென்னைப் பல்கலைக்கழகத்தில் மருத்துவக் கல்வியைத் தொடர்ந்தார். பின்னர் இந்தியாவிலேயே மருத்துவக் கல்வியில் பட்டம் பெற்ற முதல் பெண்மணி என்ற சிறப்பைப் பெற்றார்.

## சமூகத் தொண்டு

திறமையான மருத்துவர் என்ற பெயர் பெற்ற போதும் இவரது மனம் சமூக சேவையில் அதிக நாட்டம் கொண்டது. "கைம்பெண்கள், ஆதரவற்ற குழந்தைகள், ஆதரவற்றப் பெண்கள் ஆகியோர்படும் அல்லல் இவரது மனத்தை உறுத்தியது. அதன் பயனாக 1930இல் 'அவ்வை இல்லம்' என்ற நிறுவனத்தை ஏற்படுத்தினார். இந்த இல்லம் இன்று ஆதரவற்றோரின் சரணாலயமாகத் திகழ்கிறது."[39] என்பதை உணரமுடிகிறது.

கொடுமையான புற்றுநோயிலிருந்து மக்களைக் காப்பாற்ற வேண்டும் என்ற விழுமிய நோக்கத்துடன் "1936இல் இதற்கென ஒரு பெரும் இயக்கத்தையே நடத்தினார். இவரது முயற்சியின் பயனாக சென்னை அடையாற்றில் முன்னாள் பாரதப்பிரதமர் பண்டித நேரு அவர்களால் அடிக்கல் நாட்டப்பட்டு 1954இல் செயல்படத் துவங்கியது. இன்று ஆசியாவிலேயே புற்றுநோய் மருத்துவத்தில் புகழ்மிக்க ஒரு மருத்துவமனையாக இது திகழ்கிறது."[40] இது முத்துலெட்சுமி ரெட்டி, மனித இனத்திற்கு விட்டுச்சென்றுள்ள மிகப் பெரிய நினைவுச் சின்னமாகும். 1929இல் சட்டசபையின் துணைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அதன் பயனாக தேவதாசிகள், பாலியல் விவாகம், பெண்கள் கோயிலுக்கு அர்ப்பணிக்கப்படுவதைத் (பொட்டுக் கட்டுதல்) தடை செய்யும் சட்டத்தைக் கொண்டு வந்தார். 1930இல் மகாத்மா காந்திஅடிகள் ஒத்துழையாமை இயக்கப் போராட்டங்களின் போது எதிர்ப்புத் தெரிவித்துத் தனது சட்டசபை உறுப்பினர் பதவியை விட்டுவிலகினார். இத்தனைச் சிறப்புக்களையும் தன்னகத்தே கொண்டு அர்ப்பணித்தவர்.

## அரசு வழங்கிய சிறப்புக்கள்

இவரது நினைவாக புதுக்கோட்டையிலுள்ள மாவட்ட அரசு மருத்துவமனைக்கு ‘டாக்டர் முத்துலெட்சுமி ரெட்டி அரசு மாவட்டத் தலைமை மருத்துவமனை’ என தமிழக அரசு பெயர் சூட்டியிருக்கிறது. இந்திய அரசு இவருக்குப் ‘பத்மபூஷன்’ விருது வழங்கிக் கௌரவித்துள்ளது. 28.07.87இல் நூற்றாண்டு விழாவைத் தமிழக அரசு கொண்டாடியது. இம்மாவட்ட மக்கள், அவரின் அறப்பண்பு, வீர, தீரச் செயல்கள் தம் குழந்தைக்கு வரவேண்டும் என்பதற்காக அவரின் பெயரை முன், பின் ஒட்டுக்கள் சேர்த்துப் பெயராக இட்டு வருகின்றனர்.

**சான்றாக:** முத்துலெட்சுமி, முத்து, முத்துக்கண்ணு, செல்லமுத்து, முத்துச்செல்வி, முத்துமீனாள், முத்துச்செல்வம், முத்தழகு, முத்துச்சேர்வை போன்றப் பெயர்கள் வழி கண்டுகொள்ளப்படுகின்றன.

## தீரர் சத்தியமூர்த்தியின் தோற்றம்

முன்னோரது பூர்வீகம் ஆவுடையார் கோயிலை அடுத்த செம்மணாம்பொட்டல் என்னும் சிற்றூறாகும். அங்கிருந்து திருமயம் வட்டத்தில் தஞ்சம் புகுந்து 19.08.1887 இல் சுந்தரசாஸ்திரி வழக்கறிஞர், தாயார் சுப்புலெட்சுமி அம்மையார் ஆகியோருக்கு நன் மகவாகப் பிறந்தார். தீரர் சத்தியமூர்த்தி தம் இளம் வயதிலேயே தந்தையை இழந்துள்ளார். தாயாரின் பெரும் முயற்சியால் வளர்க்கப் பெற்றவர் ஆவார்.

## தீரர் சத்தியமூர்த்தியின் படிப்பு

தனது தாயாரின் பெருமுயற்சியால் கீரனூரிலும் புதுக்கோட்டையிலும் பள்ளிப் படிப்பை முடித்துள்ளார். பின்னர் புதுக்கோட்டை மன்னர் கல்லூரியிலும், சென்னை சட்டக் கல்லூரியிலும் பயின்று வழக்கறிஞரானார். தனது மாணவப் பருவத்திலேயே நமது நாட்டின் விடுதலை இயக்கங்களில் பங்கு கொண்டார். தனது வழக்கறிஞர் தொழிலைக் கவனியாது தேசிய இயக்க நடவடிக்கைகளில் தனது கவனத்தைச் செலுத்தியுள்ளார்.

## தீரர் சத்தியமூர்த்தியின் சமூகத்தொண்டு

நாட்டிற்காகவும் நாட்டு மக்களுக்காகவும் தன்னையே அர்ப்பணித்துக் கொண்ட சத்தியமூர்த்தி விழிப்படைந்த பாரத மக்களின் மீது ஆங்கிலேய அரசு பல்வேறு அடக்குமுறைகளை அவிழ்த்துவிட்டதில் “ஜாலியன் வாலாபாக் படுகொலைச் சம்பவங்கள். மக்கள் மத்தியில் பெரும் வெறுப்பை ஏற்படுத்தியது.”[41] இதனைக் கட்டுப்படுத்த நாடாளுமன்றத்திற்குப் பல குழுக்கள் இங்கிலாந்து சென்றது. அதில் காங்கிரஸ் மகாசபையின் சார்பில் பண்டித மதன்மோகன் மாளவியா தலைமையில் தீரர் சத்தியமூர்த்தி செயலாளராகச் சென்றார். “1920ஆம் ஆண்டு இங்கிலாந்திலிருந்து நம் நாடு திரும்பியதும் தனது வழக்கறிஞர் தொழிலை விடுத்துக் காங்கிரசின் முழுநேரத் தொண்டரானார்.”[42] இதன் பயனால் சென்னை ராஜதானி என்று அழைக்கப்பட்டவை தமிழ்நாடு, கேரளம், ஆந்திரம், கருநாடகம் ஆகும். இவற்றில் 1923இல் சென்னை மாநில சட்டசபை உறுப்பினர் ஆனார். பின் காந்திஜியின் ஒத்துழையாமை இயக்கத்தில் பங்கு கொண்டு தடையை மீறி தேசியக் கொடியை ஏற்றியதற்காக ஆறு மாதம் சிறை தண்டனை அடைந்தார். பின் அந்நியத் துணிகள் விற்கும் கடைகளின் முன்பு மறியல் செய்ததற்காக எட்டு மாதம் சிறைத் தண்டனை அடைந்தார். 1940இல் தனிநபர் சத்தியாகிரகப் போராட்டத்தில் கலந்ததற்காக ஒன்பது மாதம் சிறை தண்டனை அடைந்தார். முடிவில் ஒரு சிறைக் கைதியாகவே தன் மரணத்தையும் தழுவிக் கொண்டார். இவ்வாறு நாட்டிற்காகவும், மக்களுக்காகவும் செய்த தொண்டு எண்ணிலடங்காதவை.

## அரசு வழங்கிய பாராட்டு

இவர் 1939இல் சென்னை மேயராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார். அப்போது சென்னை நகரின் குடிநீர் தேவையைப் பூர்த்தி செய்யும் நடவடிக்கையாகப் பூண்டி நீர்த்தேக்கத் திட்டத்தைக் கொண்டுவந்தார். அதன் பெயரில் “இவரது நினைவாக பூண்டி நீர்த்தேக்கதிற்கு சத்தியமூர்த்தி சாகர் என்று பெயரிடப்பட்டுள்ளது.”[43]

இவரின் புகழ் பரவ புதுக்கோட்டையிலும் திருமயத்திலும் அவரின் திருவுருவச் சிலைக்கு முன்னால் பாரத பிரதமர் ராஜீவ்காந்தி அவர்களால் திறந்து வைக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

திருமயத்தில் தமிழக அரசு, நூலகத்திற்கு இவரது பெயரையே வைத்துள்ளது. தீரர் சத்தியமூர்த்தியின் தியாகத்திற்குப் புதுக்கோட்டை மாவட்ட

மக்கள் தங்கள் குழந்தைகளுக்கு அவரின் பெயரைச் சூட்டிப் பெருமையடைகின்றனர். ஊர்களுக்கும் அவரின் பெயாரைச் சூட்டியுள்ளனர். திருமயத்தில் இன்றும் அவரின் பெயரில் அமைத்த தெரு, சாலை உள்ளன. அவை, சத்தியமூர்த்தி தெரு, சத்தியமூர்தி சாலை, சத்தியமூர்த்தி நகர் என்று அமைந்துள்ளதைக் காணலாம்.

**சான்றாக:** சத்தியமூர்த்தி, சத்தி, சக்திவேல், சத்தியபிரியா, சத்தியா, சத்தியசுந்தரி, மூர்த்தி

என சத்தியமூர்த்தி என்ற சொல்லை பின் ஒட்டுகள் சேர்த்து மக்கட் பெயர்கள் வழங்கிவருவதை இன்றும் காணமுடிகிறது.

## தற்கால அரசியல் தலைவர்களில் மக்கள் பெயர்கள்

இந்திய விடுதலை அடைவதற்கு முன்பும், பின்பும் பல்வேறு தலைவர்கள் வரலாற்றில் முக்கிய இடம் பெற்றுள்ளனர். இவர்களைப் போற்றும் வண்ணமாகவும் வீரவணக்கத்தின் அடையாளமாகவும், அவர்களின் பெயர்களைத் தங்களின் குழந்தைகளுக்கு மக்கள் சூட்டி மகிழ்ந்தனர். இப்பெயர்கள் 'இந்திய தேசியத் தலைவர்கள்' எனவும் 'தமிழக அரசியல் தலைவர்கள்' எனவும் 'அயல்நாட்டுத் தலைவர்கள்' எனவும் பாகுபாடு செய்யப்பட்டுள்ளன.

## இந்திய தேசியத் தலைவர்கள்

இந்திய விடுதலையின் விடிவெள்ளியாகத் திகழ்ந்தவர். தேசத்தந்தை மகாத்மா காந்தியடிகள். இவருக்குப் பல வழிகளிலும் உதவியாக நின்று சுதந்திர இந்தியாவின் முதல் பிரதம மந்திரியாக உயர்ந்தவர் பண்டித ஜவகர்லால் நேரு. விடுதலை வீரர்களான சுபாஷ் சந்திரபோஸ், பாலகங்காதரதிலகர், பகவத்சிங் போன்றோர் இந்திய வரலாற்றில் சிறப்பிடம் பெற்றவர்கள். இவ் வீரத்தியாகிகளைப் போற்றும் முறையில் மிகுதியான மக்கள் பெயர்கள் அமைந்துள்ளன.

**சான்றாக:** காந்தி, நேரு, ஜவகர், சுபாஷ், சந்திரபோஸ், போஸ், கங்காதரன், பகவத்சிங், சுபாஷ் ஆகியோர்.

இப்பெயர்கள் மாவட்டமெங்கும் மிக அதிக அளவில் காணப்படுகின்றன. இம்மாவட்டத்தின் ஊர்களும் காந்திநகர், காந்தி பூங்கா, நேரு நகர், ஜவகர் நகர், போஸ் நகர் போன்ற பெயர்களில் அமைந்துள்ளன.

## மக்கள் பெயர்களில் தமிழக அரசியல் தலைவர் பெயர்கள்

இந்தியா சுந்திரம் அடைந்த பிறகு தமிழ்நாடு அமைச்சரவையில் முக்கிய இடம் பெற்ற முதல்வரின் பெயர்கள் ஆங்காங்கே மக்கட் பெயர்களாய் விளங்குகின்றன. 1967-இல் சென்னை மாகாணத்திற்குத் தமிழ்நாடு எனப் பெயர் சூட்டி தமிழகத்தில் ஆட்சிக்கு வந்த திராவிடக் கட்சிகள் மக்களிடையே தமிழ் உணர்வையும், இன உணர்வையும் அரசியல் விழிப்புணர்ச்சியும் ஏற்படுத்தின. தனி நபர் துதியிலும், அரசியல் இயக்கங்களில் சிலர் ஈடுபட்டதாலும் பெயரிடுமுறையில் மொழிப்பற்றும் இனவுணர்வும் தலைவர் புகழ் போற்றும் பண்பும் மேலோங்கின. இவற்றுள் அரசியல் இயக்கங்களின் தலைவர்கள் பெயரை இடுவது புதுமையாகக் கருதப்பட்டது. குறிப்பிட்ட இயக்கங்களில் புகழ் பெற்றவர்களின் பெயர்களும், இயற்பெயர்களாய் அமைந்தன.

**சான்றாக:** காமராஜ், அண்ணாத்துரை, கருணாநிதி, இராமச்சந்திரன், அன்பழகன், நெடுஞ்செழியன், மதியழகன், ஜெயலலிதா, ஸ்டாலின், ஜானகி போன்ற பெயர்களைக் காணலாம்.

## மக்கட் பெயர்களில் அயல்நாட்டுத் தலைவர்கள் பெயர்கள்

'திரைகடல் ஓடியும் திரவியம் தேடு' என்ற ஔவையின் வாய்மொழிக் கேற்ப, இம்மாவட்டத்தில் வாழும் மக்கள் தங்கள் வாழ்வாதாரத்தைப் பெருக்கிக் கொள்வதற்காகப் பல்வேறு நாடுகளுக்குச் செல்கின்றனர். பின் அங்குள்ள நாடுகளின் தூய்மைகள், ஆட்சிமுறைகள் ஆகியவற்றைக் கருத்தில் கொண்டு. அந்நாட்டின் தலைவர்களின் பெயர்களைத் தங்கள் குழந்தைகளுக்குப் பெயர்களாக இட்டுவருகின்றனர்.

**சான்றாக:** சாமுவேல், லெனின், கென்னடி, ஸ்டாலின் போன்ற பெயர்களான மலேசியாவின் முதல்வர் 'சாமுவேல்' ஆவர். ரஷ்யாவின் மாபெரும் தலைவராக விளங்கிய லெனினும், அமெரிக்காவின் முன்னாள் ஜனாதிபதி 'கென்னடி' ஆகியோர் உலக அளவில் புகழ்பெற்ற தலைவர்கள்.

இவர்களின் உயர்ந்த கொள்கைகளையும், இலட்சியங்களையும் மனத்தில் எண்ணி மக்களுக்கு இயற்பெயர்களாய் இடுகின்றனர்.

## திரைப்படம் தொடர்பான மக்கள் பெயர்கள்

நம் நாட்டில் செய்தித் தொடர்புச் சாதனங்களின் வளர்ச்சியால் பழக்க வழக்கங்களில் பெரிய மாற்றம் ஏற்பட்டுள்ளது. இவற்றுள் திரைப்படம், வானொலி, தொலைக்காட்சி, இதழ்கள் முதலியவை முக்கியப் பங்காற்றுகின்றன. இச்சாதனங்களால் பாமரமக்களும் அறிவியலின் வளர்ச்சியை நுகரமுடிகிறது. இதன் ஒரு பகுதியாகப் பெயரிடுமுறையில் புதுமைப் போக்கு உண்டாயிற்று. திரைப்படத்தில் வருகின்ற கதாநாயகர்கள், கதாநாயகிகள், பாடகிகள், இசையமைப்பாளர்கள் ஆகியோர் மக்களிடையே எளிதாகப் புகழடைகின்றனர். திரைப்படத் துறையினர் காலத்தின் வளர்ச்சிக்கேற்றவாறு புதுப்புதுப் பெயர்களில் தோன்றுவதால், அப்பெயர்கள் மக்களிடையே எளிதாகச் சென்றடைகின்றன. மக்கள் போலச் செய்யும் மரபில் புதுமை நோக்கம் ஒன்றையே மனத்தில் எண்ணி இவ்வாறான பெயர்களைத் தங்கள் குழந்தைகளுக்குச் சூட்டுகின்றனர்.

**சான்றாக:** சிவாஜிகணேசன், கமலஹாசன், ரஜினிகாந், நாகேஷ், சுரேஷ், சுரேந்தர், சுரேஷ்குமார், கார்த்திக், பிரசாத், விஜய், ராமராஜ், விஜயகாந், சாவித்திரி, பத்மினி, விஜயா, மனோரமா, ஸ்ரீவித்யா, ரேவதி, ராதிகா, ஸ்ரீதேவி, லைலா, ரேகா, சித்ரா, அனுராதா, சுசிலா, இளையராஜா, பாலசுப்பிரமணியன், ரஹ்மான்

என திரைப்படத்தின் தாக்கத்தால் திரைப்பட நடிகர்கள் தொடர்பான பெயர்கள் அதிக வரவேற்பைப் பெற்றுத் திகழ்கின்றன.

## மக்கட் பெயர்களில் இதிகாச வீரர்கள் பெயர்கள்

மகாபாரதமும், இராமாயணமும் வழிவழி வரும் செவிவழிக் கதைகளால் மக்களிடையே அழியாப் புகழ்பெற்று விளங்குகின்றன. இராமன் தன் தேவியோடு இம்மாவட்டத்தின் வழியாக இலங்கை சென்றமையால் இந்நிகழ்வினை ஒட்டி ஊர்ப்பெயர்களும் மக்கட் பெயர்களும் மிகுதியாக அமைந்துள்ளன. இராமாயண கதாப்பாத்திரங்கள் தொடர்பான மக்கட் பெயர்கள் பின்வருமாறு, ராமன், சீதா, ஜானகிராமன், சீதாராமன், லெட்சுமணன், பரதன், ஜனகன் போன்ற பெயர்கள் இம்மாவட்ட மக்களிடம் விரவிக் காணப்படுகின்றன. இரட்டையாகப் பிறக்கும் குழந்தைகளுக்கு இரண்டும் ஆணாக இருந்தால் ராமன், லெட்சுமணன் என்றும்,

ஆணும் பெண்ணுமாகப் பிறந்தால் ராமலிங்கம் (ராமன்), லெட்சுமி போன்ற பெயர்களை இம்மாவட்ட மக்கள் சூட்டியுள்ளனர்.

மகாபாரதம் தொடர்பான கதாப்பாத்திரங்களின் பெயர்கள் இம்மாவட்ட கோயில்களிலும் மக்கட் பெயர்களிலும் இடம்பெற்றுள்ளன. வல்லத்திரா கோட்டை என்ற ஊரில் 'தருமர் கோயிலில்' தருமர் மூலவராக காட்சியளிக்கிறார். இங்குள்ள மக்களுக்குப் பாரத மாந்தர் பெயர்கள் அதிக அளவில் சூட்டப்பட்டுள்ளன.

**சான்றாக:** தருமன், தர்மதுரை, தர்மராஜன், பாஞ்சாலி, அர்சுணன், விஜயன், சகாதேவன், நகுலன், கர்ணன், பலராமன், கிருஷ்ணன், கண்ணன் போன்ற மக்கட் பெயர்கள் ஆகும்.

## தொகுப்புரை

- ❖ அட்டவணை இனத்தவர்கள் பொருளாதாரத்தில் குன்றி அரசு உதவிபெறும் இனத்தவர் என்ற நிலையிலிருந்து முன்னேறி இன்று அவர்களும் நாட்டின் பொருளாதாரத்தில் உயர்ந்தவர்களாக இருக்கின்றனர்.

- ❖ கல்வி, தொழில், பொருளாதாரம் ஆகியவற்றில் வளர்ச்சியடைந்திருந்தாலும் தங்கள் சாதியைப் பெயருக்குப் பின்னால் பெரும்பாலோனோர் இட்டுள்ளனர்.

- ❖ பழங்காலத்தில் வடமொழிப் பெயருக்கும் தமிழ்ப் பெயருக்கும் உள்ள வேறுபாட்டினை அறியாத நிலையில் மக்கள், பெயர்களை இட்டு வந்துள்ளனர். இந்நிலையை மாற்றியதில் திராவிட இயக்கத்தினரின் பங்கு குறிப்பிடத்தக்கதாக உள்ளது. இதன் வளர்ச்சியைப் புதுக்கோட்டை மாவட்ட மக்கட் பெயர்களின் வழிக் காணமுடிகிறது.

- ❖ குறுநில வேந்தர் தொடங்கித் தற்கால அரசியல் தலைவர்கள் வரை அவர்களின் ஆட்சித் திறம், வீரம், கொடை, புகழ் போன்றவற்றைப் போற்றும் விதத்தில் அவர்களின் பெயர்களை இம்மாவட்ட மக்கட் தங்கள் குழந்தைகளுக்குச் சூட்டியுள்ளனர்.

❖ 'திரைகடல் ஓடியும் திரவியம் தேடு' என்ற அடிப்படையில் இம்மாவட்ட மக்கள் வெளிநாடுகள் சென்று பொருள் தேடுவதோடு மட்டுமல்லாது அங்குள்ள பழக்கவழக்கம், கலாச்சாரம் போன்றவற்றில் விருப்புற்று அங்கு ஆட்சிபுரியும் தலைவர்களின் பெயர்களைத் தங்கள் குழந்தைகளுக்கு இட்டு வருகின்றனர்.

❖ திரைப்படம், தனிமனித வாழ்கையை மாற்றி அமைக்கும் ஆற்றல் கொண்டது. திரைப்படத்தில் நடிக்கக்கூடிய கதாப்பாத்திரங்களின் மெய்ப்பாடுகளில் தன்னை அற்பனித்துவிடும் ரசிகர்கள் காலப்போக்கில் அவர்களின் பெயர்களைத் தங்கள் குழந்தைகளுக்கு இட்டுவருவதை மிகுதியாகக் காணமுடிகிறது.

❖ இதிகாசங்களையும் மனிதர்களையும் பிரிக்க இயலாது. வாழ்வியலை நெறிப்படுத்தும் ஆற்றல் இதிகாசத்திற்கு மட்டுமே உண்டு. அதன் காரணமாக அதில் இடம்பெற்றுள்ள மாந்தர்களின் பெயர்களைக் கோவில்களுக்கும் மனிதர்களுக்கும் இட்டுள்ளதை ஆய்வின் வழி அறிந்துகொள்ள முடிகிறது.

## சான்றெண்விளக்கம்

1. மு. வ. நெல்லையப்பா, நீதிநூல்.பத்து, ப. 66
2. மு. வரதராசன், திருக்குறள் தெளிவுரை, ப. 197
3. இ. புவியரசு, இனவரைவியல் நோக்கில் மகாபாரதம், ப. 6
4. ஆறு. இராமநாதன், நாட்டுப்புறப் பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல், ப. 30
5. இராசமாணிக்கனார், வாழ்வியற் களஞ்சியம், ப. 349
6. மேலது, ப. 350
7. சி. புவியரசு, இனவரைவியல் நோக்கில் மகாபாரதம், ப. 9
8. மேலது, ப. 9
9. மேலது, ப. 9
10. மேலது, ப.9
11. தமிழண்ணல், தொல்காப்பியம், மூலமும் கருத்துரையும், ப. 145

12. மேலது, ப. 145

13. அ.சுவாமிநாதன், சங்க கால வரலாறு, ப. 179

14. ஜெ.ராஜாமுகமது, பு.மா.வரலாறு, ப. 27

15. மேலது, ப. 11

16. அ. ஆலிஸ், அகநானூறு, பா. 94

17. அ. சுவாமிநாதன், சங்க கால வரலாறு, ப. 158

18. மேலது, ப. 158

19. மேலது, ப. 158

20. ஜெ. ராஜாமுகமது, பு. மா. வ. , ப. 15

21. மேலது, ப. 36

22. மேலது, ப. 36

23. மேலது, ப. 36

24. மேலது, ப. 39

25. அ. சுவாமிநாதன், சங்க கால வரலாறு, ப. 169

26. மேலது, ப. 169

27. மேலது, ப. 169

28. ஜெ. ராஜாமுகமது, பு. மா. வரலாறு, ப. 21

29. பதிவு எண்:1901, புதுக்கோட்டை மாவட்ட நாட்டுப்புறத் தெய்வங்கள்-ஓர் ஆய்வு, ப. 15

30. ஜெ. ராஜாமுகமது, பு. மா. வரலாறு, ப. 22

31. ப. எண்:1901, புதுக்கோட்டை மாவட்ட நாட்டுப்புறத் தெய்வங்கள்-ஓர் ஆய்வு, ப. 16

32. ஜெ. ராஜாமுகமது, பு.மா.வரலாறு, ப. 14

33. மேலது, ப. 14

34. மேலது, ப. 164

35. புலியூர்கேசிகன், சிலப்பதிகாரம், பா. மாமலைத்திங்கள்

36. ஜெ. ராஜாமுகமது, பு. மா. வரலாறு, ப. 15

37. மேலது, ப.16

38. மேலது, ப. 19

39. மேலது , ப. 174

40. மேலது, ப. 174

41. மேலது , ப. 169

42. மேலது, ப. 170

43. மேலது, ப. 171

